ஸ்ரீ துர்க்கை அம்மன் துணை

© Res : 6430076 © Shop : 8281327

# தனலக்ஷ்மி  சாரீஸ்

## உயர்தர சுங்குடி தயாரிப்பாளர்

*உயர்ந்த தரத்துடன் குறைந்த விலையில் கிடைக்கும்.*

நாங்கள் 100's Bazar quality, 100's special, 120 Superior quality ஆகியவை அதிக கெட்டி சாயத்துடன் தயார் செய்கின்றோம். இதனால் குறைந்த விலையுள்ள புடவையும் நீடித்து உழைப்பதற்கு உத்தரவாதம் தருகிறோம். காட்டன் புடவை நிறம் மங்கி விடுவதற்கு முக்கிய காரணம்:

சாயம் குறைவாக கொடுப்பதால் . அதனால் நாங்கள் கெட்டி சாயத்துடன் மதுரை சுங்கிடி புடவைகள், பேன்ஸி பத்திக் பிரிண்ட்ஸ் ஆகியவை தயார் செய்கிறோம். 120 Superior quality நல்ல தரத்துடன் குறைவான விலையில் விற்பனை செய்கிறோம்.

எங்களிடம் 6 கெஜம், 7 கெஜம், 9 கெஜம், 10 கெஜம் அதிக அளவில் தயார் செய்வதால் அதிக varities கிடைக்கும். தனலட்சுமி தேவேந்திரா சாரீஸ், High quality with blows Bathik Sarees, Mercerised Cotton with Jari and thread work and with rich pallu also avilable. மற்றும் Banthini prints, Gold print, Latest Screen printing designs, Block prints, Chudithar sets, Apoorva printed polycot, Screen printed polycot, Block printed polycot, Chettynadu Sarees, Fancy Pollachi Cotton, Negamam Cotton, Mangalagiri Cotton, Bengal Cotton, Silk Cotton, Guntur Sarees, Rasipuram Cotton, Bangalore printed Silks and Polysilk Latest arrival Periya palayam cotton Karishma Sarees, Surat Synthetic Sarees, Printed Bengal Cotton Sarees are available.

புதிதாக குறைந்த எடையுள்ள 6 கெஜம், 9 கெஜம் புடவைகள் தயார் செய்கிறோம். இது விலையும் மிகக் குறைவாகவும் நல்ல தரத்துடனும் இருக்கும். மற்றும் சேலம் வேஷ்டிகள், டவல்கள், மேட்சிங் ப்ளவுஸ்கள், உயர்தர ஈரோடு காட்டன், Semi Gadwal கிடைக்கும். பட்டுப் புடவை போன்ற தோற்றம் கொண்ட உயர்ரக கைத்தறி காட்டன் புடவை with rich pallu மற்றும் ordinary Pallu. உயர்தர காட்டன் நூலால் தயாரிக்கப்படுகிறது.

அமைதியான சூழல், திருப்தியான வாடிக்கையாளர் சேவை, car parking வசதி. நியாயமான விலையில் எல்லா புடவைகளுக்கும் உத்திரவாதம் உண்டு. Stock clearance Sale for Ranee Sarees upto 10% Discount. கம்பெனியில் தயாராகும் பொழுது ஏற்படும் சிறிய கோளாறு உள்ள புடவைகள் Discountல் கிடைக்கும்.

**நெ. 1, கோபாலகிருஷ்ண ரோடு (பாண்டி பஜாரிலிருந்து டாக்டர் நாயர் ரோடுக்கு திரும்பியவுடன் இரண்டாவது இடதுபுற சாலை, தி.நகர், சென்னை– 17)**

***Bus No - 9A,10,47A, 47D (Power office Bus stop. Dr. Nair road)***

**Our Coimbatore branch**

P.R. Shanthi, No.15, Siva Sakthi Colony,
Thondamuthur Road, Vadavalli, Coimbatore 641 041.
© 424981

## காதில் விழுந்தவை :



●● சமீபத்தில் சென்னைக் கடற்கரையில் தமுமுகவின் பொதுக் கூட்டத்தில் கணிசமான அளவில் முஸ்லிம் பெண்களும் பங்கேற்றது குறித்து கவலையுற்றிருக்கிறது ஆளும் கட்சி வட்டாரம். "பெண்கள் அதிக அளவில் பங்குபெற வேண்டும்" என்று முன்னதாகவே கூட்ட அமைப்பாளர்களிடம் ஜெயலலிதா கண்டிஷன் போட்டிருந்தாராம். இதற்கிடையில் பா.ஜ.க.- தி.மு.க. கூட்டணியை கண்டித்துப் பேசும்போது கை தட்டி ஆரவாரித்த கூட்டம், ஜெயலலிதா டைகர் மலையை இந்தியா கைப்பற்றியதைச் சொல்லி, 'ஜெய் ஜவான்' சொல்லச் சொன்னபோது, கூட்டம் மிகக் குறைந்த அளவில் 'ரியாக்ட்' செய்ததைக் கண்டு அதிர்ச்சியடைந்தார்கள் பத்திரிகையாளர்கள். பின்னர் இதுபற்றி அமைப்பாளர்களிடம் கவலையுடன் கேட்க, "இதைப் பெரிதுபடுத்த வேண்டாம்; கூட்டத்தினரின் ஆரவாரத்தில ஜெ. பேசியது அவர்கள் காதில் சரியாக விழவில்லை!" என்று சொன்னார்களாம்.

●● தி.மு.க. கூட்டணிக் கட்சிகளுக்குள் தொகுதிப் பங்கீடு என்பது மிகவும் சவால்கள் நிறைந்த பணியாக இருக்கும் என்கிறார்கள். த.மா.கா. மூன்றாவது அணி அமைப்பதில் உறுதியாக இருப்பதால், உற்சாகமாக இருக்கிறது தி.மு.க. அணி. அதே சமயம் எந்தவித மனத்தாங்கலும் இல்லாமல் தொகுதிப் பங்கீடுகள் நடக்க வேண்டும் என்றும் கருதுகிறார்கள். "வடக்குப் பகுதியை பா.ம.கவும், தெற்குப் பகுதியை மதி.மு.கவும் மேற்குப் பகுதியை பா.ஜ.க. + தரா.காவும் கேட்டால் நாங்கள் வங்கக் கடலில்தான் போட்டியிட வேண்டும்" என்று தமாஷாகச் சொன்னார் ஒரு தி.மு.க. பிரமுகர். "ஜெயித்த தொகுதிகளில் நாங்களே நிற்போம்" என்பது அந்தந்தக் கட்சிகளின் விருப்பமாக இருக்கலாம். ஆனால் கூட்டணி சேர்வதால் கிடைக்கும் பலன்கள் எல்லாக் கட்சிகளுக்கும் சமமாக இருக்க வேண்டும். அதன் காரணமாக கூட்டணிக் கட்சிகள் தாங்கள் ஜெயித்த ஒன்றிரண்டு தொகுதிகளை விட்டுக் கொடுக்கவும் தயாராக இருக்க வேண்டும்" என்கிறார் அந்தப் பிரமுகர்.

## ஜெ தேர்தல் பிரசார ரகசியம் என்ன?

●● "தாம் 43 நாட்கள் தேர்தல் பிரசாரப் பயணம் செல்வதை அட்வான்ஸாகவே ஜெ. அறிவித்தது, ஸ்பெஷல் கோர்ட்டுகளில் நடக்கும் வழக்குகளில் ஆஜராகாமல் இருப்பதற்காகத்தான்!" என்று ஆளும் கட்சிக்கு ஆதரவான பிரமுகர்கள் அறிக்கை விட்டுக் கொண்டிருக்கிறார்கள். இதில் ஓரளவு உண்மை இருந்தாலும், 'ஜெ'வின் ஜாதகப்படி ஆகஸ்ட் ஒன்றாம் தேதியே கிளம்பி விட வேண்டும்' என்று நாள்குறித்துக் கொடுத்தது அவரது ஜோதிடர்கள்தானாம். இந்த முறை தேர்தல் பிரசாரத்தின் போது சசிகலா உடன் செல்வாரா என்பது குறித்து அதிமுக. வட்டாரத்தில் விசாரித்தபோது, "சான்ஸ் குறைவுதான். ஜெயா தொலைக்காட்சியைத் தொடங்க வேண்டியிருப்பதால் சசி மேடம் கொஞ்சம் பிஸியாக இருக்காங்க" என்கிறார்கள். இந்த நிலையில் ஜெயா தொலைக் காட்சிக்கு ஆதரவுக்கரம் - குறைந்தபட்சம் தேர்தல் முடியும் வரை நீட்ட வேண்டாம் என்று ஆளும் கட்சிப் பிரமுகர்கள், போலீஸ், கேபிள் ஆபரேட்டர்களை நச்சரித்து வருகிறார்களாம்!

— சஞ்சயன்

கல்கி இன்டர்நெட் முகவரி : www.kalkiweekly.com ஈ மெயில் : kalkiweekly@vsnl.com

# சமூக சேவகி பிரியங்கா!

பிரியங்கா தற்சமயம் சமூக சேவகியாகப் பணியாற்றுவது, அன்னை தெரஸாவின் மிஷனரியில். பழைய டெல்லிப் பகுதியில் இந்த சேவா நிலையம் இருக்கிறது. முதியோர், குடும்பத்தாரால் கை விடப்பட்டோர், தொழு நோயாளிகள் என்று பல தரப்பு மனிதர்களின் சரணாலயம் இது.

டெல்லிப் பல்கலைக் கழக ஜீஸஸ்-மேரி கல்லூரியில் மனவியல் எடுத்துப் படித்த நாட்களிலிருந்து பிரியங்கா கவனமும், ஆர்வமும் செலுத்துவது முதியோர் மனவியலில்.

ஆக தெரஸா மிஷனரியில் வாலன்ட்டியராகப் பதிவு செய்துகொண்டு சமூக சேவை செய்து வரும் பிரியங்கா, இங்கும் அதிகக் கவனம் செலுத்துவது கைவிடப்பட்ட முதியோர் இல்லத்தில். தங்கள் பிள்ளைகளினாலும், சொந்த பந்தத்தினாலும், சமூகத்தினாலும் கைவிடப்பட்டுவிட்ட முதியோர்கள், தங்களுடன் அமர்ந்து சும்மா பேசிக் கொண்டிருக்கவாவது யாராவது வர மாட்டார்களா என்று ஏங்கிக் கொண்டிருப்பவர்கள். அவர்களிடம் பிரியங்கா சென்று ஆறுதலாக அமர்ந்து பேசுகிறார்.

பிரியங்காவுடன் கோ-வொர்க்கராகப் பணியாற்றும் ரஷீத் கித்வாய், ''இங்கு வாலன்ட்டியராகப் பணியாற்றும் எல்லாருமே ஏதாவதொரு பணியில் முழு மனதுடன் ஈடுபட்டு விடுகிறோம். எனவே பிரியங்கா எஸ்.பி.ஜி. படையின் விசேஷ பாதுகாப்பில் வருவதோ, பிற விவிஐபி பரபரப்புகளோ சூழ்நிலையை அதிகமாகப் பாதிப்பதில்லை. மேலும் இங்கு வந்து விட்டால் எல்லாருமே சமூக சேவகர்கள்தான். இதில் எந்தப் பாகுபாடுமில்லை. எப்படி இறைவன் சன்னதியில் அனைவரும் சமமோ, அப்படியே இங்கு எல்லா சமூக சேவகர்களும் சமம். ஒவ்வொருவரும் ஒவ்வொரு பிரிவில் பணி புரிகிறோம்'' என்கிறார்.

இங்கு முதியோர் பிரிவு தவிர, தொழு நோயாளிகள், இளம் மன நோயாளிகள், பிறந்ததுமே உதறியெறியப்பட்ட மழலைகள் என்று பல பிரிவுகள் உள்ளன.

பிரியங்கா செய்த மற்றொரு காரியம் சமீபத்தில் திக்கிரையான கிழக்கு டெல்லி குப்பம் ஒன்றிற்குச் சென்று பாதிக்கப் பட்ட குழந்தைகளுக்கு



நிவாரணப் பணிகளை மேற்கொண்டது.

இவையெல்லாம் ஒரு புதிய படிமத்தை (இமேஜ்) பிரியங்காவுக்குக் கொடுக்கலாம். ஆனால் சந்துஷ்டி போன்ற சமூக சேவைப் பெண்மணிகள் அமைப்பு, ஷாப்பிங் காம்ப்ளெக்ஸில் ஐரோப்பிய உணவு விடுதி நடத்துவது, சட்டத்திற்குப் புறம்பாக இடத்தை வளைத்துப் போட்டது போன்ற செயல்கள் பிரியங்காவின் இமேஜுக்குக் களங்கம் கற்பிக்கவும் செய்யும்.

இது தொடர்பாக நடந்து கொண்டிருக்கும் பொது நல வழக்கில் பிரியங்காவுக்கும் கோர்ட் நோட்டீஸ் அனுப்பப்பட்டிருக்கிறது. சந்துஷ்டி காம்ப்ளெக்ஸ் ராணுவப் பகுதியென்றும் அங்கு சமூகத்தில் பெரிய மனித அந்தஸ்து வகிக்கும் பல நாரி சிரோமணிகள் சட்ட விரோதமாக அழகு நிலையத்திலிருந்து பல்வேறு கடைகள் நடத்துகின்றனர் என்றும் வாதாடுகிறது இந்த வழக்கு.

இதைப் போலவே ராஜீவ் காந்தி ஃபௌண்டேஷன் நிதிக் குவிப்பிலும் சோனியா, ராஹுல், பிரியங்கா அவர்கள் குடும்ப நண்பர்கள் அமிதாப்பச்சன், சுமன் துபே போன்றோருக்கு கோர்ட் நோட்டீஸ் அனுப்பப்பட்டிருக்கிறது.

கோடிக்கணக்கில் நன்கொடை என்று வசூலிக்கப்பட்ட பொதுப் பணத்திற்குச் சரியான கணக்குகள் இல்லை என்பது இந்த வழக்கில் வந்திருக்கும் மற்றொரு வாதம். நீதிமன்றத்தில் அலசப்படும் சட்ட நுணுக்கங்களும், எழுப்பப்படும் கேள்விகளும் பிரியங்காவை "போதும் போதும்" என்று சொல்ல வைத்திருக்கின்றன என்று பேசப்படுகிறது டெல்லியில்.

இந் நிலையில் பிரியங்கா சமூகப் பணி புரிய முன் வந்திருப்பது தமது "சமூக இமேஜை" மாற்ற என்றும் கூறப்படுகிறது. இதில் உண்மை இருக்கிறதோ இல்லையோ, இப்போதைக்கு நிலவும் அரசியல் சூழ் நிலைகளிலிருந்து தம்மை விடுவித்துக் கொள்ள ஒரு அரு மருந்தாகவாவது இந்த நேரு குடும்ப வாரிசுக்குப் பயன்படுகிறது.

ஆனாலும், விரும்பினாலும் விரும்பா விட்டாலும் அரசியல் என்கிற விஷ வட்டத்திலிருந்து பிரியங்கா எப்போதுமே தப்பித்து விட முடியாது என்பதுதான் பலரும் கொண்டிருக்கும் அபிப்பிராயம்!

— வெங்கட்

— நிதீஷ் பரத்வாஜ் பேட்டி

**'மகாபாரதம்' டெலிவிஷன் தொடரில் கிருஷ்ணராக நடித்தவர் நிதீஷ் பரத்வாஜ். இப்போது, தூர்தர்ஷனில், 'கீதை ரகசியம்' என்று பகவத் கீதை பற்றி நூற்றுச் சொச்சம் வாரங்களுக்கு ஒரு மெகா தொடரை ஆரம்பித்திருக்கிறார். அவரைச் சந்தித்தபோது....**

"கீதையை மையமாக வைத்தே ஒரு மெகா தொடர் எடுக்கும் எண்ணம் எப்படி வந்தது?"

"இப்படி ஒரு தொடரை நான் எடுக்க வேண்டும் என்பது கூட முன்னாலேயே தீர்மானிக்கப்பட்ட ஒரு விஷயம் என்றுதான் நான் நினைக்கிறேன். காரணம், நான் படித்தது கால்நடை மருத்துவம். கூடவே மராத்தி மேடை நாடகங்களிலும் ஈடுபாடு இருந்தது. மும்பை ரேஸ்கோர்ஸில், குதிரைகளுக்கு மருத்துவம் பார்த்துக் கொண்டிருந்த சீனியர் டாக்டருக்கு உதவி டாக்டராக நான் இருந்தேன். திடீரென்று அவருக்கு கல்கத்தா ரேஸ் கோர்ஸில் வேலை கிடைத்துவிடவே, மும்பை வேலையை ராஜினாமா செய்து விட்டார். அதனால் எனக்கு வேலை போனது. உடனே என் நாடக அனுபவம் காரணமாக, மும்பை தூர்தர்ஷனில் அறிவிப்பாளராகச் சேர்ந்தேன். அப்போதுதான், மகாபாரதத்தில் விதுரன் பாத்திரத்தில் நடிக்க நான் தேர்வு செய்யப்பட்டேன். ஆனால், 'விதுரன் வயதான கேரக்டர். 'இளைஞனான உன்னை, அந்த கேரக்டரில் வீணடிக்க வேண்டாம்; நகுலனாக நடி' என்றார்கள். (அப்போது எனக்கு இருபத்து மூன்று வயது) எனக்கு அதில் ஆர்வமில்லை. எனவே மறுத்துவிட்டேன். அப்புறம் அபிமன்யூ ரோலுக்கு நான் பரிசீலிக்கப்பட்டேன். கடைசியில் கிருஷ்ணன் கதாபாத்திரத்துக்குத் தேர்வு நடந்தது. என்னைத் தவிர இன்னும் மூன்று நான்கு பேர் இருந்தனர். இறுதியில், என்னைத் தேர்ந்தெடுத்ததற்கு, என்னுடைய சுத்தமான சமஸ்கிருத உச்சரிப்புத்தான் காரணம் என்று நினைக்கிறேன்.

"கிருஷ்ணனாக நடிக்க ஆரம்பித்தபின், கீதையை முழுமையாக



# "பகவத் கீதை என்னை பக்குவப்படுத்தியிருக்கிறது!"



– ஆழமாகப் படித்தேன். கீதையில், வாழ்க்கைக்குத் தேவையான ஏராளமான விஷயங்கள் பொதிந்து கிடக்கின்றன, என்று பல அறிஞர்களும் கீதைக்கு எழுதின உரைகளைப் படித்தபோது புரிந்தது. எனவே, பகவத் கீதையை மையமாக வைத்தே முழுமையான ஒரு தொடரை எடுக்க முடியும் என்று தோன்றியது. அது பற்றிய ஆராய்ச்சியில் இறங்கினேன்.''

''சுமார் மூன்று வருடங்களுக்கு முன்பு, பா.ஜ.க. எம்.பி.யாக சென்னை வந்திருந்தபோது, உங்களிடம் பேசியிருக்கிறோம். அப்போதே, இந்த பகவத் கீதை தொடர் பற்றிச் சொல்லியிருக்கிறீர்கள். ஒளிபரப்புக்கு ஏன் இவ்வளவு கால தாமதம்?''

''இதுவரை மூன்று கோடி ரூபாய் செலவழித்து, இருபது எபிசோட்கள் முடித்தாகி விட்டது. ஆனாலும் இது வரை பொறுமையுடன் நான் காத்திருந்ததற்கு முக்கியமான காரணம் உண்டு. மிக அதிகபட்ச வீச்சு காரணமாக நான் இதை தூர்தர்ஷனில்தான் ஒளிபரப்ப விரும்பினேன். அதுவும் குறிப்பாக ஞாயிற்றுக் கிழமை காலை ஒன்பது மணிக்கு ஒளிபரப்ப விரும்பினேன். எனவே, ஞாயிறு காலை ஒன்பது மணி ஸ்லாட்டுக்காக காத்திருக்க வேண்டியதாகி விட்டது. அதனால்தான் தாமதம். நான் இதில் இறங்கி விட்டதால்தான், போன தடவை தேர்தலில் நிற்கவில்லை. இனிமேல் தேர்தலில் போட்டியிடுவது சாத்தியம் என்றும் தோன்றவில்லை.''

''ராமாயணம், மகாபாரதம், ஹனுமான், கிருஷ்ணா, கீதை என்று புராண இதிகாசத் தொடர்கள் பல்வேறு சானல்களிலும் ஒளிபரப்பாகின்றன. இது ஓவர் டோஸ் இல்லையா? திகட்டி விடாதா?''

''ராமாயணமும், மகாபாரதமும், நம் மக்களுக்குத் தெரியாத கதையா? ஆனால், டெலிவிஷனில் ஒளிபரப்பானபோது அவை ஏற்படுத்திய நாடு தழுவிய ஈர்ப்பு கொஞ்ச நஞ்சமா? ஆக, புராண, இதிகாசங்களில் ஏகப்பட்ட கிளைக்கதைகள் உண்டு. எனவே, மக்களுக்குத் திகட்டவே திகட்டாது. இந்த கீதையின் ரகசியம் தொடரின் முதல் எபிசோட் ஒளிபரப்பான நாலு நாட்களுக்குள் நாடெங்குமிருந்து, ஐநூற்று ஐம்பது கடிதங்கள் எங்களுக்கு வந்ததே இதற்கு அத்தாட்சி.''

''பகவத் கீதையில் வாழ்க்கைக்குப் பயன்படும் ஏராளமான விஷயங்கள் உள்ளன என்பது சரி. அவற்றை, கிருஷ்ணனாக நடிக்கிற உங்கள் வாழ்க்கையில் எப்போதாவது பயன்படுத்தியிருக்கிறீர்களா?''

''ஓ! ஏராளமான தருணங்களில். உதாரணத்துக்கு, என் தந்தையார் சம்பந்தப்பட்ட விஷயத்தைச் சொல்லலாம். மும்பையிலிருந்து, ஐம்பது கிலோ மீட்டர் தூரத்திலிருந்த ஒரு கிராமத்துப் புரோகிதரின் மகன் என் அப்பா. அவர், ஊரில்



• கீதை ரகசியத்தில்....

பள்ளிக் கூடப் படிப்பை முடித்துவிட்டு, என் தாத்தா கொடுத்த ஓர் அணாவுடன் மும்பை வந்தார். சிறு சிறு வேலைகள் பார்த்து, பிளாட்பாரத்தில் உறங்கினார். ஒரு சர்தார்ஜி டாக்ஸி டிரைவரின் அறிமுகம் கிடைத்தது. அவர் மூலம் டிரைவிங் லைசென்ஸ் பெற்று, பகலில் டாக்ஸி ஓட்டி, மாலையில் கல்லூரியில் படித்துப் பட்டம் பெற்றார். சட்டம் படித்து, வக்கீல் ஆனார். மும்பை ஹைகோர்ட்டின் குறிப்பிடத்தக்க தொழிலாளர் துறை வழக்குரைஞராக விளங்கினார். என்னுடைய பகவத் கீதை ஈடுபாடு கண்டு பெருமிதப்பட்டார். இந்த மாபெரும் புராஜெக்ட்டுக்கு ஆசிவழங்கி, ஊக்கமளித்தார். அவருக்கு இருதய அறுவை சிகிச்சைக்கு ஏற்பாடாகியிருந்த சூழ்நிலையில், புனேவில் திடீரென்று மரணமடைந்தார். மும்பையில் கீதை ரகசியம் எடுக்க செட் போட்டிருந்த எனக்கு இரவு தகவல் வந்தது. அதிர்ச்சியடைந்தேன். உடனே காரில், மனைவியை அழைத்துக் கொண்டு, புனே புறப்பட்டேன். ஒரு சொட்டு கண்ணீர் கூட விடவில்லை. முன்னின்று இறுதிச் சடங்குகளை முடித்து, மின்தகன மையத்துக்குக் கொண்டு போனோம். என்னை இரண்டு நிமிடங்கள் தனியாக விடும்படி சொன்னேன். என் தந்தையின் உடலுடன் இருந்த அந்த இரண்டு நிமிடங்களில் என்னையும் மீறி அழுது விட்டேன்.

"மற்ற எவரையும் போல, உணர்ச்சிவசப்பட்டு அழாதது, சிலருக்கு விசித்திரமாக இருந்திருக்கலாம். ஆனால் நான் அது பற்றிக் கவலைப்படவில்லை. காரணம் நான் அறிந்த பகவத் கீதைதான். என் அப்பாவின் மரணம், எவராலும் தடுத்து நிறுத்த முடியாத ஒன்று என்பது எனக்குப் புரிகிறது. அவர் உடலுக்குத்தான் மரணம் நிகழ்ந்தது. அவர் ஆன்மா, மறுபிறவி எடுத்திருக்கும். என் கீதை ரகசியத் தொடரைப் பார்த்துக் கொண்டிருக்கும் என்று மனப்பூர்வமாக நம்புகிறேன்!"

"உங்கள் கனவில், எப்போதாவது பகவான் கிருஷ்ணர் வந்தது உண்டா நிதிஷ்?"

"ஓ! சம்பந்தமே இல்லாத தருணங்களில் கூட கிருஷ்ணபகவான் என் அருகில் இருப்பது போல நான் உணர்ந்திருக்கிறேன். சாத்தியமே இல்லாத இடங்களில் ஊதுபத்தி மணத்தை நான் நுகர்ந்திருக்கிறேன். எனக்கு எதிர்பாராத பிரச்னைகள் வந்த சமயங்களில், நான் என் பிரச்னையை பகவான் கிருஷ்ணரிடம் கூறுவது போலவும், அவர் அதற்குத் தீர்வு சொல்லுவது போலவும் உணர்ந்திருக்கிறேன்."

"கிருஷ்ண பகவானுக்கு, கிரீடம், மயிற்பீலி, புல்லாங்குழல் எல்லாம் கற்பனைகள் தானே! நீங்கள் கிருஷ்ணனுக்கான காஸ்டியூம் அணிந்து கொள்ளுகிற போது, உண்மையில் கிருஷ்ணன் இப்படி இருந்திருப்பாரா என்று நினைத்தது உண்டா?"

"இல்லை. என்னைப் பொறுத்தவரை கிருஷ்ணன் எப்படி இருக்கிறார் என்பது முக்கியமில்லை; என்ன சொல்லியிருக்கிறார் என்பதுதான் மிக முக்கியம்."

சந்திப்பு : **எஸ். சந்திரமௌலி**

படம் : **ஸ்ரீஹரி**

## இந்தியர்களின் சாதனை....

**● அமெரிக்காவின் விண்வெளி ஆராய்ச்சி நிறுவனமான "நாசா"வில் பணிபுரிபவர்களில் 36 சதவிகிதம் பேர் இந்தியர்கள்.**



**● பில் கேட்ஸின் மைக்ரோ சாப்ட் நிறுவனத்தின் மொத்த ஊழியர்களில் 34 சதவிகிதத்தினர் இந்தியர்கள்.**

**● பிரபல கம்ப்யூட்டர் நிறுவனமான ஐ.பி.எம். (I.B.M.)ல் பணிபுரிபவர்களில் 28 சதவிகிதத்தினர் இந்தியர்கள்.**

**● இன்டெல் கம்ப்யூட்டர் நிறுவனத்தில் பணிபுரிபவர்களில் 17 சதவிகிதத்தினர் இந்தியர்கள்.**

**● ஜெராக்ஸ் (Xerox) நிறுவனத்தில் பணிபுரிபவர்களில் 13 சதவிகிதத்தினர் இந்தியர்கள்.**

— ராஜி ராதா; ஆதாரம் : ஸண்டே

# பொன்னியின் புதல்வர்

இந்த நூற்றாண்டின்
மகத்தான எழுத்தாளர் - பத்திரிகையாளர்-
சுதந்தரப் போராட்ட வீரர் -
சீர்த்திருத்தவாதி - எழுத்துலக வழிகாட்டி

# அமரர் கல்கியின்




# ஒப்பற்ற வாழ்க்கை வரலாறு




(சுந்தா எழுதியது)

நீண்ட வருடங்களுக்குப் பிறகு இப்போது
மறுபதிப்பாக, புதுப்பொலிவுடன் வெளிவருகிறது!

கல்கி வாசகர்கள் ஒவ்வொருவரிடமும்
இருக்க வேண்டிய நூல்! 936 பக்கங்கள்.

ரூ. 240 விலையுள்ள இந்நூல்,
கல்கி நூற்றாண்டு முடியும் வரை (9.9.99)
சிறப்புச் சலுகை விலை - ரூ. 200க்குக் கிடைக்கும்!
பதிவுத் தபாலில் பெற ரூ. 20 சேர்த்து அனுப்பவும்.
காசோலை அல்லது டிராப்டு, "Vanathi Pathippakam" என்ற
பெயரில் எடுத்து அனுப்பவும். வி.பி.பி. மூலமும் பெறலாம்.

**வானதி பதிப்பகம்**

13.தீனதயாளு தெரு,
தி. நகர், சென்னை — 17.
தொலைபேசி: 4342810



**பல வருடங்கள் அமெரிக்காவிலும், பிறகு சில வருடங்கள் ஹாங்காங்கிலும் வசித்துவிட்டு, இப்போது சீனாவில் ஒரு வருடமாக வசிக்கும் மீரா கோபாலன் தமது சீன அனுபவங்கள் சிலவற்றைச் சொல்லுகிறார்...**

● சீனாவுக்கு மாற்றல் என்ற உடனேயே, மொழி தெரியாத ஊரில் என்ன செய்வோம்

• காலையில் ஆங்காங்கே உடற்பயிற்சி...

என்று கவலை. போய்ச் சேர்ந்த மறு வாரம் காரும், டிரைவரும் வந்தபின் கொஞ்சம் தெம்பு வந்தது. 'வெல்கம்' (வணக்கம்) என்று சொல்லி, கார் ஓட்டத் தொடங்கினான் யீக்வான். ஆங்கிலத்தில் பல கேள்விகள் கேட்டும் பதில் ஒன்றும் இல்லை. வீட்டில் வந்து இறங்கியபோது நான் 'தாங்க்யூ' என்றவுடன், அவன் 'வெல்கம்' (நன்றி) என்றான். அதிகாலை வந்தவுடன் என்னிடம் 'வெல்கம்' (குட் மார்னிங்) என்றான். நானும் என் தோழிகளுமாகக் கடைக்குப் போய்க் கொண்டிருக்கும்போது, தொண்டையில் ஏதோ மாட்டிக் கொள்ள, இருமல் மேல் இருமலாக வந்தது. யீக்வான் ரொம்ப பயந்து, வெளிறிப்போன முகத்துடன் திரும்பித் திரும்பிப் பார்த்துக் கொண்டே 'வெல்கம்' (என்ன ஆச்சு உங்களுக்கு?) என்றபடியே அவசரமாகக் காரை வீட்டுக்குக் கொண்டு வந்தான். லஞ்ச் முடிந்து மறுபடி காரில் உட்கார்ந்தபோது 'வெல்கம்?' (இப்போது தேவலையா?) என்று சிரித்த முகத்தோடு கேட்டான். இப்படியே 'வெல்கம்' என்ற ஒருவார்த்தையைப் பல ஏற்ற இறக்கங்களுடன், சமயத்துக்குத் தகுந்த மாதிரி சொல்லி சமாளித்துக் கொண்டிருந்தான்!

● வீட்டில் உதவிக்கு இருக்கும் தமிழன் ராபர்ட் என்னை 'அம்மா' என்று கூப்பிடுவதைப் பார்த்து, யீக்வானும் என்னை அம்மா என்றே கூப்பிடுகிறான். மற்ற இந்தியர்களுக்கு, யீக்வான் என்னை அம்மா என்று கூப்பிடுவது ஒரே அதிசயம்!

● சைனாவில் இருந்து கொண்டு 'டை-சி' கற்றுக் கொள்ளா விட்டால் எப்படி என்று என் கணவரிடம் வாதாடி, அவர் வேண்டா வெறுப்பாக ஓகே சொன்னவுடன், ஒரு நல்ல டீச்சரைப் பிடிக்க முயன்றேன். ஒருநாள் காலை 6 மணிக்கு வாக்கிங் போய்க் கொண்டிருந்தபோது, பிளாட்பார



• டை-சி கற்றுக் கொண்டேன்...

மரத்தடியில் ஒருவர் 'டை-சி' பண்ணிக் கொண்டிருப்பதைப் பார்த்தேன். காலை ஆரவாரத்துக்கு இடையே, அவர் நிம்மதியாக வேலையைப் பார்த்துக் கொண்டிருந்தார். அரை மணியாக அவர் முன் நின்று கொண்டிருந்தும், அவர் முழுதும் முடிக்கும் வரை என் பக்கமே திரும்பவில்லை.

கஷ்டமாக இருக்கிறது. இந்தப் பெரியவரின் டிஸிப்ளினைப் பார்த்து நான் அதிசயித்திருக்கிறேன்! சைனீஸில் நிறையப் பேசுவார். நடுநடுவே 'மியாவ் மியாவ்' என்பார். 'பூனை காலடி வைப்பது போல அத்தனை மெதுவாக வைக்க வேண்டும்' என்று அர்த்தம்!

# உடற்பயிற்சிக்காகத் தேடிவரும் சீனர்கள்!



● இந்த டை-சி மாஸ்டரின் பெயர் வாங். வயது 67. முப்பது வருடங்களாக, ஒரு நாள் கூட விடாமல் டை-சி செய்கிறார். முப்பது வயதுக்கு முன் புகை பிடித்துக் கொண்டிருந்தார். ஒரு முறை இருமலும், வாந்தியுமாகப் பத்து நாள் ஆஸ்பத்திரியில் இருந்தார். அதன் பிறகே டை-சி கற்றுக் கொண்டு செய்ய ஆரம்பித்திருக்கிறார். மரப் பலகையில்தான் படுக்கை. சுடு தண்ணீர்தான் குடிப்பார்.

அவர் முடித்ததும், 'எனக்குக் கற்றுக் கொடுக்க முடியுமா?' என்று அரைகுறை சைனீஸில் கேட்க, அவர் அதிசயமாக என்னைப் பார்த்தார். நான் அவரிடம், 'நான் உனக்குக் கற்றுக் கொடுக்கட்டுமா?' என்று கேட்டிருக்கிறேன் என்பது பிறகு தான் புரிந்தது!

● டை-சி என்பது வெகு மெதுவாகச் செய்யும் உடற் பயிற்சி. மார்ஷியல் ஆர்ட்ஸிலிருந்து உருவானது. எவ்வளவு மெதுவாகச் செய்கிறோமோ அவ்வளவுக்கு நல்லது. 85 ஸ்டெப்ஸ் மொத்தம். பிறர் செய்யும்போது பார்த்தால் மிகச் சுலபமாகத் தோன்றுவது, அவரவர் செய்யும்போது படு

● தினமும் 'உன் கணவர் எங்கே? அவர் ரொம்ப பிஸி, இல்லை?' என்று கேட்பார். 'இல்லை, வீட்டில் தூங்கிக் கொண்டிருக்கிறார்' என்றால், 'காதை முறுக்கிக் கூட்டி வா. இது அவருக்கு நல்லது' என்பார். ஒருநாள், 'உங்கள் மனைவிக்கு இதைக் கற்றுக் கொடுத்திருக்கிறீர்களா?' என்று கேட்டேன். 'உன் கணவரைப் போலத்தான். தினமும் ஒரு சாக்கு. இந்த வலி, அந்த வலி என்று மூக்கால் அழுவாள். டை-சி செய் என்றால், அது ரொம்ப கஷ்டம். எனக்கு வராது என்பாள்' என்றார். 'நீங்கள் அவள் காதை முறுக்கிக் கூட்டி வருவது தானே?' என்ற போது, 'ஐயோ, அவளிடம் ஒன்றும் நடக்காது!' என்று சிரிப்புடன் அலுத்துக்

கொண்டார்!

● சைனாவில் கறிகாய் மார்க்கெட் போவது ஓர் அனுபவம். பச்சைப் பசேல் என்றும் செழுமையாக இருக்கும். ரொம்ப மலிவானாலும், வெளியூர்க்காரர்கள் போனால், விலை பல மடங்கு அதிகமாகும். அரசாங்கச் சட்டப்படியே, வெளிநாட்டினருக்கு அதிக விலை வைத்து விற்கலாமாம்! சிலர் நன்றாகவே ஏமாற்றுவார்கள். அதனால் டிரைவர் யீக்வான் என்னை உள்ளே போக விட மாட்டான். அது ஒரு வகையில் நல்லதாகவே பட்டது. ஏனென்றால் என்னைச் சுற்றிக் கூட்டமே கூடிவிடும். புடைவை, பொட்டு, மூக்குத்தி எல்லாம் அவர்களுக்கு அதிசயம். உற்றுப் பார்க்கிறோமே என்ற கவலையே இல்லாமல் வெறித்துப் பார்ப்பார்கள்.

● வீட்டருகே ஒரு பிரெஞ்சு சூப்பர் மார்க்கெட். பழங்களுக்கு நடுவில் தேங்காயும் இருந்ததைப் பார்த்து ஒரே எக்ஸைட்மென்ட். தேங்காயை ஹாங்காங்கிலிருந்து வரவழைத்துத் துருவி ஃப்ரீஸரில் வைத்துக் கொண்டிருந்தேன். இனி அந்தக் கவலை விட்டது என்று நினைத்து இரண்டு தேங்காயை செலக்ட் பண்ணி, 'உடைத்துத் தருவாயா?' என்று சைகையில் கேட்டேன். தப்புத்தான். இரண்டு-மூன்று நிமிடங்களுக்கு, தேங்காயை விடாமல் தேய்த்துத் தேய்த்து அலம்பினான். நாரை எல்லாம் ஒன்று விடாமல் பிய்த்து எடுத்தான். ஒரு பிளாஸ்டிக் ஜக் எடுத்து வந்து, மறுபடி மூன்று நிமிடம் அலம்பினான். நானும் பொறுமையோடு இருந்தேன். பிறகு இரண்டு கைகளிலும் க்ளவ்ஸ் அணிந்து கொண்டான். குடுமியின் நேர் எதிர்ப்பக்கத்தில் உள்ள கூரான பகுதியை, ஒரு காலணா அளவுக்கு, தேங்காய்க்கு வலிக்காமல் தட்டித் திறந்தான். இளநீரை ஜக்கில் கவிழ்த்தான். பிறகு தேங்காயைக் கையில் எடுத்தான். சரி, இப்போது இரண்டாக உடைத்துத் தருவான் என்று நினைத்துக் கொண்டிருந்தபோது, கொஞ்சமும் எதிர்பார்க்காமல், அதைப் பக்கத்திலுள்ள குப்பைத் தொட்டியில் வீசிவிட்டான்!

'கெட்டது போ' என்று அலறி அடித்துக் கொண்டு ஓடி குப்பைத் தொட்டியில் பார்த்தேன். நல்ல காலம். அதனுள் குப்பை ஏதும் இல்லை. அதை வெளியில் எடுத்தேன். 'மடையன், தேங்காயை இப்படி வீசி விட்டானே' என்று நான் ஓட, 'இந்த மடச்சி என்ன, தண்ணீரை விட்டுவிட்டு வெறும் தேங்காயைத் தேடிப் போகிறாளே' என்று அவன் என்னைப் பார்க்க, இருவரையும் சுற்றி ஒரு



• எங்கள் குடியிருப்புப் பகுதியில் - ஓட்டுனர் யீக்வான்

பெரிய கூட்டம் கூடி விட்டது. இதில் ஆளாளுக்கு காமென்ட் வேறு!

● ராஜ்கபூரின் 'ஆவாரா' சினிமா இங்கே ரொம்ப பாபுலர். அதைப் பார்க்காதவர்களே இருக்க மாட்டார்கள் போலிருக்கிறது. அதில் வரும் 'ஆவாரா ஹூம்' பாடாதவர்கள் வெகு குறைவு. யீக்வான் கூட திடீர் திடீரென்று 'ஆவாலா ஹூம்' என்று பாட ஆரம்பித்து விடுவான். (அவர்களுக்கு 'ரா' வராது. 'லா'தான். நான்கூட 'மீலா'தான்!)

● நாங்கள் குடியிருக்கும் இடத்தில் ஒரு 'வில்லா' வாசலில் இரண்டு சிங்கங்களின் சிலைகள். ஆண் சிங்கத்தின் காலடியில் பந்தும், பெண் சிங்கத்தின் காலடியில் ஒரு குழந்தையும். அந்த வீட்டு வாசல் ஒரு தெருவை நோக்கி இருப்பதால், கெட்ட சக்திகள் வீட்டுக்குள் வராமல் இருக்க இப்படி வைக்கிறார்கள். இன்னொரு

'வில்லா'வில் வாயிற் கதவுக்கு மேல் பக்கம் 'பாக்வா' என்ற கண்ணாடி. நடுவில் வட்டமாகவும், சுற்றி எட்டுக் கோணமும் உள்ளது. வீட்டில் வாஸ்து குறைபாடுகள் இருந்தால், கண்ணாடி அதன் கெட்ட சக்திகளைத் திரும்பத் தாக்கி வெளியில் அனுப்பிவிடுமாம். ஆனால் இதையே வீட்டின் உள் பக்கம் வைத்தால், வீட்டையே அழித்து விடுமாம். வீட்டில் ஃபர்னிச்சர் மற்ற சாதனங்கள் எங்கெங்கே இருந்தால் 'சி' சக்திகள் (அதாவது காற்றில் மிதக்கும் மெட்டா ஃபிஸிகல் சக்திகள்) எப்படிக் கட்டுப்பட்டு, வீட்டில் உள்ள எல்லோருக்கும் ஐந்து தலைமுறைகளுக்கு நன்மை தரும் என்பதில் இவர்களுக்கு அபார நம்பிக்கை!

● அருகே ஒரு ரெஸ்டாரன்ட். நன்றாக நடக்காமல் போகவே, அதைத் திரும்பவும் கட்டி, வாசலில் இரண்டு சிங்கங்களை வைத்து விட்டார்கள். இடது புறம் பச்சை ட்ராகன். வலது பக்கம் வெண் புலி.



• கண்ணாடி கேஸ்களில் தினசரிகளைப் படிக்கலாம்.

வீட்டின் இடப்பக்கம் கிழக்கு, வலப்பக்கம் மேற்கு என்றிருந்தால் நல்லது. இடப் பக்கம் வலப் பக்கத்தைவிட உயரமாக இருக்க வேண்டும். இல்லாவிட்டால் அங்கே ஓர் உயரமான செடியோ, விளக்கோ வைத்து விடுவார்கள்! வீட்டில் புலிப்படம் வைக்கவே கூடாது!

● சிவப்பு சில்க் கயிற்றில் 'மிஸ்டிக் நாட்' போட்டது நிறையக் கிடைக்கும். 'இது வளமான முழு வாழ்க்கைக்கு'; 'இது வெற்றிக்கு'; 'இது சக்திக்கு'; 'இது கணவன் மனைவி மகிழ்ச்சிக்கு'; 'இது குழந்தைகள் படிப்புக்கு' என்று கடைகளில் விற்பார்கள். 4 ரொம்ப மோசமான எண். அவர்கள் மொழியில் அது மரணம் போல. கார் நம்பரில் 8 இருந்தால் நல்லது. விற்பது சுலபம்!

● விடிகாலை நாலரை மணிக்கு வாக்கிங் போகும் போது தெருவைப் பெருக்கிச் சுத்தம் செய்யும் பெண்களைக் காண்பது உண்டு. ஒருத்தி கிழவி. ஆனாலும் ஓடி ஓடி வேலை செய்வாள். பெரிதாகச் சிரிப்பாள். வரவேற்புச் சொல்லுவாள். 'உன் வயதென்ன?' என்றேன். '70' என்றாள்! என் டை-சி டீச்சர், 'இந்த ஊரில் 60 ஆனால் ரிடையர் ஆகணும். அவளுக்குச் சம்பளம் ஒண்ணும் கிடைக்காது. ஆனால் எக்சர்சைஸுக்காக அவள் வேலை செய்து கொண்டிருக்கிறாள். சிலர் அப்படிச் செய்வார்கள்' என்றார். எனக்கு அதிசயமாய் இருந்தது. அதனால்தான் ரோடுகள் குப்பை இல்லாமல் இருக்கின்றன!

● அன்றாடம் இவர்களின் நியூஸ் பேப்பரை எல்லாப் பக்கங்களையும் கண்ணாடி கேஸ்களில் வைத்து, பெரிய சாலைகளில் சுவரில் வைக்கிறார்கள். அவற்றை நிறைய பேர் ஆர்வத்தோடு படிப்பதைக் காணலாம்!

● அதிகாலையில் குருப் குருப்பாக அங்கங்கே எக்சர்சைஸ் செய்வது கண் கொள்ளாக் காட்சி! பில்டிங் வாசல்களில் 'டை-சி' செய்வது ரொம்ப சகஜம்.

● பின் பக்கமாக நடந்தால் இதயத்துக்கு நல்லதாம். நிறையப் பேர் இப்படி நடப்பதைப் பார்க்கலாம்!

● பெரிய குரலில் சைனீஸ் ஆபரா பாட்டுக்களைத் திடீரென்று பாடிக் கொண்டு போவார்கள். அதுவும் உடம்புக்கு நல்லதாம். ஸ்ட்ரெஸ் ரிலீவராம்! முதலில் இதைப் பார்த்துச் சிரிப்பு வந்தாலும், இப்போது பழகிவிட்டது.

**— மீரா கோபாலன்**

# இலவசமாகவே கிடைக்கிறது இருதய அறுவைச் சிகிச்சை!

இருதய சிகிச்சை என்றாலே லட்சக்கணக்கில் செலவாகும் என்கிற கவலைதான் அனைவருக்கும் இருக்கிறது. முதல் 'ஹார்ட் அட்டாக்'குக்காக மருத்துவமனைகளில் அட்மிட் ஆன பல பேர், சிகிச்சை முடிந்து வருகிற பில்லைப் பார்த்ததும் இரண்டாவது அட்டாக்குக்கு ஆளான கதைதான் நிறைய்ய! ஆனால் எல்லாமே இலவசமாகவே செய்யப்படுகின்றன சென்னையிலுள்ள அரசு மருத்துமனைகளில் என்றால் நம்ப முடிகிறதா? நம்ப முடியாமல்தான் நேரடி விசிட் செய்து பார்த்தோம்.



முதலில் நாம் நுழைந்தது இராயப் பேட்டை மருத்துவமனையில் 24 மணி நேரமும் இயங்கி வரும் தீவிர இருதய சிகிச்சைப் பிரிவுக்குள்.

எட்டுப் படுக்கைகளைக் கொண்ட குளிர் சாதன அறைக்குள் காத்திருக்கும் நவீன சிகிச்சைக் கருவிகள்; டாக்டர்கள்; உதவியாளர்கள்.

• சுப்ரமணி : "இப்போ என் மகளுக்குத் தேவலாங்க!"

"இவருக்கு ஆறு வருஷத்துக்கு முன்னாடி நெஞ்சு வலி வந்துச்சு. ரெகுலரா மாத்திரை வாங்கிச் சாப்பிட்டுக்கிட்டு இருந்தாங்க. திடீர்னு மறுபடியும் வந்துடுச்சு. உடனே இங்க வந்தோம். நல்லா கவனிச்சுக்கிறாங்க. எங்களுக்குப் பைசா செலவில்லீங்க!'' என்றார் அங்கு சிகிச்சை பெற்றுக் கொண்டிருக்கும் ஷாகுல் ஹமீதின் மனைவி பாத்திமா.

மளிகைக் கடையில் வேலை பார்க்கும் ஷாகுல் ஹமீதுக்கு மூன்று பெண்கள். ஒரு பையன். "இன்னும் ரண்டு பொண்ணுங்களுக்குக் கல்யாணம் ஆகலையேங்கற கவலைதாங்க அவருக்குப் பாதி நோயே!" என்றார் பாத்திமா.

தலைமை டாக்டர் சுகுமாரைச் சந்தித்தோம்.

''தனியார் மருத்துவமனைகளில் என்னென்ன சிகிச்சையளிக்கிறார்களோ, அத்தனையையும் எங்களால் இங்கே தர முடியும். ஹார்ட் அட்டாக் வந்தவர்கள் சரியான நேரத்துக்கு இங்கே வந்து விட்டால் நூறு சதம் காப்பாற்றி விடலாம்.



• வேலு



• இருதய சிகிச்சை நடக்கிறது..

• டாக்டர் சுகுமார்



அஸ்தினாபுரத்தைச் சேர்ந்தவர் அழகம்மாள். "என் வூட்டுக்காரரு ஆட்டோ டிரைவருங்க. ஹார்ட் அட்டாக் வந்ததும் இங்க வந்து சேர்த்தோம். இப்போ நல்லாயிட்டாரு. பெரிய டாக்டருங்களால பிரச்னை இல்லீங்க. ஆயாக்கள் மாதிரியானவங்கதான் அலட்சியமா நடந்துக்குவாங்க. டயத்துக்கு மாத்திரை கொடுக்க மாட்டாங்க. மத்தபடி நல்லாத்தாங்க கவனிச்சுக்கறாங்க!' என்றார்.

இங்குள்ள இருதய சிகிச்சைப் பிரிவின்

"எங்களிடம் ஒரு பேஷண்ட் வந்தார். ஏறக்குறைய இறந்து போகிற நிலை. நிறையத் தடவை ஷாக் ட்ரீட்மெண்ட் கொடுத்துத் தான் குணமாக்கினோம். இப்போது அந்த பேஷண்ட் 45-ஏ பஸ்ஸில் படிக்கட்டில் தொங்கிக் கொண்டு பிரயாணம் செய்வதாகப் பார்த்தவர்கள் சொல்கிறார்கள்! இதை நான் எதற்குச் சொல்கிறேன் என்றால், எங்களிடம் அந்த அளவுக்கு நவீன சிகிச்சை வசதி

கள் இருக்கின்றன என்பதை எல்லோரும் தெரிந்து கொள்ள வேண்டும் என்பதற்காகத் தான்!" என்றார் தலைமை டாக்டர் சுகுமார்.

"மார்பின் நடுப்பகுதியிலும் தோள், கழுத்து ஆகிய பகுதிகளில் கடுமையான வலி இருக்கும். படபடப்பும் வியர்வையும் அதிகம் இருக்கும். இப்படியொரு நிலை ஏற்பட்டால் உடனே செக்அப் செய்து கொள்வது நல்லது. ஏனெனில் அது ஹார்ட் அட்டாக்குக்கான அறிகுறியாகவும் இருக்கலாம்!" என்ற டாக்டர் சுகுமார், தாங்கள் தரும் இலவச சிகிச்சை பற்றிய விவரங்களையும் விளக்கினார்.



• பாத்திமா, ஷாகுல் ஹமீது...

"ஸ்ட்ரெப்டோ கைனேஸ் (Strepto Kinese) என்பது மிக அவசியமான ஊசி மருந்து. இதை வெளியே வாங்கினால் நான்காயிரம் ரூபாய் விலை. இங்கே அதை இலவசமாகப் போடுகிறோம்! மருந்துகளோடு மதிய உணவும் இலவசம் தான். வருகிற நோயாளிகள் அனைவரையும் நூறு சதம் திருப்திப்படுத்திவிட முடியாது. அவர்களின் அத்தனை எதிர் பார்ப்புகளையும் நிறைவேற்றி விடவும் முடியாது. எது முக்கியமோ எது அவசியமோ அதை முதலில் செய்கிறோம். இது சிலருக்கு அதிருப்தி தந்தால் நாங்கள் என்ன செய்ய முடியும்?" என்றார்.

அடுத்து நாம் சென்னை பொது மருத்துவமனைக்குச் சென்றோம். இருதயச் சிகிச்சைக்கு மட்டுமே ஏழு மாடிக் கட்டடம் ஒன்று கம்பீரமாக நிற்கிறது. நோயாளிகள் கூட்டம் ஒருபுறமென்றால், அவர்களோடு வந்தவர்களின் கூட்டம் மறுபுறம்!

குன்றத்தூரில் தறி வேலை செய்யும் தொழிலாளி சுப்ரமணி, "என் மகளுக்கு இருயத்தில் ஓட்டை. ரெண்டு மாசமா வர்றேன். முதல்ல இருந்ததுக்கு இப்போ பரவாயில்லை. நன்றாக கவனிக்கிறார்கள்!" என்றார்.

திண்டிவனத்திலுள்ள ஒரு ஜவுளிக் கடையில் வேலை பார்க்கும் வேலுவுக்குப் பதினேழு வயது. ஆபரேஷன் செய்து, இருதயத்தில் ஒரு வால்வு பொருத்தியிருக்கிறார்கள். "இங்கே செலவு ஏதும் இல்லீங்க. ஆபரேஷன் சாமான்கள் வாங்க மட்டும் 2,650 ரூபாய் செலவாச்சு. அவ்வளவுதான்!" என்றார்.

வாலாஜாபேட்டையைச் சேர்ந்த தச்சுத் தொழிலாளி கோமடீஸ்வரன். தமது மகளுக்கு பைபாஸ் சர்ஜரி முடிந்து, ஊருக்குக் கிளம்பத் தயாராகிக் கொண்டிருந்தார்.

"என் பெண்ணுக்கு முடியாம போனதும் 'முதல்ல வேலூர் சி.எம்.சிக்குத்தான் கொண்டு போனோம். அங்கே ஆபரேஷனுக்கு ஒரு லட்சத்து முப்பத்தெட்டாயிரம் ரூபாய் செலவாகும்னாங்க. ஆனா இங்கே, ஆபரேஷனுக்குத் தேவையான சில பொருள்களை மட்டும் மூவாயிரம் ரூபாய்க்கு வாங்கிக் கொடுத்தோம். அவ்வளவுதான்! வேறு செலவே இல்லை. டாக்டருங்க எல்லோரும் அருமையாக் கவனிச்சுக்கிட்டதை நன்றியோட சொல்லணும்ங்க!" என்றார்.

நோயாளிகளோடு வந்து, வெளியில் தங்குவதற்கு வசதியில்லாமல், மருத்துவமனை வராந்தாக்களிலேயே வாசம் செய்பவர்களுக்கு ஏதும் உதவி செய்ய முடியாதா?

"வெளியிலிருக்கும் தொண்டு நிறுவனங்கள் ஏதும் முன் வந்து இப்படிப்பட்ட ஏழை நோயாளிகளோடு வருபவர்கள் தங்குவதற்கு ஏதேனும் இடவசதி செய்து கொடுத்தால் மக்களுக்கு இன்னும் உதவியாக இருக்கும்!" என்கிறார்கள் டாக்டர்கள்.

இங்கு மட்டுமல்ல; இலவச இருதய சிகிச்சை வசதிகள் கே.எம்.சி., ஸ்டான்லி மருத்துவ மனைகளிலும் உண்டு!

**— கே. பாலசுப்ரமணியன்**

படங்கள் : **சண்முகம்**



# ஒருவன்

தீயணைப்புத் துறை அதிகாரியான சரத் குமாரின் மனைவி தேவயானியையும், குழந் தையையும், வீட்டில் வைத்துக் கொளுத்தி விடு கிறார் ஆனந்த்ராஜ். அந்த அதிர்ச்சியில் தீய ணைப்புத் துறையில் வேலை பார்க்கப் பிடிக் காமல், நிறைய குடும்பங்கள் வசிக்கும் ஒரு காலனிக்கு வந்து, பேப்பர் போடுதல், பூ வியா பாரம், டீ வியாபாரம்... என பல தொழில்கள் செய்து பிழைத்து வருகிறார் சரத். தற்கொலை செய்ய முயற்சி செய்யும் ஓர் அனாதைச் சிறு வனைக் காப்பாற்றி, அவனுக்கு ஆதரவளித்து, பள்ளியில் சேர்த்துப் படிக்க வைக்கிறார்.

அந்தச் சிறுவனுக்கு இருதயத்தில கோளா றாகி விட, ஆபரேஷன் செய்ய மூன்று லட்ச ரூபாய் கேட்கிறார்கள் டாக்டர்கள். சரத் குமார் என்ன செய்வதென்று தெரியாமல் கையைப் பிசைந்தபடி நிற்க, உதவ வருகிறார் சி.பி.ஐ. அதிகாரி ரகுவரன். ரகுவரன் தாம் அச் சிறுவனின் தந்தை என்று கூறி, சிறுவ னைத் தந்து விடுமாறு கேட்க, வளர்த்த பாசத் தில் அல்லாடுகிறார் சரத்குமார். இதுதான் படத்தின் மெயின் கதை. கடைசியில் வில்லன் ஆனந்த்ராஜை சம்ஹரித்து, சிறுவனைக் காப் பாற்றித் தம் பாசத்தை நிரு பிக்கிறார் சரத். சிறுவனை யும், சரத்தையும் ரகு வரன் ஒன்றுசேர்த்து வைக்க, திரையில் 'வணக்கம்'.

சரத்குமாருக்கு கனகச்சிதமாய் பொருந்தியிருக்கிற கேரக்டர். ஆனந்த ராஜின் காரை சைக்கிளில் அசுரத் தனமாய்த் துரத்து வது, மாடிப்படி களில் திடுதிடுவென ஏறி அசத்துவது போன்ற சாகசங்களை விடவும், சரத்குமாரின் நடிப்பு டாப். நிதான மாய் ஒவ்வொரு காட்சிக் கும் ஏற்ப முகமெங்கும் பலவித உணர்ச்சிகளை உலவவிட்டிருக்கிறார்.

ஏற்கெனவே பலமுறை பார்த்த வில்லன் ரோல்தான் என்றாலும், ஆனந்த்ராஜ் வருகிற காட்சிகளை ரசிக்கலாம்.

'அறிமுகம்' பூஜாபத்ரா, சரத் வசிக்கும் காலனிக்கு புதிதாகக் குடியேறி, அவர்மேல் காதல் வச மாகிறார் - வழக்கம் போல் ஒரு டூயட் பாடலுக்காகவும், சில வசனங்களுக்காக வும் - அவ்வளவே.

தேவயானி ஃப்ளாஷ்பேக்கில் கெஸ்ட் ரோல் மாதிரி வந்து விட்டுப் போகிறார்.

படத்துவக்கத்தில், 'ஆக்ஸிடெண்ட்' விவேக், 'ஞாபகமறதி' வடிவேலு, மணிவண் ணன், டெல்லிகணேஷ்... என ஒரு பெரிய கும்பலை வித்தியாசமாய் அறிமுகப்படுத்தி, ஒரு பெரிய கலகலப்புக்கான எதிர்பார்ப்பைத் தூண்டி விடுகிறார் இயக்குனர். ஆனாலும் 'காமெடி வெடி' சரியான மருந்துக் கல வையில்லாமல், 'புஸ்'ஸென்று போய் விடு கிறது.

தேவாவின் இசையில், 'சின்ன ரோஜா, சின்ன ரோஜா' பாடலைத் தவிர மற்ற எதுவும் மனதில் நிற்கவில்லை. சரவணனின் ஒளிப்பதிவில் காட்சிகளனைத்தும் 'குளிர்' ரகம்.

மிகவும் சாதாரணமான ஒருவரைப் பார்க் கிற மாதிரி 'ஒருவனை'ப் பார்க்கலாம். மனத்தில் நிற்கக்கூடிய 'ஒருவன்' இல்லை.

— கே.பி.எஸ்.



1999 ஜுலை 18
பிரமாதி ஆடி 2
மலர் : 57
இதழ் : 51

# கல்கி

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்.



## மூக்குடைபட்ட நவாஸ் ஷெரீஃப்

காஷ்மீர் பிரச்னையை சர்வதேச அரங்குக்கு எடுத்துப் போக வேண்டும்; உலக நாடுகளின் கவனத்தையும் அனுதாபத்தையும் பெற வேண்டும் என்ற பாகிஸ்தானின் திட்டம் படு தோல்வி அடைந்திருக்கிறது!

அமெரிக்க அதிபரைச் சந்தித்து தமது நிலைக்கு ஆதரவு பெற முயன்ற பாகிஸ்தான் பிரதமர் நவாஸ் ஷெரீஃப் பாக் துருப்புகளை வாபஸ் பெறும்படி அறிவுறுத்தப்பட்டிருக்கிறார். வேறு வழியின்றி ஷெரீஃப் அதை ஒப்புக் கொண்டு அறிவிப்பு வெளியிடும்படி ஆகிவிட்டது!

அடுத்து பிரிட்டிஷ் பிரதமர் டோனி ப்ளேய்ரைப் பார்க்கப் போயிருக்கிறார் ஷெரீஃப். 'அமெரிக்க அறிவிப்பை விரைவில் நடைமுறைப்படுத்துங்கள்' என்று அவர் தம் பங்குக்கு வழி மொழிந்து அனுப்பியிருக்கிறார்!

கிளிண்டன்-ப்ளேய்ர் இருவருமே இந்தப் பிரச்னை இரு நாடுகளுக்கிடையேயானது (bilateral); இதை உலகளாவிய பிரச்னையாக்கக் கூடாது; மூன்றாவது நாடொன்று இதில் தலையிடலாகாது என திட்டவட்டமாக ஷெரீஃபிடம் தெரிவித்துள்ளனர்.

என்ன நோக்கில் ஷெரீஃப் இவ்விரு நாட்டு தலைவர்களைக் காணச் சென்றாரோ அதற்கு நேர் விரோதமான விளைவு ஏற்பட்டுள்ளது.

இந்தத் தோல்வியை பகிரங்கமாக ஒப்புக் கொள்ள முடியாமல் பாகிஸ்தான் திணறுகிறது.




பாக் ராணுவத்துக்கும் கார்கில் ஊடுருவலுக்கும் சம்பந்தமில்லை என்று முதலில் அடித்துச் சத்தியம் செய்தவர்கள், இப்போது 'பின்வாங்கத் தயார்' என்று அறிவிக்கும் கட்டாயம் ஏற்பட்டு விட்டது. இந்த தர்மசங்கடத்தைச் சமாளிப்பதற்காக, 'ராணுவம் பின்வாங்கிவிடும்; ஆனால் எல்லையில் ஊடுருவியுள்ள முஜாஹிதீன் படைகளின் முடிவு குறித்து நாங்கள் ஏதும் சொல்வதற்கில்லை' என்கிறார் பாகிஸ்தான் ராணுவ தளபதி பெர்வெஸ் முஷரஃப்.

முஜாஹிதீன் அமைப்பும் பாகிஸ்தான் ராணுவமும் கைகோத்துதான் செயல்பட்டிருக்கின்றன என்பதால் அந்தக் கூலிப் படைகளை முழுவதுமாக இந்தியப் பகுதியிலிருந்து வெளியேற்ற வேண்டிய பொறுப்பு பாகிஸ்தானுக்கு நிச்சயம் இருக்கிறது. அதிலிருந்து தப்பிக்க முயற்சி செய்வது தந்திரமெனில் இந்திய தூதரக அதிகாரிகளைத் துன்புறுத்தி வஞ்சம் தீர்த்துக் கொள்வது காட்டுமிராண்டித்தனம்!

பாகிஸ்தான் அரசின் அறிவிப்பையும் பாகிஸ்தான் ராணுவ தளபதியின் அறிக்கையையும் முழுமையாக நம்பி இந்தியா ஏமாந்துவிடுவதற்கில்லை.

கடைசி முஜாஹிதீன் வீரனும் பாகிஸ்தான் ராணுவ வீரனும் இந்திய மண்ணிலிருந்து வெளியேறும்வரை நமது தாக்குதல்கள் தொடர வேண்டும். அதன் பிறகே தாக்குதல்களை நிறுத்தி பேச்சு வார்த்தைகளைத் தொடங்கலாம்.

கார்கில் போர் முற்றுப் பெற்ற பிறகும் கட்டுப்பாடு கோடு அமைந்துள்ள எல்லைப் பகுதியில் துருப்புகள் நடமாட்டமும் கண்காணிப்பும் தீவிரமாகத் தொடர வேண்டும். கார்கிலில் அடங்கிப் போனாலும் அபாயம் வேறு இடத்தில் வெடிப்பதற்கான வாய்ப்பு இருக்கிறது. பாகிஸ்தானைப் பொறுத்த மட்டில் யுத்த காலம்- அமைதி நிலவும் காலம் என்ற வேறுபாடு கிடையாது. எப்போதுமே விழிப்புடன் எல்லைப் பகுதிகளைக் கண்காணிக்க வேண்டிய காலம்தான்.

உளவுத்துறை சீரமைக்கப்பட்டு, இந்தப் பணியைக் குறைகூற இடமில்லாத வகையில் நிறைவேற்ற வேண்டும்.

தேர்தல் முடிந்து பொறுப்பேற்கும் புதிய அரசாங்கத்துக்கு இந்தோ-பாக் உறவுகளில் விழிப்புணர்வையும் வல்லமையையும் காட்டி அமைதியை நாட வேண்டிய கடமை காத்திருக்கிறது.




# வெற்றி வீரர்கள்!

விம்பிள்டன் இரட்டையர் போட்டியில் வெற்றி பெற்று இந்தியாவின் பெருமையைக் கொடிகட்டிப் பறக்கவிட்டிருக்கும் லியாண்டர் பெயஸ்-மஹேஷ் பூபதி ஜோடிக்கு இரட்டை நன்றி கூற வேண்டும்.

முதல் நன்றி: ஒரு புதிய பெருமையைத் தாய்த் திருநாட்டுக்குத் தேடித் தந்ததற்கு.

இரண்டாவது நன்றி: உலகக் கோப்பை கிரிக்கெட்டில் ஏற்பட்ட ஏமாற்றத்தை பெருமளவு ஈடுசெய்ததற்கு.

இரட்டையர் இறுதிப் பந்தயத்துக்கு முன் தினம் இந்த இரு வீரர்களிடையே 'ஈகோ' பிரச்னை என்பதாகச் செய்திகள் வெளியாயின. அச் செய்திகளைப் படித்துவிட்டு மனம் சோர்ந்து போகாத இந்திய விளையாட்டு ரசிகர்களே இருக்க முடியாது.

செய்திகள் வெறும் வதந்திகளே என்று நிரூபிக்கும் விதமாக ஆடியிருக்கிறார்கள் இரட்டையர்கள். அதிர்ஷ்டத்தால் கிடைத்த சுலபமான வெற்றி அல்ல அவர்களுடையது.

பந்தயத்துக்கு முன் தினம் பூபதிக்கு வயிற்றில் சுருட்டியிழுக்கும் வலியும் காலில் காயமும் இருந்திருக்கின்றன. தமக்காகப் பிரார்த்திக்கும்படி அம்மாவிடம் போன் செய்து கேட்டுக் கொண்டிருக்கிறார்!

உழைப்புக்கும் ஒத்துழைப்புக்கும் உதாரணமாக விளங்கும் இந்த இளம் இரட்டையரை வாழ்த்துவோம். நாட்டின் உயர்வு, கௌரவம் என்று வரும்போது தனிநபர் விருப்பு-வெறுப்புகளுக்கு இடமில்லை. அனைவரின் இலக்கும் சிந்தையும் ஒருமுகப்பட வேண்டும் என்று உணர்த்தியதற்காக அவர்களை மீண்டும் வாழ்த்துவோம்.

பிரெஞ்சு ஓபன் பந்தயத்துக்கு இரட்டையர் போட்டியிலும் விம்பிள்டனிலும் அடுத்தடுத்து வென்றுள்ளவர்கள், வரவிருக்கும் அமெரிக்க ஓபன் பந்தயத்திலும் வெற்றியை அள்ளிக் கொள்ளட்டும்.

**இந்திய அணியின் முன்னாள் கிரிக்கெட் வீரரும் கேப்டனுமான கபில்தேவ், "கார்கிலில் யுத்தம் நடக்கும் இந்தச் சூழலில் பாகிஸ்தானுடன் இந்திய கிரிக்கெட் அணி விளையாடக் கூடாது" என்று கூறியுள்ளார். டெண்டுல்கரும் இக்கருத்தை வரவேற்றிருக்கிறார்.**

**இது குறித்து, "நீங்கள் என்ன நினைக்கிறீர்கள்?" என்று பொது மக்கள் சிலரிடம் கேட்டோம்.**

**ஹரித்தேஷ் (பி.காம் படிக்கும் கல்லூரி மாணவர்):**
டைம்பீயிங் விளையாடக் கூடாது. சிச்சுவேஷன் அமைதிக்குத் திரும்பினால் விளையாடலாம். நமக்கு ஸ்போர்டஸ் ஸ்பிரிட்தான் முக்கியம். எந்தச் சூழ்நிலையிலும் நாம் பாகிஸ்தான் ஆட்டக்காரர்களை எதிரிகளாக நினைப்பது தவறு.

**அலிஅஹமத் (ஆட்டோ ஓட்டுபவர்):**
பாகிஸ்தானோட விளையாடக் கூடாது. நானும் முஸ்லிம்தான். ஆனா, இந்தியன். கார்கில்ல சண்டை நடக்குது. சண்டை முடிஞ்சு நல்லமுறைல ரெண்டு நாட்டுக்கும் சமரசம் ஏற்பட்டுச்சுன்னா, அவங்களோட விளையாடறதைப் பத்தி யோசிக்கலாம். ஆஸ்திரேலியா, நியூசிலாந்துன்னு மற்ற நாடுகளோட நாம விளையாடறப்போ அதை விளையாட்டா நினைக்கிறோம். ஆனா, பாகிஸ்தானோட விளையாடறப்ப மட்டும் ஒரு எதிரியோட சண்டை போடுற நினைப்புத்தான் வருது. அதை மாற்றவும் முடியலையே!

**முகம்மது அலி (தோல் பொருள்கள் (பெல்ட் முதல் பேக் வரை) விற்கும் கடையில் வேலை பார்ப்பவர்):**
விளையாடக் கூடாது. ரெண்டு நாட்டுக்கும் இடையில பிரச்சனை இல்லாம இருக்கறப்போ விளையாடினா தப்பில்லை. பிரச்சனை இருக்கறப்போ விளையாடுறது சரியில்லை.

# பாக். அணியுடன்



• ஹரித்தேஷ்

• முகம்மது அலி



• தனசேகர்



• அலி அஹமத்



• ஆனந்த்



**முத்துராமலிங்கம் (அண்ணா சாலையிலுள்ள ஒரு சுரங்கப்பாதைக் கருகில் மாலை நேரத்தில் இட்லி, ஆம்லெட், புரோட்டா விற்கும் கையேந்தி பவன் கடை நடத்துபவர்):**
கிரிக்கெட் ஒரு விளையாட்டு. போட்டிகளில் இந்தியா கலந்துக் கணும். வெற்றியும் தோல்வியும் வீரனுக்கழகும்பாங்க. விளையாடலாம். தப்பே கிடையாது.

**தனசேகர் (பழைய வீடியோ கேசட்டுகளை விற்கும்**

வியாபாரம்):

எனக்கு இரிக்கெட்லல்லாம் இன்டரஸ்ட் இல்லீங்க. அதனால அதைப் பத்தி சொல்லத் தெரியலை.

**பிரபாகரன் (மாலை நேரங்களில் தெருவோரத்தில் 'சான்ட்விச்' வியாபாரம் செய்பவர்):**

விளையாடக் கூடாது. இப்பத்தி நிலவரம் அந்த மாதிரி இருக்கு. விளையாடறது ரொம்ப டேஞ்சர்.

**கோடீஸ்வரன் (தயாரிப்பாளரிடமிருந்து, டிஸ்ட்ரிபியூட்டருக்கு படம் வாங்கித் தரும் ஃபிலிம் மீடியேட்டர் வேலை பார்ப்பவர்):**

கட்டாயம் விளையாடணும். விளையாடி ஜெயிக்கணும். பாகிஸ்தானோட போராடி புலிமலையை கைப்பற்றின மாதிரி வெற்றிக் கோப்பையையும் நாம கைப்பற்றணும்.

**ஆனந்த் (விளையாட்டுப் பொருட்கள் விற்கும் கடையில் சேல்ஸ் மேனாக பணி புரிபவர்):**

விளையாடக் கூடாது. கார்கில்ல பிரச்னை நடந்துட்டு இருக்கறப்போ எப்படி சார் விளையாட முடியும்?

• பிரபாகரன்

• எஸ்.வி. நாதன்

• ஸ்ரீனிவாஸ்

• ராஜேந்திரா லிங்கம்

• கோடீஸ்வரன்

# கிரிக்கெட் விளையாடலாமா?

**ஸ்ரீனிவாஸ் (ஸ்போர்ட்ஸ் சைக்கியாட்டிரிஸ்ட்):**

ஸ்போர்ட்ஸை அரசியலோட சம்பந்தப்படுத்தக் கூடாது. ஸ்போர்ட்ஸ் என்பது மன சந்தோஷத்துக்காகவும், உடல் நலனுக்காகவும் விளையாடுவது. அதுனால, இந்தியா பாதிக்கப்பட்டிருக்கிற இன்றைய சூழ்நிலை விளையாடக் கூடாது. அது நமக்கு சந்தோஷத்தைத் தராது.

**எஸ்.வி. நாதன் (செக்யூரிட்டி கார்டாக பணிபுரிபவர்):**

தாராளமா விளையாடலாம். சண்டை வேற, விளையாட்டு வேற. விளையாட்டு குழந்தைக்குக் கூட பொதுவானது. ஜெயிச்சாலும், தோத்தாலும் ரெண்டு அணியும் கைகுடுத்துட்டுப் போறது 'இது விளையாட்டுன்னு' காட்டத்தானே!

— **கே. பாலசுப்ரமணியன்**

படங்கள்: **எம். சண்முகம்**



# கோபாலபுரத்துக் குழப்பம்!

**தேர்தல் திட்டமிட்டபடி நடக்கும் என்று பிரதமர் சொல்லிவிட்டார். எம்.எஸ்.கில்லும் அறிவித்து விட்டார். ஆனால் மாதாந்தர மளிகைச் சாமான் பொட்டலங்கள் மாதிரி இருக்கும் தனித் தனிக் கட்சிகள் எல்லாம், தலைமைக் கட்சியுடன் இன்னும் தொகுதிகள் பற்றிப் பேசி முடிவுக்கு வரவில்லை. "அதில் எல்லாம் ஒண்ணும் பிரச்னைகள் இல்லை" என்று எல்லா குட்டித் தலைவர்களும் ரொம்பவே உறுதியாகச் சொல்லி வருகிறார்கள்.**

**அவ்வளவு சர்வ சாதாரணமான விஷயமா இது? நாம் அப்படி விட்டுவிடத் தயாராய் இல்லை. கொஞ்சம் உள்ளே புகுந்து (கற்பனையிலாவது) பார்ப்போமே?**

## தி.மு.க. அணி

**கலைஞர்:** இன்னும் யாரானும் வாசல்ல நம்ப கூடக் கூட்டணி வச்சுக்கக் காத்திட்டிருக்காங்களா, பாரு. அப்புறம் கண்டுக்கவே இல்லேன்னு அறிக்கை உட்டுடப் போறாங்க.

**மாறன்:** நல்லா எட்டி எட்டிப் பார்த்திட்டேன். உள்ளே காத்துக்கிட்டிருக்கற டாக்டர் ராமதாஸ், வைகோ, இல. கணேசன், வாழப்பாடியார் இவங்க நாலு பேர்தான். ஈஸியா முடிச்சிடலாம்.

**கலைஞர்:** சரி. பா.ம.கவுக்கு எத்தனை? அஞ்சா, ஆறா?

**மாறன்:** மூணுல ஆரம்பிங்க. அப்பத்தான் அஞ்சு, ஆறுல வந்து நிக்கும்.

**கலைஞர்:** ஐயோ, மூணா? மூஞ்சில அடிக்கறாப்பல வேணாம்னு சொல்லிட்டுப் போய்ட்டார்னா?

**மாறன்:** எங்க? போயஸ் கார்டனுக்கா? பயப்படாதீங்க. போக மாட்டார். டூ லேட்.

**கலைஞர்:** 36 போயஸ் கார்டன் இல்லேன்னா, 36 வாரன் ரோடுக்குப் போய்ட்டா? மூப்பனார் இன்னும் நடுநிலை இல்லே வகிக்கறார்? கோபாலபுரமும் வராம, போயஸ் கார்டனுக்கும் போகாம, நடுவுல மியூசிக் அகடமிகிட்டயே இல்ல நின்னு புது ராகம் பாடறார்!

**மாறன்:** நீங்க ஒண்ணும் கவலைப் படாதீங்க. முதல்ல டாக்டர் ஐயாட்ட தொகுதிப் பங்கீட்டை முடியுங்க.

**கலைஞர்:** அப்ப, டாக்டரை வரச் சொல்லு.

**ராமதாஸ்:** வணக்கம். எப்படி இருக்கீங்க? உடம்பு நல்லாயிடிச்சா?

**கலைஞர்:** நன்றி. நல்லா இருக்கேங்க. இந்தத் தொகுதிப் பங்கீடு விஷயமா...

**ராமதாஸ்:** அதான் வந்தவாசி, தர்மபுரி, வேலூர், சிதம்பரம், மயிலாடுதுறை எல்லாம் 'எங்க' தொகுதிங்களாச்சே! இதுக்கு மேலே நீங்க இன்னொரு அஞ்சு கொடுத்தா திருப்தி தான்.

**கலைஞர்:** இன்னும் அஞ்சா?

**ராமதாஸ்:** ஆமா. கடலூர், கிருஷ்ணகிரி, அரக்கோணம், செங்கல்பட்டு, ஸ்ரீபெரும்புதூர் சேர்த்துப் பத்தாக் கொடுத்துடுங்க.

**கலைஞர்:** மொத்தம்



# போயஸ் தோட்டத்து சிறப்புக் குலுக்கல்!

40 சீட்டு-பாண்டி சேர்த்து. உங்களுக்கே பத்து கொடுத்துட்டா மத்தவங்களுக்கு நான் என்ன பதிலுங்க சொல்லுவேன்?

**ராமதாஸ்:** பாக்கி முப்பது இல்லே? சமாளிச்சுக்குங்க.

**கலைஞர்:** வைகோ பத்து, இல. கணேசன் பத்து கேட்டா என் கதி அதோகதிதாங்க.

**ராமதாஸ்:** அப்படி எல்லாம் விரக்தியாப் பேசிடாதீங்க. 'நாளை நமதே. நாற்பதும் நமதே..'

**கலைஞர்:** உக்காருங்க, உக்காருங்க. அவசரப்படாதீங்க. போயஸ் தோட்டப் பாட்டெல்லாம் பாடறீங்களே? அங்க ஏற்கெனவே கேட்டுக்கு உள்ளேயும் வெளியேயும் நிறையப் பேர் காத்துக்கிட்டு இருக்காங்களாம்... உக்காருங்க. அஞ்சு நிச்சயம் கொடுத்திருவோம். அப்புறம் ஏதானா மீறுதான்னு பார்த்து, அலாட் பண்ணிடலாம்.

**ராமதாஸ்:** சரி. கடலூர், அரக்கோணம்னு ரெண்டு. மூணு 'எங்க' தொகுதியே இருக்கு. மறந்துராதீங்க. போய்ட்டு வரேன்.

*(டாக்டர் ராமதாஸ் போய், மாறன் வருகிறார்)*

**மாறன்:** என்ன, டாக்டர் ஐயா ரொம்ப மகிழ்ச்சியா துள்ளிக்குதிச்சிட்டுப் போயிட்டிருக்கார்? நாலா, அஞ்சா?

**கலைஞர்:** அதை ஏன் கேக்கறே? பத்து கேட்டார். அஞ்சுன்னு சொல்லியிருக்கேன். இன்னும் மூணு சேர்த்துக்குங்கன்னுட்டுப்

போயிட்டார். சரி. இல. கணேசனை வரச் சொல்லு.

**கணேசன்:** வணக்கம். தாய்நாடு வாழ்க. தமிழ்நாடு வாழ்க. வந்தே மாதரம். ஜெய்ஹிந்த். தொகுதிப் பங்கிடு பத்திப் பேச நான் மட்டும் வந்தாப் போதும்னீங்களாம். பிரதமர் வாஜ் பாய் வரட்டுமான்னு கேட்டார். அமைச்சர் அத்வானி நானும் வரவான்னு கேட்டார். தலைவர் தாக்கரே கூட வரட்டுமான்னு கேட்டார். ரங்கராஜன் குமாரமங்கலம் வரட்டான்னு கேட்டார்...

**கலைஞர்:** இது சின்ன விஷயங்க... பெரிய வங்களை எல்லாம் எதுக்குக் கூப்புட்டு சிரமப் படுத்தறீங்க? நீங்க மட்டும் போதுமே? தர்றதை வேணாம்னா சொல்லப் போறீங்க?

**கணேசன்:** அதானே! கார்கில்ல போரிட்டு வெற்றி வாகை சூடிய பாரதிய ஜனதாவோட பவர்-பிரஸ்டீஜ் பத்தி எல்லாம் உங்களுக்குத் தெரியாதா? இல்லே; அகில இந்திய ரீதியிலே காங்கிரசுக்கு எதிரா இருக் கற ஒரே பெரிய கட்சி எங்களோடதுதான்னு உங்களுக்குத் தெரியாதா?

**கலைஞர்:** பெரிய பெரிய வார்த்தை எல் லாம் சொல்லறீங்க... திருச்சி, கோவை, நாகர் கோவில்-மூணு உங்களுக்கு அலாட் பண்ணிட்டேன். வேற யாருக்கும் இதைக் கொடுக்கறதில்லேன்னு டிசைட் பண்ணிட் டேன். சரிதானே?

**கணேசன்:** தென் சென்னை இல்லியா? சிவகங்கை இல்லியா? பெரியகுளம் இல்லியா? ராமநாதபுரம் இல்லியா?

**கலைஞர்:** எல்லா ஊருங்களும் அப் படியே இருக்குங்க. எங்கே போயிடுது? ஆனா இன்னம் அல்லயன்ஸ் பார்ட்டிங்க இருக்கே. அவங்களையும் கவனிச்சுக்கிட வேணாமா?

**கணேசன்:** நல்லாக் கவனிச்சுக்குங்க. வேணாங்கலே. ஆனா பா.ஜ.க. ஆல் இண் டியா பார்ட்டி. அடுத்து, பிரதமர் வாஜ்பாய் தலைமைல ஆட்சி அமைக்கப் போற பார்ட்டி...

**கலைஞர்:** நீங்க பொதுக்கூட்ட மேடைல பேசறதை எல்லாம் இங்கியே பேசிடுவீங்க போல! டாக்டர் ஐயாவுக்கே நாலுதான் பிராமிஸ் பண்ணியிருக்கேன்.

**கணேசன்:** நாலா? என்னங்க, போற போக் குல அஞ்சு விரலையும் ஆட்டி ஆட்டிக் காமிச்சுட்டுப் போனாருங்களே?

**கலைஞர்:** ஆட்டி ஆட்டின்னா?

**கணேசன்:** ஒரு தடவை ஆட்டினா அஞ்சு. இன்னொரு தடவை ஆட்டினா? பத்து.

**கலைஞர்:** இல்லேங்க. அவர் உங்களுக்கு டாடா காமிச்சுட்டுப் போயிருப்பார். நீங்க தவறாப் புரிஞ்சுக்கிட்டிருப்பீங்க.

**கணேசன்:** திருச்செந்தூர், செங்கல்பட்டு, கிருஷ்ணகிரி எல்லாம் கூட நீங்க எங்களுக்கு ஒதுக்கிடணும்ங்க. எல்லாம் ஸாலிடா பா.ஜ.கவுக்கு ஓட்டு விழுங்க.

**கலைஞர்:** ஐயோ, அங்க எல்லாம்தான் நம்ப கூட்டணிக் கட்சிங்களுக்கு ஒதுக்கி இருக்கோம். அங்கியே நீங்களும் போட்டி போட்டா கூட்டணிக் கொள்கை என்ன ஆகிறது? யோசிச்சுப் பாருங்க.

**கணேசன்:** அப்போ பிரதமர் வாஜ்பாய் கிட்ட சொல்லி, உங்களாண்ட பேசிடச் சொல் றேன். ரிசர்வ்ட் சீட் ஒண்ணுகூடக் கொடுக்க மாட்டிங்க போல. தென்காசி, சிதம்பரம், ஸ்ரீபெரும்புதூர் இங்க எல்லாம்கூட பா.ஜ.கவுக்கு ஸ்ட்ராங் காண்டிடேட்ஸ் இருக் காங்க...

**கலைஞர்:** இருப்பாங்க. இருப்பாங்க. நான் இல்லேங்கலியே?

**கணேசன்:** சரி, நான் போயிட்டு வரேங்க. ராத்திரி பிரதமர் வாஜ்பாய் நாட்டு மக்களுக் குச் செய்தி... சாரி, பிரதமர் வாஜ்பாய் உங்க ளோட பேசுவார். வரேங்க!

**கலைஞர்:** போய்ட்டு வாங்க.

*(இல. கணேசன் போக, மாறன் வருகிறார்)*

**மாறன்:** என்ன ஆச்சு?

**கலைஞர்:** கொழந்தை அழுதது. அட சட்! அவருக்கும் பத்து சீட் வேணுமாம். ஏண்டா இந்த வம்புன்னு இப்பத் தோணுது. மூப்ப னார் மாதிரி தனியாவே இருந்திருந்தா இந்தப் பிரச்னையே இல்லே!

**மாறன்:** இதுக்கெல்லாம் அரண்டுடக் கூடாது. கூட்டணின்னா இதெல்லாம் சக ஜம்னு தெரியாதா உங்களுக்கு? சரி. வைகோவை வரச் சொல்றேன். ரெண்டே ரெண்டுதான். ஓகே?

**வைகோ:** (கலைஞரை இறுகக் கட்டி அணைத்து) எப்படி இருக்கீங்க?

**கலைஞர்:** நொறுங்கிப் போய்ட்டேன்- பாசப் பிணைப்புல!

**வைகோ:** நீங்கள் தந்தை, நான் பிள்ளை. பாசம் விட்டுப் போகுமா? நேசம் மறக்குமா நெஞ்சம்?

**கலைஞர்:** இப்பத்தான் எனக்கு சனி, ஜலதோஷம் எல்லாம் போச்சு... மதிமுகவுக்கு மூணு இடங்கள் ஒதுக்கியிருக்கோம். திருப்தி தானே?

**வைகோ:** சிவகாசி, திண்டிவனம், பழநி தானே? தென் மாவட்டங்களை மறந்துட்டீங் களா?

**கலைஞர்:** தேர்தல் தேதி அறிவிக்கிறதுக்குள்ளே இன்னும் எத்தனை கட்சிங்க நம்ம கூடக் கூட்டணி வச்சுக்க வரப்போகுதோ? அவங்களையும் கவனிச்சுக்கணும் இல்லே?

**வைகோ:** கவனிச்சுக்குங்க. வேணாங்கலே. நம்மையும் கூடவே கவனிச்சுக்குங்க, அவ்வளவுதான். நம் படை இளம் படை புரட்சிப் படை. அனைத்திலும் வெற்றி வாகை சூடுவோம்!

**கலைஞர்:** சங்கொலியா முழங்கறீங்க! நன்றி. போய்ட்டு வாங்க. அப்படியே வாழப்பாடியாரை வரச் சொல்லுங்க.

*(வைகோ போய், வாழப்பாடியார் வருகிறார்)*

**வாழப்பாடி:** கூட்டணியிலேயே எங்க கட்சிதாங்க 'இன்னும் கொடு இன்னும் கொடு'ன்னு கேட்காத கட்சி.

**கலைஞர்:** ஆகா, உங்களை மாதிரியே எல்லாரும் பெருந்தன்மையா இருந்துட்டா எனக்குப் பிரச்னையே இல்லே. நீங்க கேக்கறது ஒண்ணே ஒண்ணு. கொடுத்திட்டேன்!

*(வாழப்பாடி போய், மாறன் வருகிறார்)*

**மாறன்:** மூணு பேருக்கும் அஞ்சு அஞ்சு கொடுத்துட்டு, வாழப்பாடியாருக்கு ஒண்ணு கொடுத்துட்டா 16 ஆகுது. மீதி 24.

**கலைஞர்:** சிறுபான்மைக் கட்சியில இருந்து யாரானும் வந்தா அவங்களுக்குக் கொடுக்க வேணாம்? ஆர்.எம்.வீ.வேற இருக்குறார். திருநாவுக்கரசு வேற கேக்குறார். கடைசி நிமிஷத்துல பழைய கூட்டணியே பரவாயில்லேன்னு மூப்பனார் வீடு தேடி வந்திட்டா?

**மாறன்:** கவலையே படாதீங்க. அவர் வழி தனி வழி!

## அ.இ.அ.தி.மு.க. அணி

**ஜெயலலிதா:** காங்கிரசுக்கு அஞ்சு சீட்டான்னு அடிச்சுச் சொல்லிட்டேன். அப்படியே அரண்டு போய்ட்டாங்க.

**சசிகலா:** அதுவே அவங்களுக்கு அதிகம். அஞ்சு சீட்டுக்கே ஆளு ஏது அவங்க கட்சியில?

**ஜெ:** அஞ்சு கோஷ்டித் தலைவருங்களுக்கும் ஆளுக்கு ஒண்ணு! அதான் அஞ்சன்னேன்! ஹஹ்ஹஹ்ஹா!

**சசி:** அப்புறம் தேவர் பேரவை, இந்திய யூனியன் லீக், கம்யூனிஸ்ட் வலது, கம்யூனிஸ்ட் இடது, கம்யூனிஸ்ட் சென்டர்...

**ஜெ:** கம்யூனிஸ்ட் சென்டரா? யார் அது?

**சசி:** தா. பாண்டியன்தான். வேற யாரு?

**ஜெ:** ஐயோ அந்த ஆளோட நிலைமையைப் பார்த்தா சிரிப்பாத்தான் வருது. ஆனா



''ஏன், உன் மகன் மீது எரிஞ்சு விழறே?''

''சினிமாக்காரங்க மாதிரி, ஒவ்வொரு முறை படமெடுக்கும்போதும், சென்டிமெண்ட் பார்க்கறான்!''

– ரேஸ். கிருஷ்ணரத்னம்

பாவம், பொழச்சுப் போகட்டும். ஒரு சீட் கொடுத்து வைப்போம்.

**சசி:** நிறைய மைனாரிடி கட்சிங்க புதுசா புதுசா நம்பளை நம்பி ஆரம்பிச்சிருக்காங்களே?

**ஜெ:** சரியாப் போச்சு! அவங்களை எல்லாம் வீரமணிகிட்ட அனுப்பிச்சிட வேண்டியதுதான். அவர் பாத்துக்குவார்!

**சசி:** முக்கியமான தொகுதி மதுரை. சுப்பிரமணிய சுவாமியை மறந்துட்டீங்களா?

**ஜெ:** மதுரைல நம்ப காளிமுத்துவைப் போடலாம்னு இருக்கேன். அதனால, சுவாமிக்கு வேற தொகுதி கொடுப்போம். ஜெயிக்கறதும் ஜெயிக்காததும் அவர் பாடு!

**சசி:** சேடப்பட்டியார், தம்பிதுரை எல்லாருக்கும் பழைய தொகுதிதானே?

**ஜெ:** பார்லிமென்ட்டுல வோட்டுப் போடத் தெரியாதவருக்கும், சட்டத்துறையையே கையில வச்சிருந்தும் நமக்கு உதவாத பேர்வழிக்கும் எதுக்கு டிக்கட் கொடுக்கணும்? பாவம், தேவகௌடா. ரொம்பக் கெஞ்சிக் கேட்டுக்கிட்டார். அதனால ஜி.ஏ. வடிவேலுக்கு ஒரு சீட். போகட்டும்.!

**சசி:** சரி. இந்தக் கூட்டணிக் கட்சிங்களுக்கு எல்லாம் எந்த எந்தத் தொகுதின்னு கேட்டு டிமாண்ட் பண்ண வர மாட்டாங்களா?

**ஜெ:** என் கமாண்ட்தான் சட்டம்னு தெரியாம அவங்க டிமாண்ட் பண்ணிடுவாங்களா என்ன! முதல்ல நம்ம தொகுதிகளை ஒதுக்கிக்குவோம். மீதியை குலுக்கல் முறைல விநியோகம் பண்ண வேண்டியதுதான்.

— சாருகேசி

டைரக்டர் டி. ராஜேந்தர்

# இல்லை என்றேன்!

பசிதான், பணம் சம்பாதிக்க ஓர் உந்துதல். ஆனால் அதே பணம்தான் மண்ணாசை, பொன்னாசை, பெண்ணாசைக்கும் உந்துதல்!

இந்தப் பணம் இல்லாத காரணத்தால், நான் என் வாழ்க்கையின் ஆரம்ப கால கட்டங்களில் இழந்தவை ஏராளம். பள்ளிக்கூடம் திறக்கிறபோது, பாடப் புத்தகம் வாங்கவே வீட்டில் காசு இருக்காது. அப்படிப்பட்ட சூழ்நிலையில், எப்படி புது யூனிபாரம் வாங்க முடியும்? 'கொஞ்ச நாள் போகட்டும். எப்படியாவது சமாளித்து, உனக்கு யூனிபாரம் வாங்கிக் கொடுத்து விடுகிறேன்' என்று வீட்டில் சொல்லி விட்டார்கள். எனக்கும் வீட்டு நிலைமை தெரியுமாகையால், அடம்பிடிப்பதும், அழுது புரளுவதும் அர்த்தமில்லாதவை. எனவே, யூனிபாரம் அணியாமல் பள்ளிக்குப் போவேன்.

ஆனால், என் வகுப்பு ஆசிரியருக்கு, என் குடும்பத்து ஏழைமை பற்றிய கவலை இல்லை. வெள்ளைச் சட்டையும், நீல டிராயரும் இல்லையென்றால், வகுப்பை விட்டு வெளியே போய் நிற்கச் சொல்லி விடுவார். நான் மறுவார்த்தை பேசாமல், வெளியே போய் விடுவேன். நான் நிற்பது வெளியில்தான் என்றாலும், என் கவனமெல்லாம் வகுப்புக்கு உள்ளேதான் இருக்கும்.

நாலைந்து நாள் இப்படியே கழிய, ஆசிரியர் 'எப்போது யூனிபாரம் வாங்கப் போகிறாய்?' என்றபோது, "எனக்குத் தெரியாது, ஏன் என் வீட்டுக்கே அது தெரியாது. பணம் கிடைக்கிறபோது, நிச்சயம் எனக்கு யூனிபாரம் தைத்துக் கொடுத்து விடுவார்கள். ஆனாலும் ஒரு விஷயம்! உங்களுக்குத்தான் யூனிபாரம் முக்கியம். என்னைப் பொறுத்த வரை பள்ளிக்கு வரும் மாணவனுக்கு பாடம்தான் முக்கியம். நான் வகுப்பின் வெளியில் நின்று கொண்டிருந்தாலும், நீங்கள் நடத்திய பாடத்தை இப்போது என்னால் சொல்ல முடியும்'' என்று சொல்லிவிட்டு, "தேரா மன்னா! செப்புவதுடையேன்!" என்று ஆரம்பித்து கடகடவென அவர் முதல் நாள் நடத்தின செய்யுளைச் சொல்லி முடித்தேன். அவர் பிரமித்துப் போனார். நான் அத்துடன் விட்டேனா! "உள்ளே, யூனிபாரம் அணிந்து, இருக்கும் மாணவர்கள் எத்தனை பேருக்கு இப்படி கடகடவென்று சொல்லத் தெரியும்? கேட்டுப் பாருங்கள்!'' என்றேன். ஆசிரியர் மௌனமானார்.

எனக்கு சின்ன வயசிலிருந்தே இசைமீது அடங்காத ஆர்வம். படிக்கிற காலத்தில் ரொம்பக் கஷ்டப்பட்டு, ஒரு இசையாசிரியரிடம், ஆர்மோனியம் கற்றுக் கொண்டேன். வகுப்பில் கற்றுக் கொண்டதை வீட்டில் பயிற்சி செய்து பார்க்க ஒரு ஆர்மோனியம் இருந்தால் நல்லது. ஆனால் ஆர்மோனியம் வாங்குகிற அளவுக்கு வசதி ஏது? எனவே, இசையாசிரியர் வீட்டுக்கு வகுப்பு நேரத்துக்கு அரைமணி நேரம் முன்பே போய் விடுவேன். அவர் வீட்டு ஆர்மோனியத்தில் அந்த அரை மணி நேரம் வாசித்துப் பயிற்சி செய்வேன். என் வீட்டில், நிலவிய சூழ்நிலையில், ஆர்மோனியம் வாங்கித் தரும்படி கேட்க முடியாது என்றாலும், என் வீட்டில் நானே ஒரு ஆர்மோனியத்தை உருவாக்கினேன். எப்படித் தெரியுமா? தரையில் சாக்பீசால், ஆர்மோனியத்தின் கறுப்பு, வெள்ளைக் கட்டைகளை வரைந்து, அவற்றின் மேல் விரல்களை வைத்து சரிகமபதநி என்று வாயால் ஸ்வரம் எழுப்பி, பயற்சி செய்வேன்.'

மாயவரத்தில் கல்லூரியில் பட்டப் படிப்பு படித்தபோது, கல்லூரி நகரிலிருந்து

சற்று தள்ளி இருந்தது. ஒரு சைக்கிள் இருந்தால் சௌகரியமாக இருக்கும் என்று மனது நினைத்தாலும், அதற்கு வசதி கிடையாது. என் நண்பன் ஒருவன் தினமும் என்னை கல்லூரிக்கு தன்னுடைய சைக்கிளில் டபுள்ஸ் அழைத்துக் கொண்டு போவான். அவன் சைக்கிளை மிதிக்க, நான் பின்னால் உட்கார்ந்து கொண்டு போவது எனக்கு ரொம்ப தர்ம சங்கடமாக இருக்கும். நான் அந்த நண்பனைப் பின்னால் உட்கார வைத்து, மிதித்துக் கொண்டு போகிறேன் என்பேன். சில நாட்கள் அப்படிச் செய்துமிருக்கிறேன். ஆனால் அதற்கு அவன் ஒப்புக் கொள்ள மாட்டான். காரணம், அவன் பருமனானவன். அவனை உட்காரவைத்து டபுள்ஸ் மிதித்துச் செல்ல நான் திணறிப் போவேன். எனவே, 'நீ பின்னால் உட்கார்! நான் சைக்கிளை மிதிக்கிறேன்' என்பான் அவன்.

பின்னால் உட்கார்ந்து கொண்டு சும்மா போகாமல், பாட்டுகள் பாடுவேன். இதன் மூலமாக நான் அவனுக்குச் சுமையாக இருந்தாலும் அந்தப் பயணத்தை சுகமான தாக மாற்றினேன். ஆக, சைக்கிள் ஒன்று வாங்கிக் கொள்ள வசதியில்லாது போனாலும் என் பாட்டுத்திறன் வளரவும் என் நண்பனுக்கு நான் சுமையாக இல்லாமல் சுகமாக இருக்கும்படியும் செய்து கொண்டேன்.

**க**ல்லூரியில் முதல் மாணவனாகத் தேறி, தங்க மெடல் வாங்கியபின், அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் எம்.ஏ. வகுப்பில் சேர்ந்தேன். அங்கேயும் ஹாஸ்டலில் சேர்ந்து படிக்க வசதி கிடையாது. ரயிலில் சீசன் டிக்கெட் எடுத்துக் கொண்டு, தினமும் மாயவரத்திலிருந்து, சிதம்பரம் வந்து போவேன். அந்த சீசன் டிக்கெட் வாங்கவும் நான் பட்ட பாடு எனக்குத்தான் தெரியும்.

காலை ஆறு மணிக்கு வீட்டிலிருந்து நடந்து மாயவரம் ரெயில்வே ஸ்டேஷன் வந்து ரயில் பிடித்தால், பல்கலைக் கழக நேரத்துக்கு ஒருமணி நேரம் முன்னதாகவே ரயில் சிதம்பரம் ஸ்டேஷன் வந்து விடும். இந்த நேரத்தையும் ரயில் பயண நேரத்தையும் நான் வெட்டியாய்க் கழித்தது இல்லை. நிறைய படிப்பேன்; கவிதைகள் எழுதுவேன். அப்போதைய என் அனுபவங்களில் கால் பகுதி 'ஒரு தலை ராகம்' படத்தில் பயன்பட்டிருக்கும். ஆக இந்த அனுபவத்துக்கும் மூல காரணம், என்னிடம் இல்லாத பணம்தானே!



இன்று நான் போராடி, வெற்றி பெற்று விட்டேன். நிறைய பணம் சம்பாதித்து விட்டேன். ஆனாலும் பணம் என்னை வெற்றி கொள்ளவில்லை. பணத்தை இன்னமும் ஒரு வில்லன் போலவே நான் பார்க்கிறேன். அந்த வில்லனை எப்போதும் என் கட்டுப்பாட்டில் அடக்கி வைத்திருப்பதில்தான் எனக்கு சந்தோஷமும்!

சந்திப்பு: **கௌதம்**
படம்: **ஸ்ரீஹரி**

# தேர்தல் வந்தாச்சு!

ஆதாயம் கருதி ஆட்சியைக் கவிழ்ப்பது
அரசியல் வாதிகள் தொழிலாச்சு - மறு
கோதாவில் இறங்கும் தேதியும் குறித்து
குதிப்பவர் பேர்களும் வெளியாச்சு!

மீசையை முறுக்கிப் பிரிந்தவர் பலரும்
மீண்டும் ஒன்றாய் இணைஞ்சாச்சு - பதவி
ஆசையில் புலியுடன் கூட்டணி அமைக்க
ஆட்டு மந்தைகள் துணிஞ்சாச்சு!

எந்தத் தொகுதிக்கு எத்தனை கோடி?
என்கிற பேரமும் முடிஞ்சாச்சு - வென்று
வந்ததும் அதுபோல் பன்மடங் காக
வசூலிக்கும் ஞானமும் அடைஞ்சாச்சு!

தேனாய் ஒழுகும் தேர்தல் அறிக்கை
தினமும் ஒன்றாய் வரலாச்சு - வெறும்
கானல் நீரா தாகம் தணிக்கும்?
கசப்பு அனுபவம் பெரலாச்சு!

இலவச வேட்டி சேலைகள் தானே
இங்கொரு ஓட்டின் விலையாச்சு - நாட்டில்
உலவிடும் வறுமை, பசிப்பிணி ஏதும்
ஒருசதம் குறையா நிலையாச்சு!

சாதியும் மதமும் தேர்தலில் புகுந்து
சனநா யகத்தின் உலையாச்சு - தினம்
வீதிக்கு வீதி அடிதடி கலவரம்
வெட்டுக் குத்துகள் கொலை யாச்சு!

ஏழைமை இல்லா இந்தியம் சமைப்போம்
என்பது எல்லாம் வெறும்பேச்சு - என்றும்
ஊழலும் லஞ்சமும் ஒழியா தென்பது
உலகம் அறிந்த கதையாச்சு!

பலமுறை தேர்தலைப் பார்த்தோம் எனினும்
பாரதம் விடியா இருளாச்சு - எனும்
நிலைமையை நினைந்து அடிவயி றெரிந்து
நீண்டு கிளம்புது பெருமூச்சு!

— தளவை இளங்குமரன்

• விளையாட்டிலும் சூரர்கள்தான்

**கோவை மாவட்டம் உடுமலையிலுள்ள ஏ.நாகூர் ஆர்.கே.ஆர் மேனிலைப்பள்ளியில் இதுவரை எஸ்.எஸ்.எல்.சி, ப்ளஸ் டூ எழுதிய அனைத்து மாணவ – மாணவியரும் பாஸ். அதுவும் எப்படி? 'சூப்பர் ஃபர்ஸ்ட்' மதிப்பெண்கள் பெற்று தேர்ச்சியடைந்துள்ளனர் என்றால் நம்ப முடிகிறதா? எப்படி சாத்தியமாகிறது இச்சாதனை? அப் பள்ளிக்கே ஒரு 'விசிட்' அடித்தோம்.**

**நா**ம் சென்றபோது பள்ளி துவங்கியிருந்தது. எனினும் மாணவர்கள் இருப்பதற்கான சலசலப்போ, ஆரவாரமோ துளியும் காணோம். 'மிலிட்டரிப் பள்ளியோ' என சந்தேகிக்கும் விதமாய்ப் பேரமைதி. ஆசிரியர்கள் பாடம் எடுக்கும் ஒலிகூட மிகச் சன்னமாய்.

முகப்பு அறிவிப்புப் பலகையில் சாதனைப் பட்டியல். இந்த வருட எஸ்எஸ்எல்சி முதல் மதிப்பெண் 483/500. தேர்வு எழுதிய நூற்றி இரண்டு பேரில் நூற்றியொரு மாணவர்கள் எண்பது சதவீதத்திற்கும் மேல் மதிப்பெண் பெற்ற விவரங்கள். பள்ளியின் கடைசி மதிப்பெண் 391/500!



• பள்ளி

ப்ளஸ் டூ அட்மிஷனுக்காக பெற்றோர்கள் – பிள்ளைகளின் நீண்ட க்யூ. கோவை மட்டுமல்லாது சென்னை, சேலம், தர்மபுரி, நீலகிரி போன்ற இடங்களிலிருந்தும், மைசூர், சித்தூர் என மற்ற மாநிலங்களிலிருந்தும்கூட வந்து க்யூவில் நின்றனர்.

"படிச்சா எம் பையன் இதுல படிக்கணும். இல்லே ஊர்ல உட்கார்ந்து வயக்காட்டைப் பார்க்கட்டும்!" எட்டிப் பார்க்கும் கிராமத்துப் பாஷை.

அப்படியென்ன ஈர்ப்பு இந்தப் பள்ளியின் மேல்?

"என்ன சார் இப்படிக் கேட்டுட்டீங்க. இருநூறு, முந்நூறு வாங்கின பையனெல்லாம் ஆயிரக்கணக்குல 'மார்க்' வாங்குதுன்னா சும்மாவா? இந்த எச்எம். மேல எங்களுக்கு அவ்வளவு நம்பிக்கை."

இப்படியொரு நம்பிக்கை எப்படி வந்தது?

"எங்களைப் பொறுத்தவரை எங்க மேல் நம்பிக்கை வைத்து வர்றவங்களுக்கு இடம் இல்லைன்னு சொல்றதில்லை. எஸ்எஸ்எல்சியில் வெறும் இருநூற்றிப் பதினாறு மதிப்பெண் பெற்ற மாணவனைக் கூட ப்ளஸ் ஒன்னில் சேர்த்துக்கொண்டு ப்ளஸ் டூவில் 1028 மதிப்பெண் பெற வைத்திருக்கிறோம். வேண்டு

மானால் லிஸ்ட்டை நீங்களே பாருங்கள்!" என்று எடுத்த எடுப்பில் நம்மிடம் பேசிய பள்ளித் தலைமையாசிரியர் ஆர்.கே. ராமசாமி புள்ளி விவரங்களைக் கைகளில் திணித்தார். அவர் சொன்னது போலவே வேறெங்கோ பத்தாவதில் இருநூற்றிச் சொச்சம் மதிப்பெண்கள் பெற்று, இங்கே வந்து சேர்ந்து ப்ளஸ் டூவில் அபரிமித மதிப்பெண்களை அள்ளிக் குவித்திருந்தனர் பல மாணவர்கள். அதில் பலர் ஸ்டேட் ரேங்க் வேறு.

"எல்லா மாணவர்களும் திறமைசாலிகள் தான். அதனால்தான் எப்படிப்பட்ட மாணவர்களையும் இங்கே சேர்த்துக் கொள்கிறோம். நாங்கள் மதிப்பெண்ணை வைத்து மட்டுமே மாணவர்களை மதிப்பீடு செய்வதில்லை!" எனறு கூறும் தலைமையாசிரியர் ஆர்.கே.ஆர், 1986–87 மாநில நல்லாசிரியர் விருது பெற்றவர்.



# "படிச்சா இங்கே படிக்கணும்!"

1993–ல் ஜனாதிபதியிடம் நல்லாசிரியருக்கான தேசிய விருதையும் வாங்கியவர். உடுமலையில் இந்தப் பள்ளியை ஆரம்பிக்கும் முன்னரே (1994–95) பொள்ளாச்சி ஏ. நாகூர் பள்ளி தலைமையாசிரியராக இருந்து தொடர்ந்து 33 வருடங்கள் எஸ்.எஸ்.எல்.சி.யிலும், 15 வருடங்கள் ப்ளஸ் டூவிலும் நூற்றுக்கு நூறு சதம் தேர்ச்சி காண்பித்து அசத்தியிருக்கிறார். இந்த அசத்தலைக் கண்டுதான் அரசே (அப்போதைய அமைச்சர்) இப்படி ஒரு சுயநிதிப் பள்ளியைத் துவங்கச் சொல்லி இவருக்கு ஆலோசனை தந்து அங்கீகாரமும் தந்ததாம்!

பெரும்பாலும் இங்கு படிக்கும் அனைவருமே ஹாஸ்டல் மாணவ – மாணவியர்தான். இந்த வருடம் மட்டும் மாணவ – மாணவியரின் எண்ணிக்கை ஆயிரத்து இருநூறு பேரில் ஆயிரம் பேர் ஹாஸ்டல் வாசிகள்!

எல்லாம் சரி. படிப்பில் அனைவரையும் அசத்துகிற அளவு அப்படி என்ன பயிற்சி கொடுக்கிறார்கள்?

எஸ்எஸ்எல்சி, ப்ளஸ் டூ வைப் பொறுத்த வரை காலை 8.30 துவங்கி மாலை 5.30 மணி வரையிலுமே கடுமையான பயிற்சி இருக்குமாம். டிசம்பர் மாதத் துவக்கத்திலேயே அனைத்து பாடங்களையும் முடித்து விடும் வழக்கமுள்ளது. இதற்குள்ளாகவே ஒவ்வொரு மாதமும் கடைசி நான்கு நாட்கள் மாதாந்திரத் தேர்வுகள். பத்தாம் வகுப்பு, பன்னிரண்டாம் வகுப்புகளுக்குக் கூடுதலாய் மூன்று 'திருப்பத் தேர்வு' (Revision Test)கள். இவர்களுக்கு விளையாட்டு வகுப்புகளே கிடையாது! ஹாஸ்டலிலும் பத்து மணி வரை 'ரவுண்ட்ஸ்' வரும் ஆசிரியர்கள்.



* தலைமை யாசிரியர்

"சுருக்கமாகச் சொன்னால் ஒரு மாணவன் தனது பொதுத்தேர்வைச் சந்திப்பதற்குள்ளாக, ஒரு கட்டுரையையோ, ஒரு கேள்வி பதிலையோ முப்பது தடவைக்கும் குறையாமல் நாங்கள் வைக்கும் தேர்வுகளில் எழுதி விடுகிறான். இடையிடையே நிறைய ஸ்பெஷல் க்ளாஸ் வேறு. எந்த ஒரு மாணவனும் எந்த ஒரு கேள்வி பதிலையும் படித்துத் தேர்வு எழுதாமல் தப்பிக்கவே முடியாது. அதனால் இங்கே ஒரு மாணவன் பெயிலானால் ஒட்டுமொத்த மாநிலமே ஃபெயி



• மாணவி பிரேமா

## ஒரு மாணவியின் குமுறல்!

ஆர்.கே.ஆர் பள்ளியின் இவ்வருட எஸ்.எஸ்.எல்.சி முதல் மாணவி செல்வி பிரேமா. மாநில அளவில் மூன்றாவதாக வந்த இவர் மூன்று பாடத்தில் சதம். ஆங்கிலத்தில் 94. தமிழில் மட்டும் 89 மதிப்பெண். ''தமிழில் மட்டும் நான் அவ்வளவு குறைவான மதிப்பெண் பெற்றிருக்கவே முடியாது. கூட்டலில் ஏதோ தவறு நடந்திருக்கிறது!'' என நம்மிடம் குமுறினார் அவர்.

''மத்த பாடத்தைப் பத்திக் கூட கவலையில்லை. தமிழில் ஸ்டேட் ஃபர்ஸ்ட் வரணும்; கலைஞர் கையால 'மெடல்' வாங்கணும்ன்னே குறி வச்சுப் படிச்சா. அவ பேப்பரை திருத்தும்போது ஒரே ஒரு பிழை வராதான்னு ஆசிரியர்களே தேடித் தேடிப் பார்த்து, முடியாம, எங்ககிட்ட வந்து பெருமையா அதைச் சொல்லுவாங்க. அப்படிப்பட்ட பொண்ணு தமிழ்ல அதுவும் 'செகண்ட் பேப்பர்ல' 84 மார்க் வாங்குமா சார்?

''அதனால்தான் முறைப்படி பேப்பர் ரீ கவுண்டிங்கிற்காக இருநூற்றி ஐம்பது ரூபாய் பணமும் கட்டி வந்திருக்கிறோம். இதுவரை எந்த நடவடிக்கையும் இல்லை. பெண்ணின் அழுகையும் தாங்கவில்லை. காலம் தாழ்த்துவதைப் பார்த்தால் எங்களுக்குச் சந்தேகமாக இருக்கிறது. அந்தத் தாளிலும் ஏதும் குளறுபடி நடந்து விடுமோ என்று. இனி கல்வி அமைச்சருக்கும், முதல்வருக்கும் தந்தி கொடுக்கப் போகிறோம். அதுவும் நடக்காவிட்டால் நேரிலும் சென்று முறையிடப் போகிறோம்!'' என்றனர் பெற்றோர்.

சந்திப்பு, படம்: கேயெஸ்வி

லாக வேண்டும்!'' என்கிறார்கள் ஆசிரியர்கள்.

பள்ளியில் எட்டாம் வகுப்பு வரை எல்லோருமே 'ஆல் பாஸ்' என்பது இன்னொரு அதிசயம். தம் மாணவர்கள் மேல் அவ்வளவு நம்பிக்கையாம் நிர்வாகத்திற்கு. சரி, ஒன்பதாம் வகுப்பில் மொத்தமாக வடிகட்டி விடுவார்களோ? என்றால் அதுவுமில்லை. கொஞ்சம் மதிப்பெண் குறைந்தாலும் பாதகமில்லை. 'பாஸ்தான்' என்பதற்கு புள்ளி விவரமும் காட்டுகிறார்கள் ஆசிரியர்கள்.

அப்படியென்றால் ஆசிரியர்கள் நியமனத்தில் ரொம்பக் கவனமாக இருக்கிறதோ நிர்வாகம்? அதுவும் இல்லை. கல்லூரிப் படிப்பை முடித்ததும் நேரே வந்து 'அப்பாயிண்ட்மெண்ட்' வாங்கிக் கொள்கிறார்கள் ஆசிரியர்கள். கரஸ்பாண்டன்டிடம் இரண்டு நாள் இன்ஸ்ட்ரக்ஷன். பிறகு உடனே பாடம் எடுக்க வேண்டும். பிறகு தான் சோதனையே.

தினம்தோறும் நடத்தும் பாடங்கள், நடத்திய பாடங்களையெல்லாம் அவர்கள் தினம் தினம் 'நோட்ஸ் ஆப் லெசன்' எழுதியே ஆக வேண்டும். தினம் இரவு ஒரு மணி வரையிலும்கூட ஆசிரியர்கள் கண் விழித்து அந்த 'வீட்டுப் பாடம்' எழுத வேண்டியிருக்குமாம். வாரம்தோறும் எழுபதிலிருந்து, எண்பது பக்கங்கள் வரை தாங்கள் எடுக்கும் வகுப்பு வாரியாக 'நோட் புக்'கில் பதிவு செய்து தலைமையாசிரியர் மேஜைக்குக் கொண்டு போய் விட வேண்டும். தலைமையாசிரியர் அதைத் திருத்திக் கையெழுத்திட்டு 'இன்ஸ்ட்ரக்ஷன்ஸ்' கொடுப்பார். தப்பும் தவறுமாய் கற்பிக்கிற ஆசிரியர்கள் தங்களைத் திருத்திக் கொண்டே ஆக வேண்டும். இல்லையென்றால் வேலை காலி.

•

சதா படிப்பு, எழுத்து, பரீட்சை மட்டும்தானா வாழ்க்கை? அதையும் தாண்டி விளையாட்டிலும் அசத்துகிறார்கள் ஆர்.கே.ஆர். மாணவர்கள். மாவட்ட அளவில் மட்டுமின்றி மாநில அளவிலும் சென்று பங்கெடுத்திருக்கிறார்கள். இருபது வருடங்களுக்கு மேலாக விடாமல் டிவிஷனல் சேம்பியனாக இருந்து வந்த உடுமலை 'சைனிக் பள்ளியையே' இந்த வருடம் வென்றிருக்கிறார்கள்!

இப்படி வெறித்தனமாய் விளையாட்டிலும், படிப்பிலும் ஈடுபட்டு வரும் மாணவர்கள் பொது அறிவுக் கேள்விகளுக்குப் பதில் சொல்வார்களா...? சந்தேகத்தை நிவர்த்திக்க மாணவர்கள் முன் ஒரு கேள்வியை வைத்தோம்.

"இந்தியாவிலேயே மிகப் பெரிய சிறை எது?"

''திகார் ஜெயில் அல்ல; ஆர்.கே.ஆர் சிறைதான்!"

'டக்'கென்று ஒரு மாணவனிடமிருந்து பதில்!

கட்டுரை, படங்கள்: **கா.சு. வேலாயுதன்**

# டென்ஷனான வாழப்பாடி!



• வாழப்பாடி

● கோவையில் நடந்த ராஜீவ் காங்கிரஸ் செயல்வீரர் கூட்டத்திற்கு வந்திருந்தார் வாழப்பாடி. முன்னதாக பத்திரிகையாளர் சந்திப்பில் வந்த கேள்விக் கணைகளில் கடுப்பாகிப் போனார். ராஜீவ் காங்கிரஸின் கொள்கையென்ன? என்கிற கேள்விக்கு 'நான் மட்டும் ஏன் கோவணம் கட்டணும்?' என்று எதிர்க்கேள்வி. 'உங்கள் கூட்டணியில் நீங்கள் மட்டுமே வென்று, காங்கிரஸ் ஆட்சியமைக்க ஒரே ஒரு சீட் போதாமல் இருந்து உங்களுக்கு அமைச்சர் பதவி கொடுத்து விட்டால் போவீர்களா? மாட்டீர்களா?' என்ற கேள்வி புறப்பட்டதுதான் தாமதம். 'இடியட் ஸ்டுபிட்! என்ன அரைவேக்காட்டுக் கேள்வி? கோயமுத்தூர் பத்திரிகையாளர்கள் என்ன இப்படி இருக்கிறீர்கள். நீங்கனெல்லாம் பத்திரிக்கைக்காரர்கள்தானா?' என்று பொரிந்து விட்டார். பிறகும் ஒரு கேள்வி. 'நம் நாட்டு டீசல், பெட்ரோல் கையிருப்பு எப்படி? விலையிறக்கும் உத்தேசமுண்டா?' 'என்னய்யா இது. கார்கில் பிரச்சனையினால அவனவன் எப்ப டீசல், பெட்ரோல் விலையேறுமோன்னு பயந்துட்டிருக்கான். ஸ்டுப்பிடா கேள்வி கேட்கறீங்களே?' என்று புறப்பட்டுப் போன வாழப்பாடி, செயல் வீரர் கூட்டத்தில் உற்சாகமாய் ஓர் அறிவிப்பை வெளியிட்டார். அதாவது ஜூலை 23-ந்

• கவர் விளம்பரம்

தேதி சென்னையில் நடக்கும் இவரது கட்சியின் ஓராண்டு நிறைவு விழாவிற்கு எந்த மாவட்டம் அதிக வாகனம் திரட்டி வருகிறதோ அந்த மாவட்டத்திற்கு ஒரு 'டாடா சுமோ கார்' பரிசாம்!

● தேர்தல் தேதி அறிவிப்பு வரும் முன்னர் – கூட்டணிக் கட்சிகள் தொகுதி உடன்படிக்கை செய்யாத ஒரு சூழ்நிலையில், நீலகிரி மக்களவைத் தொகுதியில் பிரபுவுக்காக பிரசாரம் நடைபெறுகிறதென்றால் ஆச்சர்யமாயில்லை? தொகுதியின் பல இடங்களில் காங்கிரஸ் கைச் சின்னத்துடன் பிரபுவின் பெயர் கொட்டை எழுத்துக்களில் சுவர்களில் எழுதப்பட்டு விட்டன. "இதிலென்ன அதிசயம். நீலகிரித் தொகுதிக்கு காங்கிரஸின் நிரந்தர வேட்பாளர் பிரபுதானே? அவர் பிரசாரம் செய்வதில் தவறென்ன?" என்பது ஜனங்களின் அசுவாரசியப் பேச்சு. என்றாலும் 'காங்கிரஸுடன் த.மா.கா இணைந்து ஏற்கெனவே அமைச்சராயிருந்த எஸ்.ஆர்.பிக்கு அத் தொகுதி ஒதுக்கப்பட்டால்?' என்கிற கேள்வியும் எழாமலில்லை. அதற்கு 'அத்தைக்கு மீசை முளைக்கட்டும்' என்கிற மாதிரி பதிலும் அங்கங்கே. "பிரபு, கட்சி மேலிடத்தை மீறி இப்படிப் பிரசாரத்தில் ஈடுபடுவது கட்சி துரோகம். அதனால் இவர் பற்றிய செயல்பாடுகள் சோனியாவுக்குச் சென்றடைந்து விட்டது. கட்சிக் கட்டுப்பாட்டை மீறி, தன்னிச்சையாகச் செயல்படும் இவருக்கு சீட் கொடுப்பதா, வேண்டாமா? என்பதையும் சோனியாஜி முடிவெடுத்து விட்டார்!" இப்படிச் சொல்வது நாமல்ல. புதிதாகக் காங்கிரஸ் கட்சியில் நுழைந்திருக்கும் பிரமுகர் ஒருவர்!



• பிரபு

படம், தகவல்: **ரோகிணி**

# உலகின் நெ.ஒன் பணக்கார இந்தியர்!



**டா**டாவோ, பிர்லாவோ அல்ல. அமெரிக்காவில் forbs மாத இதழின் சமீபத்திய அறிக்கையின்படி–

அஸீம் பிரேம்ஜி. விப்ரோ லிமிடெட்டின் தலைவர். சொந்த சொத்து மதிப்பு: 12,040 கோடி ரூபாய்.

இவருக்கு அடுத்தபடி எல்.என்.மித்தல். மூன்றாவதாக அம்பானி. நான்காவது, HCLலின் ஷிவ் நாடார். ஐந்தாவது கே.எம். பிர்லா. கோத்ரெஜ் ஆறாவது. ஹிந்துஜா ஏழாவது.

அஸீம் பிரேம்ஜிக்கு 55 வயது ஆகிறது. 1945ல் துவக்கப்பட்ட வெஸ்டர்ன் இந்தியா வெஜிடபிள் பிராடக்ட்ஸ் லிமிடெட்டை நிர்வகிக்க, 67ல், ஸ்டான்ஃபோர்டு பல்கலைக்கழகப் படிப்பை பாதியில் விட்டுவிட்டு, இந்தியா வந்தார். அப்போது அவருக்கு வயது 22தான்! 1980ல்தான் கம்ப்யூட்டர் துறையை ஆரம்பித்தார். 96ல் பம்பாயிலிருந்து பெங்களூருக்குத் தம் கம்பெனிகளை மாற்றினார்.

இவருடைய வெற்றிக்கு என்ன காரணங்கள்?

அடக்கம். எளிமை. ஒரு வேலையை ஒருவரிடம் ஒப்படைத்து விட்டால், அப்புறம், குடைந்து கொண்டே இருக்க மாட்டார். ஒரு திட்டம் போட்டுச் சொல்லிவிட்டால், அதன்படி வேலையை முடித்துவிட வேண்டும் என்று எதிர்பார்ப்பார். உணர்ச்சிவசப்பட மாட்டார். விளம்பரப் பிரியர் அல்லவே அல்ல!

மனைவி யாஸ்மீன் முன்பு Inside Outside இதழின் ஆசிரியை. இப்போது வீட்டு வேலைகள் மட்டுமே. மகன்கள் இருவர்: ரிஷாத், தாரிக்.

**– எஸ்.வி.என்.**

# ஒரு காதல் டைரி



'ஆசிரியக் குடிமகன்' நூலை, தேவை தீர்ந்ததும் வைக்கம் முஹம்மது பஷீர், தலயோலப்பரம்பு என்ற விலாசத்திற்கு இரண்டு வாரத்திற்குள் அனுப்பி வைக்கவும்.

அந்தப் புத்தகம் கோட்டயத்துக்காரரான ஒரு பாதிரியுடையது. அவரிடமிருந்து என் நண்பர் ஒருவரான டி.வி. கிழக்கேமுரி வாங்கி அனுப்பியிருக்கிறார். அதைத் திருப்பிச் சேர்ப்பிக்க வேண்டும்.

நான் இங்கே ஒரு வாரம் இருப்பேன். அதற்குப் பின் இங்கிருந்து ஓடிவிட வேண்டும் என்ற நம்பிக்கையில் காத்திருக்கிறேன்.

இது என்னுடைய வீடு. என் பழைய அறையில் நான். இப்போது குடும்பத் தலைவன் நான்.

எல்லோருமாகச் சேர்ந்து எனக்கு ஒரு தடிச்சிப் பெண்ணைக் கட்டி வைக்க யோசிக்கின்றனர். என்றால் எல்லோரும் சேர்ந்து தீர்மானித்து விட்டனர்.

நான் பெண்ணைக் கட்ட வேண்டும். இல்லை என்றால் கட்டி வைப்பார்கள். ஊர்க்காரர்களும் வீட்டுக்காரர்களும் சொல்கிறார்கள். அதிகமானோர் மதபக்தர்களாகிய முஸ்லீம்கள்.

நான் ஓர் உண்மையைக் கண்டுபிடித்து

வைத்துள்ளேன். அந்த தடிச்சிப் பெண்ணைக் கட்டியே தீர வேண்டும் என்ற கட்டம் வரும்முன்பு நான் ஒரு குடிகாரன் என்ற பேச்சை வரவழைக்க வேண்டும். குடித்துவிட்டுத்தான்!

இந்தக் குக்கிராமத்தில் வெறும் கள்ளும் பட்டைச் சாராயமும் கிடைக்கும். இரண்டையும் வாங்கிக் குடித்துவிட்டு தடிச்சிப் பெண்ணின் தாடிக்கார அப்பனிடம் போய் மதசம்பந்தமாக கொஞ்சம் பேசப் போகிறேன்.

இப்படிக்கு,
உன் பஷீர்.

இந்தக் கடிதத்திற்கு அவள் எழுதிய பதில்.

அரசினர் பயிற்சிக் கல்லூரி,

பிரியமுள்ள பஷீர்,

இதயபூர்வமான நல்வாழ்த்துக்கள்.

இளைத்தவர்களை விட நல்லது அல்லவா தடித்தவர்? குறிப்பாக, "மங்களோதயம் நர்ஸிங் ஹோம்", "கான்ஸன்ட்ரேஷன் இல்லாமை", "இஞ்செக்ஷன்" இப்படி நீங்கள் என்னவோ சிலது சொன்ன ஞாபகம். அந்த வகையில் தங்கள் சகதர்மிணி ஆரோக்கியம் உள்ளவராகவே இருக்கட்டுமே!

சகோதரிகளையும், அம்மாவையும், ஊர்க்காரர்களையும் திருப்திப்படுத்துங்கள். மனச்சாட்சி சம்மதித்தால்! நல்வாழ்த்துக்கள்.

ஹோ, கோழையே!

மனச்சாட்சி சம்மதிக்கவில்லை என்றால் இந்த விவகாரத்திலிருந்து தப்பிக்கக் கண்டு பிடித்திருக்கிறீர்களே ஒரு வழி! மதுபானம்! 34 வயதான ஓர் ஆண் மகனின் கண்டுபிடிப்பு! அருவருப்பூட்டும் கோழைத்தனம் என்பதன்றி வேறு ஏதும் எனக்குச் சொல்லத் தோன்றவில்லை அதைப் பற்றி.

இந்த நான் சொல்கிறேன்.

என்னைப் பொறுத்தவரை நானே என் நாயகன்! உம். இப்படியெல்லாம் பேசிவிட்டு ஒரு ஆண், ஒரு கலைஞனா இப்படி - வெட்கக்கேடு!

ஹோ கலைஞரே!

உங்களுக்குப் பைத்தியம் பிடித்து விட்டதா? சொந்த சுதந்தரத்தை மீட்டு எடுக்க மதுபானத்தை ஏற்பதா? இது சுய நினைவுள்ள சமயத்தில் எழுதியதுதானா? அல்லது பழைய தொழிலோ?

(அப்படியும் காதில் விழாமல் இல்லை. ஆனால் அதை நான் நம்பியதுமில்லை. நீங்கள் ஒரு முஸல்மான் அல்லவா? இவ்வளவு கோழைத்தனமா?)

உண்மையில் எனக்கு நன்றாகச் சுடச்சுட அடி கொடுக்கத் தோன்றுகிறது. ஒரு நல்ல தடியினால். கோழை! உங்களை அப்படி ஆயிரம் தடவை அழைப்பேன்!

இனி....

பஷீர்....

தாங்கள் ஒன்று மட்டும் செய்ய வேண்டாம். மதுபானம். நான் அதை வெறுக்கிறேன். உலகம் முழுவதும் அதை வெறுக்கிறது.

இது உளுத்துப் போன கருத்தாகத் தோன்றலாம். இருந்தாலும் தாங்கள் அதை மட்டும் செய்ய வேண்டாம். ஐயோ - அதைப் பழக்கப்படுத்திக் கொள்ளாதீர்கள்.

சகோதரா,

தாங்கள் ஓர் ஏழையாக இருந்ததாக என்னிடம் ஒருமுறை சொன்னீர்கள். அந்தக் காலத்தை மறக்க வேண்டாம். பணத்தைக் கவனமாகச் செலவு செய்து வாழவும். பத்தாயிரமும் லட்சமும் நிமிஷத்தில் பறந்து விடும். அதை நினைவில் வைக்கவும். எதிர்காலத்தை முற்றிலும் துச்சமாக நினைக்காதீர்கள்.

உபதேசிக்க நான் யாரும் அல்லதான்; எனக்கு யாருடைய அதிகாரமும் இல்லை. இருந்தாலும் சொற்ப கால பரிச்சயம். மன்னியுங்கள். நாடகம் எழுத சாத்தியப்படவில்லை என்றால் வேண்டாம்.

நாலைந்து நாட்கள் கல்லூரி இல்லாததால் கடிதங்கள் எல்லாம் இன்றுதான் கிடைத்தன. அதனால்தான் பதில் தாமதப்படுகிறது. கல்லூரி இன்று

**வைக்கம் முகம்மது பஷீர்**

**தமிழில் : வையவன்**

**19**

(19 டிசம்பர்) முடிந்தது.

இனி ஜனவரி 3-ந் தேதிதான் திறப் பார்கள். நான் 21-ந் தேதி இங்கிருந்து புறப் படுகிறேன். ஜனவரி 2-ந் தேதிதான் வரு வேன். அப்படிப் பல இடங்களுக்குப் போய் வரவேண்டும். வெறும் மாறுதலுக்காக.

ஆசிரியக் குடிமகன் புத்தகத்தை கல்லூரி திறந்த பிறகே அனுப்ப இயலும். புத்தக உரிமையாளரிடம் மன்னிக்கச் சொல்லுங் கள். தனுர் மாதம் 8-ந் தேதி ஆன பிறகே கல்லூரி முகவரிக்கு எழுதவும்.

கவரின் மீது ஸ்டாம்பு ஒட்டி அனுப்பி வைப்பதே நல்லதாக இருக்கும்.

இந்தக் கவர்களை ஏன் எனக்கு அனுப்பினீர்கள்?

அடுத்த ஆண்டு நான் ஓர் உத்தியோகக் காரி ஆகும் போது தங்கள் மிஸ்ஸஸ்ஸுடன் என் விருந்தினராக வந்து தங்கவும். திருமண அழைப்பிதழ் அனுப்ப மறக்க வேண்டாம்.

நான் கல்யாணம் செய்து கொண்டாலும் வரவும். என் அழைப்பு முடிந்தது. குடிக்க வேண்டாம்.

ஜனவரி 3-ந் தேதிக்குப் பிறகு பதில் எதிர்பார்க்கிறேன்.

வித் பெஸ்ட் லவ்

யுவர்ஸ் தேவி.

பி.கு : ஆட்சேபணை இல்லையென்றால் இதைத் திருப்பி அனுப்பவும். இருந்தால் வேண்டாம்.

என் அடுத்த கடிதம்:

வைக்கம் முஹமது பஷீர்
கெ.எம்.ஐ. ஔஷத சாலை.

"சினேகிதியான தேவி

''தலைவர் ஆட்டோக்காரரா இருந்திருக் கணும்...''

''எப்படிச் சொல்றே?''

''வோட்டு கேட்கும்போது, 'எங்கள் கட்சிக்கு நீங்கள் வோட்டு போடுவதோடு நில்லாமல் கூட ஏதோ கொஞ்சம் கள்ள வோட்டும் போட்டுக் கொடுங்க'ன்னு சொல்றாரு!''

– பா. ஜெயக்குமார்



புத்தாண்டு பிறந்து தீர்ந்தது! உனக்கு என் மங்கள வாழ்த்துக்கள். உடல், மனம், வாழ்க்கை எல்லாவற்றிற்கும்.

தேவி நான் வந்து சேர்ந்திருக்கிறேன். எல்லாவற்றையும் துறந்து. அம்மா, சகோதரி கள், சகோதரர்கள், வீடு, ஊர், மற்றும் பந்தங்கள் ஒன்றுமில்லை.

நான் தனியாக. தேவியிடம்தான் நான் வந்தேன். வந்த உடனே பார்க்க வேண்டும் என்று நினைத்தேன். அதற்குப் பின் இரண்டு நாட்கள் கழிந்து விட்டன.

நான் வரவில்லை.

அந்த உன் முகத்தைப் பார்க்கவும், அந்த ஒலியைக் கேட்கவும் தீவிரமான ஆவல் உண்டு. ஆனால் உனக்கு என்னைப் பார்ப் பது பிடிக்கவில்லை எனிலோ? எனக்குச் சந்தேகமாக இருக்கிறது.

வேண்டுமானால் நீ என்னைக் கூப்பிடு. இல்லையெனில் நான் வர மாட்டேன். உன் பக்கத்தில்தான் இருக்கிறேன். இருந்தாலும் நான் வர மாட்டேன். பார்க்க மாட்டேன்.

காதல் இல்லாததால் அல்ல. தீவிரமான காதல் உண்டு. உன்னைக் கட்டித் தழுவி அந்த மேனி முழுதும் முத்தமிட ஆவல் உண்டு.

ஆனால் ஒன்று எனக்குத் தெளிவாகத் தெரியவேண்டும். இப்போது நீ என்னை நேசிக்கிறாயா?

''நான், தங்களை நேசிக்கிறேன், ஆராதிக்கிறேன்'' என்று நீ அன்று எழுதி யிருந்தாய். ஒரு மாதத்துக்கு முன்பு. போன ஆண்டு. இந்தப் புத்தாண்டில் நீ என்ன சொல்கிறாய்?

தேவி, எது இஷ்டமோ அதைச் சொல். மனத்தில் தோன்றுவதைச் சொல். ஆனால் சொல்வது உண்மையாய் இருக்க வேண்டும். உனக்கு இப்போது என் மீதுள்ள மனோ பாவம் என்ன?

அதைத் தெரிந்து கொண்டுதான் என் எதிர்காலத்தை நான் தீர்மானிப்பேன். எது வென்றாலும் எழுது. என்னை நேசிக்க வில்லை என்றால் விவரத்தை வெளிப்படை யாகத் தெரிவி.

சிநேகிப்பதானால் நீ என் மனைவி ஆவாயா?

தேவியின் பஷீர்.

இதற்கு வந்த பதில் முழுக்க ஆங்கிலத்தில்.

7.1.46

மை டியரஸ்ட்,

தங்கள் கேள்வியின் முற்பகுதிக்கு என் பதில் ஆம். இரண்டாவது பகுதிக்கு – என்

னைச் சற்று யோசிக்க விடுங்கள்.

ஓர் உறுதியான பதிலை இன்னும் இரண்டு வாரம் கழித்துத் தருகிறேன். அதற்கு முன் இந்த இடத்தை விட்டு நீங்கள் புறப்படுவதாயின் எனக்குத் தெரிவியுங்கள்.

எப்போதும் தங்கள்
தேவி.

இந்தக் கடிதம் பென்சிலில் எழுதப்பட் டிருந்தது. கவரின் விலாசம் கூட.

கடிதம் கிடைத்த அன்று இரவு நான் கௌஸ். வீட்டிற்குப் போனேன். கிராம போனுடன்.

வேறு சிலர் அங்கே இருந்தனர்.

முதலில் நான் வைத்த பாட்டு "யாத் ஆயேகி நா ஆயே"தான்.

ஒரு பத்து நிமிடம் கழிந்த பிறகு தேவி வந்தாள். ஒன்றும் பேசவில்லை. புத்தகங்கள், 'ஆசிரியக் குடிமகன்' ஆகியவற்றைக் கொடுத்து விட்டுப் போனாள்.



நாட்கள் இப்படிக் கடந்தன.

நாங்கள் அடிக்கடி பார்க்கத் தொடங்கினோம்.

ஒருநாள் சொன்னாள்.

"பதில் உடனே தருவேன். நான் என் அண்ணனுக்கு எழுதியிருக்கிறேன்."

"பதில் தருவதற்கு முன்பு எனக்கு ஒரு கடிதம் தரவும். அப்புறம் பதில் தந்தால் போதும்" என்றேன்.

மற்றொரு நாள் சாயங்காலம் கோவில் பிரசாதம் தந்தாள்.

அடுத்த நாள் ஒரு கடிதம். மிகவும் நீளமானது. ஆங்கிலத்தில். பகல் பத்து மணிக்கு கல்லூரிக்குப் போகும் வழியில் தந்தாள்.

அன்று இரவு நான் ஒரு கனவு கண்டேன். ஒரு பாம்பு என்னைக் கொத்தியது போல. பொன்னிறத்திலும் வேறு நிறத்திலுள்ள சிறிய பாம்புகளின் இடையில் பழுப்பு நிறமுள்ள ஒரு பாம்பு. கொடிய விஷமுள்ள ஒரு ஜாதி.

பாம்புக் கூட்டத்தில் இருந்து ஊர்ந்து வந்து அது என் காலில் மெதுவாக ஒரு கொத்து கொத்தி விட்டு ஊர்ந்து சென்றது. அதன் விஷம் பயங்கரமாக ஏறத் தொடங்கியது.

(முன்பு ஒருமுறை கூட ஒரு பாம்பு கொத்தியதாக நான் கனவு கண்டேன். அன்று விஷம் ஏறவில்லை.)

இப்போது விஷம் கொடிய கடுகடுப்போடு ஏறத் தொடங்கியது. நான் கண் விழித்தேன்.

காலைக்கடன் முடித்து பத்து மணிக்கு தேவியைச் சந்தித்தேன்.

கரும் சிவப்புக் கரையிட்ட இளஞ்சிவப்பு சேலை. என்னைப் பார்த்ததுமே தேவி மனம் திறந்து அழகாகச் சிரித்தாள்.

நான் நெருங்கினேன். ஒரு புத்தகத்தைக் கொடுத்துவிட்டு நகர்ந்தாள். அதனுள் அட்ரஸ் எழுதாத ஒரு தபால் கவர். ஒட்டிய பக்கத்தின் மீது பென்சிலில் R என்ற எழுத்து.

கடிதத்தை நான் உடைத்துப் படித்தேன்.

தேவி என்னை மிகவும் அதிகமாக நேசிக்கிறாள். அவள் ஆங்கிலத்தில் எழுதிய கடிதத்தை அப்படியே மலையாளத்தில் மாற்றிக் கொடுக்கிறேன்.

(தொடரும்)

## "என் மகனுக்கு ஸ்பெஷல் கவனிப்பு தேவையில்லை!"

இந்த வருடம், காலம் சென்ற பீல்ட் மார்ஷல் கரியப்பாவின் நூற்றாண்டு. அவரைப் பற்றி ஒரு சுவையான சம்பவம்:

பாகிஸ்தானுடன் நடந்த சண்டையின் போது கரியப்பாவின் மகனும் ராணுவக் கைதியாக பாகிஸ்தானுக்கு அழைத்துச் செல்லப்பட்டார். பாகிஸ்தானின் முன்னாள் ஜனாதிபதி அயூப்கான், கைதானவர் கரியப்பாவின் மகன் என அறிந்ததும் உடனே கரியப்பாவுக்கு பின் வருமாறு கடிதம் எழுதினார்,

''கவலை வேண்டாம். உங்களுடைய மகனை நன்றாகக் கவனித்துக் கொள்கிறார்கள்...''

இதற்கு கரியப்பா உடனே பதில் எழுதினார்,

''அவனுக்கு விசேஷ கவனிப்பு தேவையில்லை. மற்ற இந்திய போர்க் கைதிகளைப் போலவே அவனையும் நடத்தினால் போதும்...''

இந்திய ராணுவத்தில் கமான்டர் இன் சீப்–ஆக பணியாற்றியவர் கரியப்பா மட்டுமே. அவருக்குப் பின்... இந்தப் பதவி... ஜனாதிபதியிடம் சென்று விட்டது..''

– **ராஜி ராதா**

ஆதாரம்: **ஸண்டே**

# பொன்னியின் செல்வன்






கல்கி கலெக்ஷன்

### இருபத்து நான்காம் அத்தியாயம்

## நினைவு வந்தது

வானதி மீண்டும் ஒரு முறை நினைவற்ற நிலையை அடைந்தாள். அவளுடைய கண்களும் மூடிக்கொண்டன. கொஞ்சம் கொஞ்சமாகச் சுய நினைவு வரத் தொடங்கியது. நாகலோகத்திலோ தேவலோகத்திலோ, தான் இளவரசரை மணந்தது வெறும் பிரமை என்பதை உணர்ந்தாள். இளவரசரைப் பற்றிய துயரமான செய்தி கேட்டதையும் அதன் பேரில் தான் ஓடைக் கரையில் வந்து நின்றதையும் தலை சுற்றி நீரில் விழுந்ததையும் நினைவு படுத்திக் கொண்டாள். இந்த நினைவுகள் அவளுக்கு எல்லையற்ற ஏமாற்றத்தை அளித்தன; நெஞ்சில் சுருக்கென்று ஈட்டி பாய்வது போன்ற வலியையும் அளித்தன. கண்களைத் திறக்க முயன்றாள். ஆனால் முடியவில்லை. தன்னைத் தண்ணீரிலிருந்து தூக்கிக் கரை சேர்த்தது யாராயிருக்கும்? இளையபிராட்டியாகத்தான் இருக்க வேண்டும். சற்றுத் தூரத்தில் படகில் வந்து கொண்டிருந்த குந்தவை தேவியாகத்தான் இருக்க வேண்டும். தன்னை எதற்காக அவர் காப்பாற்றியிருக்க வேண்டும்? ஒரேயடியாக முழுகித் தொலைந்து போய் விடும்படி விட்டிருக்கக் கூடாதா? கண்களைத் திறந்து பேசுவதற்கு முடிந்தவுடனே "ஏன் என்னைக் காப்பாற்றினீர்கள்?"

**அமரர் கல்கி**

என்று இளையபிராட்டியுடன் சண்டை பிடிக்க வேண்டும்! தம்முடைய அருமைத் தம்பியிடம் அவருடைய அன்பு இவ்வளவுதானா...?

இதோ இளையபிராட்டி பேசுகிறார். என்ன சொல்கிறார்? யாரிடம் சொல்கிறார்? கேட்கலாம்:

''மயக்கத்தில் ஏதேதோ பிதற்றுகிறான்! இந்த மட்டும் உயிர் பிழைத்ததே பெரிய காரியம்! நம்முடைய படகு மட்டும் இன்னும் சற்றுத் தூரத்தில் இருந்திருந்தால்? இவன் ஓடையில் விழுந்தது நம் கண்ணில் படாமற் போயிருந்தால்? – அதை நினைத்தாலே எனக்குக் கதி கலங்குகிறது!''

''நாம் பாராமல் விட்டிருந்தால் ஒருவிதத்தில் நல்லதாய்ப் போயிருக்கும். இந்தப் பெண்ணின் வாழ்க்கை இனிதாக முடிந்திருக்கும். தங்களால் உயிர் பிழைத்த கொடும்பாளூர் இளவரசி வாழ்க்கையில் எவ்வளவோ மன வேதனைப் பட வேண்டியிருக்கும்...''

ஆகா! இது யார், நம்மிடம் இவ்வளவு அனுதாபத்துடன் பேசுகிறது? ஆம், அந்த வாலிபர்தான்! குடந்தை ஜோதிடர் வீட்டிலும் அரசலாற்றங் கரையிலும் பார்த்த அந்த வீர வாலிபர் தான்! இளவரசர் கடலில் முழுகிய செய்தியையும் அவரே கொண்டு வந்திருக்க வேண்டும். இன்னும் இவர்கள் என்ன பேசிக் கொள்ளப் போகிறார்கள்? கேட்கலாம். கண்ணைத் திறக்க முடியா விட்டாலும் நன்றாய்க் கேட்கிறதல்லவா!

''இது என்ன, இவ்வளவு நெஞ்சிரக்கம் இல்லாமல் பேசுகிறீர்? ஆண் பிள்ளைகளின் மனதே கல் மனதாகத்தான் இருக்குமோ?'' என்றது இளையபிராட்டியின் குரல்.

''அப்படிக் கல் நெஞ்சன் என்று தீர்ப்புக் கூறும்படியாக இப்போது நான் என்ன சொல்லி விட்டேன்?''

''இந்தப் பெண் இறந்திருந்தால் நல்லது என்று சொன்னீரே? அது போதாதா? எவ்வளவு சிரமம் எடுத்து இவளை நான் வளர்த்து வருகிறேன், தெரியுமா...?''

''இவள் பிதற்றிய வார்த்தைகளைத் தாங்கள் கேட்டீர்களா?''

''உம்முடைய செவிகளில் என்ன விழுந்தது?''

''இளவரசரை மணந்து கொள்வது பற்றி ஏதோ சொன்னதாகக் காதில் விழுந்தது...''

''ஆம், நினைவு தெரியாத மயக்கத்திலே கூட அவளுடைய வாய் அப்படி முணுமுணுத்தது. இளவரசர் மீது ஆசை அவள் உள்ளத்தில் அப்படி வேரூன்றியிருக்கிறது.''

''அந்த ஆசை இந்தப் பெண்ணுக்கு நல்லதல்ல! அதனால் துன்பமும் ஏமாற்றமுந்தான் ஏற்படும்.''

''ஏன் அவ்வாறு சொல்கிறீர்? இவளைக் காட்டிலும் இளவரசருக்கு ஏற்ற உயர்குலப் பெண் வேறு யார்? புராதனமான கொடும்பாளூர் வீர வம்சத்தைப் பற்றி உமக்குத் தெரியாதா?''

''நன்றாய்த் தெரியும். நான் நினைப்பது ஒன்று; தாங்கள் சொல்வது இன்னொன்று. இந்தப் பெண் எவ்வளவு உயர்குலமாயிருந்தால் என்ன? இவள் மனத்திலுள்ள சபலம் நிறைவேறப் போவதில்லை...''

''கட்டாயம் நிறைவேறியே தீரும். அது இவள் மனத்தில் உள்ள சபலம் அன்று. என்னுடைய மனோரதம்; நான் செய்திருக்கும் தீர்மானம்.''

''தங்கள் தீர்மானமாயினும் இந்த விஷயத்தில் நிறைவேறாது.''

''ஏன் மீண்டும் அவ்விதம் சொல்கிறீர்? இளவரசர் நாகைப்பட்டினம் சூடாமணி விஹாரத்தில் பத்திரமாயிருக்கிறார் என்று சற்று முன் நீர் கூறியது உண்மைதானே?''

ஆகா! இது என்ன இன்பமான செய்தி? இளவரசர் பத்திரமாயிருக்கிறாரா? நாகைப்பட்டினம் சூடாமணி விஹாரத்தில் இருக்கிறாரா? இந்தச் செய்தியைக் கேட்க இந்தச் செவிகள் கொடுத்து வைத்திருந்தனவே? ஓடை நீரில் முழுகிச் சாகாமல் நான் உயிர் பிழைத்தது எவ்வளவு நல்லதாய்ப் போயிற்று! இளையபிராட்டிக்கு

எத்தனையோ விதத்தில் நான் நன்றிக் கடன் பட்டிருக்கிறேன். இதுவும் ஒன்று இப்போது சேர்ந்தது. ஆனால் ஐயோ! இது என்ன மேலே இவர் சொல்லும் செய்தி? செவியில் ஈயத்தைக் காய்ச்சி ஊற்றுவது போலிருக்கிறதே!

''அம்மணி! இளவரசர் பத்திரமாயிருக்கிறார் என்பது உண்மைதான். அதனால் இவளுடைய ஆசை நிறைவேறும் என்பது என்ன நிச்சயம்? இளவரசர் இந்தப் பெண்ணை மணந்து கொள்ள மாட்டார் என்று நான் நினைக்கிறேன்...''

''நீர் எதை வேணுமானாலும் நினைக்கலாம். இந்த உலகில் நான் இட்ட கோட்டைத் தாண்டாமல், என் பேச்சைத் தட்டாமல் நிறைவேற்றக் கூடிய ஓர் ஆண்மகன் இருக்கிறான். அவன் தான் என் தம்பி அருள்மொழிவர்மன்!''

''இளவரசி! அத்தகையவன் நானும் ஒருவன் இருக்கிறேன்...''

''பின்னர் என்ன எனக்கு குறைவு? என்னுடைய எண்ணம் நிறைவேறுவதற்கு என்ன தடை? பழுவேட்டரையர்கள் இதற்குக் கூடக் குறுக்கே வருவார்களா, என்ன...?''

''அது எனக்குத் தெரியாது. தங்களிடம் இளவரசருக்கு எல்லையற்ற அன்பு உண்டு என்பதை நான் அறிந்திருக்கிறேன். வேறு எந்தக் காரியத்திலும் தங்கள் வார்த்தையைக் கேட்பார். அவருக்கு இராஜ்யம் ஆளுவதில் சிறிதும் இஷ்டமில்லை. என் கண் முன்னால் இலங்கை மணி மகுடத்தை வேண்டாம் என்று மறுத்தார். ஆயினும் தாங்கள் வற்புறுத்தினால் இராஜ்யம் ஆளுவதற்குக் கூடச் சம்மதிப்பார். ஆனால் இந்தப் பெண்ணை மணப்பதற்கு...''

''சம்மதிக்க மாட்டான் என்றா சொல்கிறீர்? அவ்விதம் என் அருமைத் தோழியை நிராகரிப்பதற்கு அவன் இவளிடம் என்ன குறையைக் கண்டான்? நீர்தான் என்ன கண்டீர்?''

''அம்மணி! நான் இந்தப் பெண்ணிடம் ஒரு குறையும் காணவில்லை. கண்டாலும் நம்ப மாட்டேன். இளைய பிராட்டி அரண்மனையில் பணி செய்யும் எல்லாரிலும் கீழான சேடிப் பெண்ணும் எனக்குத் தேவ கன்னிகைதான். இளையபிராட்டியின் தோட்டத்தில் வாழும் முயல்குட்டி என் கண்களுக்குத் தேவேந்திரனுடைய ஐராவதத்துக்கும் மேலானதாகத் தோன்றும். இளவரசரும் இந்தப் பெண்ணிடம் குறை ஒன்றையும் காணவில்லை. ஆனால் அவருடைய மனம் வேறொரு பெண்ணிடம் சென்றிருக்கலாம் அல்லவா...?''

ஐயோ! எவ்வளவு கொடுமையான வார்த்தைகள்! இந்த வாலிபர் எதற்காக இவ்விதம் நம்முடைய புண்பட்ட உள்ளத்தில் வேலை எடுத்துக் குத்துகிறார்?

''வாணர் குலத்து வீரரே! தாங்கள் கூறுவது எனக்கு விளங்கவில்லை. என் தம்பியைப் பற்றி ஏன் இப்போர்ப்பட்ட அவதூறு கூறுகிறீர்!''

''அவதூறு ஒன்றுமில்லை, அம்மணி! உண்மையைத்தான் கூறுகிறேன். கண்ணால் கண்டு, காதினால் கேட்டதைச் சொல்லுகிறேன்...''

''மேலே சொல்லுக! எவ்வளவு கஷ்டமான விஷயத்தைக் கேட்கவும். இப்பொழுது நான் சித்தமாயிருக்கிறேன்.''

''ஓடக்காரப் பெண் பூங்குழலி என்பவளைப் பற்றிச் சொன்னேன் அல்லவா? இலங்கைக்கு என்னைக் கொண்டு போய்ச் சேர்த்தவளும் அவள் தான். இளவரசரையும் என்னையும் கடலிலிருந்து காப்பாற்றியவளும் அவள்தான். சூடாமணி விஹாரத்துக்கு இளவரசரைப் படகில் ஏற்றிக்கொண்டு போயிருப்பவளும் அவள்தான். சேந்தன் அமுதனிடம் மட்டும் நம்பி இளவரசரை நான் ஒப்புவித்து வந்திருக்க மாட்டேன். பூங்குழலியை நம்பித்தான் ஒப்புவித்திருக்கிறேன். அந்தப் பெண்ணுக்கு ஆயிரம் உயிர் இருந்தால் அவ்வளவையும் இளவரசருக்கு அர்ப்பணம் செய்வாள்...''

''அதனால் என்ன? ஓடக்காரப் பெண் ஓடக்காரிதானே? உலகமாளப் பிறந்தவனை மணப்பது பற்றி அவள் கனவு காண முடியுமா? தரையில் தத்திக் குதிக்கும் சிட்டுக் குருவி வானத்தில்

உயரப் பறந்து வட்டமிடும் கருடனை ஏறிட்டுப் பார்க்க முடியுமா?''

''ஏன் முடியாது? சிட்டுக்குருவியும் கருடனை அண்ணாந்து பார்க்கலாம்; கருடனும் சிட்டுக் குருவியைக் குனிந்து பார்த்து ஆசைப்படலாம்.''

''என் தம்பியின் மனத்தில் அப்படி ஏதேனும் எண்ணம் உதித்திருந்தால் அதைப் போக்குவதற்கு நான் ஆயிற்று. கூடவே கூடாது. எத்தனையோ அபாயங்களிலிருந்து அருள்மொழி வர்மனை நான் தப்புவித்திருக்கிறேன். இந்த ஓடக்காரியின் மோக வலையிலிருந்தும் நான் தப்புவிப்பேன்...''

''ஓடக்காரியென்றால் அவ்வளவு தள்ளுபடியா? குலமும் கோத்திரமும் அவ்வளவு முக்கியமா? ஓடக்காரியின் உடம்பில் ஓடுவதும் சிவப்பு இரத்தந்தானே? அவளுடைய நெஞ்சம் அரண்மனையில் பிறந்த இளவரசிகளின் நெஞ்சைப் போல் துடிப்பதில்லையா? பார்க்கப் போனால் இளவரசிகளின் அன்பில் இராஜ்ய ஆசை முதலியவை கலந்திருக்கலாம். ஆனால் அந்த ஓடக்காரப் பெண்ணின் அன்பு மாசற்றது; புனிதமானது. இளவரசரும் அவ்வாறுதான் நம்புகிறார். மற்றவர்கள் ஏன் குறுக்கே வந்து தடை செய்ய வேண்டும்? இப்போது, வந்து, வந்து, ஊஹூம் – என் விஷயத்தையே எடுத்துக்கொள்ளுங்கள். என்னுடைய நெஞ்சைப் பிளந்து அதனுள் இருப்பதைத் தங்களுக்கு நான் வெளியிட்டுக் காட்ட முடியுமானால்...''

''வேண்டாம், வேண்டாம். உம்முடைய நெஞ்சில் இருப்பது அப்படியே பத்திரமாய் இருக்கட்டும். அதுதான் நல்லது. அன்பு, ஆசை, காதல் என்பவையெல்லாம் உலகில் பிறந்த மற்றவர்களுக்குச் சரிதான். ஆனால் இராஜ்யம் ஆளப் பிறந்தவர்களின் விஷயமே வேறு. அவர்கள் இராஜ குலத்திலேயே கலியாணம் செய்து கொள்ள வேண்டும். மனத்தைச் சிதற விடக் கூடாது. தவறினால் அதன் மூலம் பல தொல்லைகள் ஏற்படும். எங்கள் குடும்பத்திலேயே அதற்குத் தகுந்த உதாரணம் இருக்கிறது. என் தந்தையின் இளம் பிராயத்தில், – இராஜ்யம் அவருக்கு வரும் என்ற உத்தேசமே இல்லாதபோது, – இப்படித்தான் காட்டில் வளர்ந்த ஒரு பெண்ணை...! ஆனால் இதையெல்லாம் இப்போது உமக்கு நான் எதற்காகச் சொல்ல வேண்டும்? இந்தப் பெண்ணுக்கும் மூர்ச்சை தெளிந்து, சுயநினைவு வந்து கொண்டிருக்கிறது. கண்ணிமைகள் அசைகின்றன. வேறு ஏதேனும் சொல்வதற்கு இல்லையா? ஈழ நாட்டில் இன்னும் பல அபாயங்களுக்கு நீங்கள் உள்ளானதாகச் சொன்னீர் அல்லவா? அதைச் சொல்லுங்கள்.''

''ஆம், இளவரசி! இலங்கைச் சிம்மாசனத்தையும் மணி மகுடத்தையும் இளவரசர் மறுத்துவிட்டு வந்த அன்று இரவு, நாங்கள் அநுராதபுரத்தின் வீதிகளில் வந்து கொண்டிருந்தபோது, திடீரென்று ஒரு கட்டடத்தின் முன் பகுதி இடிந்து விழுந்தது. ஒரு கண நேரம் நாங்கள் அங்கே தாமதித்திருந்தால் எங்கள் தலையில் விழுந்திருக்கும். உயிரோடு சமாதி ஆகியிருப்போம். அச் சமயத்தில் ஒரு பெண்மணி திடீரென்று அங்கே தோன்றினாள். சமிக்ஞை செய்து இளவரசரை அழைத்தாள்...''

''கடவுளே! அங்கேயும் ஒரு பெண்தானா உங்களைக் காப்பாற்றுவதற்கு? அந்தப் பெண் யார்?''

''அவள் யாரோ எனக்குத் தெரியாது. ஆனால் இளவரசருக்கு முன்னால் பழக்கமுள்ளவளாகத் தோன்றியது... வீண் சந்தேகத்துக்கு ஆளாக வேண்டாம், அம்மணி! அந்த அம்மாள் பிராயம் முதிர்ந்தவள்...''

''எவ்வளவு பிராயம் இருக்கும்?''

''இளவரசரின் அன்னையாக இருக்கக் கூடியவள். அதோடு காது செவிடு, வாயும் ஊமை!''

''என்ன? என்ன? இன்னொரு தரம் சொல்லுங்கள்!''

''பிறவிச் செவிடும் ஊமையுமான ஒரு மூதாட்டி அவள். பிராயம் நாற்பத்தைந்துக்கு மேல் இருக்கும்...''

"ஐயா! அப்படி ஒரு மூதாட்டியை ஈழ நாட்டில் பார்த்தீரா? அவளைப் பற்றி மேலும் சொல்லுங்கள். அவளுடைய பிறப்பு வளர்ப்பைப் பற்றி ஒன்றும் தெரியாதா? அவள் எங்கே பிறந்தவள்?"

''ஈழநாட்டை அடுத்துக் கடலில் உள்ள ஒரு தீவில் பிறந்தவள்...''

இளவரசி குந்தவைதேவி அளவிலாத பரபரப்பை அடைந்து, ''ஐயா! இன்னும் சொல்லுங்கள்! பார்ப்பதற்கு அவள் எப்படியிருக்கிறாள்?'' என்றாள்.

''அம்மணி! அவளுடைய தோற்றத்தில் ஓர் அதிசயத்தைக் கண்டேன். அதைச் சொல்வதற்கே எனக்குத் தயக்கமாயிருக்கிறது.''

''தயக்கம் வேண்டாம்! சீக்கிரம் சொல்லுங்கள்.''

"சோழ நாட்டில் நான் பார்த்த ஒரு பெண்ணைப் போலவே அவள்



இருந்தாள். வயது மட்டுந்தான் அதிகம். ஆடை, ஆபரணங்கள் பூணாமல் தலைவிரி கோலமாயிருந்தாள். மற்றபடி இங்கே நான் பார்த்த பெண்ணைப் போலவே தோன்றினாள். அதே முகம்; அதே தோற்றம், உண்மையில் நான் ஒரு நிமிஷம் ஏமாந்து போய் விட்டேன்."

"ஐயா! அப்படிப்பட்ட பெண் - இங்கே உள்ளவள், - யார்?"

"இளவரசி! தங்களால் ஊகித்துத் தெரிந்து கொள்ள முடியவில்லையா?"

"நானா? இந்தப் பெண் வானதியா? தஞ்சை அரண்மனையில் உள்ள என்னுடைய அன்னையா?"

"நீங்கள் குறிப்பிட்ட யாரும் இல்லை."

"பழுவூர் இளையராணி நந்தினியா?"

"ஆம், நந்தினிதான்!"

"கடவுளே! அப்படியானால் நான் சந்தேகித்தது உண்மைதான்."

"என்ன சந்தேகித்தீர்கள்?"

"விஷ நாகத்தை விடக் கொடியவள் என்று எண்ணி நான் வெறுத்தவள் உண்மையில் என் தமக்கையாக இருக்கலாமோ என்று சந்தேகித்தேன். அது நிஜமென்று தாங்கள் சொல்வதிலிருந்து தெரிந்தது. விதியின் கொடுமையே கொடுமை. இதிலிருந்து குலம் கோத்திரம் தெரியாத ஒரு பெண்ணை அரச குலத்தைச் சேர்ந்தவர் மணப்பது எவ்வளவு பிசகு என்று தெரிகிறது."

"அம்மணி! நான் அவ்விதம் குலம் கோத்திரம் தெரியாதவன் அல்ல. எங்கள் மூதாதையர் முந்நூறு வருஷங்களாகச் செந்தமிழ் நாட்டை ஆண்டு வந்தார்கள். சேர சோழ பாண்டியர்களைச் சிறையில் அடைத்தார்கள். இன்றைக்கு எனக்கு இராஜ்யமில்லாத போதிலும் என் கையில் வாள் இருக்கிறது; என் தோளில் வலிமை இருக்கிறது; என் நெஞ்சில் தைரியம் இருக்கிறது..."

"ஐயா! தங்கள் பெருமைகளைக் கொஞ்சம் பின்னால் கேட்டுக் கொள்கிறேன். உடனே செய்வதற்குப் பல காரியங்கள் இருக்கின்றன. உம்முடைய உதவி இன்னமும் எனக்குத் தேவை. அளிப்பீர் அல்லவா?"

"எனக்கு ஆயிரம் உயிர் இருந்தால் அவ்வளவையும் தங்களுக்காகக் கொடுக்கச் சித்தமாயிருப்பேன்."

"ஓடக்காரப் பெண் பூங்குழலிக்கு நீர் உடன் பிறந்தவர் போலிருக்கிறது. நல்லது; அந்தப் பேச்சு இப்போது வேண்டாம். இதோ, இந்தப் பெண் கண்ணைத் திறக்கப் போகிறாள்..."

ஆம்; இதற்குள் வானதிக்குப் பூரண நினைவு வந்துவிட்டது. உடம்பிலும் சக்தி பிறந்துவிட்டது. மனத்தில் பலபல யோசனைகள் உதித்தன. இளவரசரிடம் அந்த ஓடக்காரப் பெண்ணின் அன்பை விடத் தன்னுடைய அன்பு அதிகமானது என்பதை நிரூபிக்கும் வரையில் நான் உயிரோடிருக்க வேண்டும் என்று தீர்மானித்தாள். அத்துடன் தஞ்சை அரண்மனையில் சக்கரவர்த்தி படுத்திருந்த அறையில் அன்றொரு நாள் இரவு தான் கண்ட காட்சியும் கேட்ட புலம்பலும் நினைவுக்கு வந்தன. அவற்றின் பொருளும் ஒருவாறு விளங்கத் தொடங்கிவிட்டது.

வானதி கண் விழித்ததும் இளைய பிராட்டி, "என் கண்ணே! உனக்கு இப்போது எப்படியிருக்கிறது?" என்று அன்போடு கேட்டாள்.

"எனக்கு ஒன்றுமில்லை, அக்கா! தங்களுக்குத் தொந்தரவு கொடுத்து விட்டேனே என்பதை நினைத்தால்தான் சங்கடமாயிருக்கிறது" என்றாள்.

அச்சமயத்தில் ஆழ்வார்க்கடியான் பிரவேசித்து, "நானும் தொந்தரவு கொடுக்கத்தான் வந்திருக்கிறேன், தேவி! அரண்மனை வாசலில் ஒரே ஜனக் கூட்டமும் குழப்பமுமாயிருக்கிறது. இளவரசர் கடலில் மூழ்கி விட்டது பற்றி ஜனங்கள் ஒரே ஆத்திரமாயிருக்கிறார்கள். தாங்கள் உடனே வந்து சமாதானம் சொல்லாவிட்டால் விபரீதம் நேரலாம்" என்றான்.

# இருபத்தைந்தாம் அத்தியாயம்

# முதன் மந்திரி வந்தார்

ழையாறை நகரின் வீதிகள் அன்றுவரை என்றும் கண்டிராதபடி அல்லோல கல்லோலமாயிருந்தன. அத்தொன்னகரில் இராஜ மாளிகைகள் இருந்த பகுதியை நோக்கி ஜனங்கள் திரள் திரளாகப் போய்க் கொண்டிருந்தார்கள். ஆண்களும் பெண்களும் வயோதிகர்களும் வாலிபர்களும் சிறுவர்களும் கூட்டம் கூட்டமாகச் சென்றார்கள். சைவர்களும் வைஷ்ணவர்களும் புத்தர்களும் சமணர்களும் அக்கூட்டத்தில் கலந்திருந்தார்கள். கடும் விரதங்கள் கொண்ட காலாமுகர்கள் சிலரும் அக்கூட்டத்தில் ஆங்காங்கு காணப்பட்டார்கள். மக்களில் அநேகர் அழுது புலம்பிக் கொண்டு சென்றார்கள். பலர் பழுவேட்டரையர்களை வாயாரச் சபித்துக்கொண்டு சென்றார்கள்.

வாலிபர்கள் சிலர் ஆங்காங்கே கையில் கழிகளுடன் காணப்பட்டார்கள். அவர்கள் அவ்வப்போது ஒருவருடைய கழியை இன்னொருவர் தட்டி ஓசைப் படுத்திக்கொண்டு சென்றார்கள். கழி அடிபடும் ஓசை கேட்டதும் "பழுவேட்டரையர்களின் தலையில் அப்படிப் போடு!" என்று சிலர் மெதுவாகச் சொன்னார்கள். சிலர் அவ்வாறு சத்தம் போட்டுக் கத்தினார்கள். சத்தம் போட்டுக் கத்தியவர்களில் காலா முகர்கள் முக்கியமாயிருந்தவர்கள்.

பழையாறையிலிருந்த முக்கியமான இராஜமாளிகைகளின் முன் முகப்புகள் பிறைச் சந்திரன் வடிவமாக அமைந்திருந்தன. எல்லா மாளிகைகளுக்கும் சேர்த்து முன் பக்கத்தில் விசாலமான நிலா முற்றம் இருந்தது. விசேஷமான சந்தர்ப்பங்களில் பதினாயிரக்கணக்கான மக்கள் கூடி நிற்கும்படியாக அந்த நிலா முற்றம் விசாலமாயிருந்தது. முற்றத்தைச் சூழ்ந்து வெளிப்புறத்தில் உயரமான மதில் சுவர் இருந்தது. அந்த மதில் சுவருக்கு மூன்று வாசல்கள் இருந்தன. ஒவ்வொரு வாசலிலும் சில அரண்மனைச் சேவகர்கள் காவல் புரிந்தார்கள்.

ரள்திரளாக வந்து கொண்டிருந்த கூட்டம் நிலா முற்றத்தின் மூன்று வாசல்களின் அருகிலும் வந்து சேரத் தொடங்கியது. வினாடிக்கு வினாடி கூட்டம் அதிகமாகிக் கொண்டிருந்தது. செய்தி கொண்டு வந்திருந்த இருவரையும் அவர்களை அழைத்து வந்த ஊர்ச்சேவகர்களையும் மட்டும் அரண்மனைக் காவலர்கள் உள்ளே விட்டார்கள். மற்றவர்களைத் தடுத்து நிறுத்தினார்கள். ஆனால் வெகுநேரம் தடுத்து நிறுத்தி வைக்க முடியவில்லை. கூட்டத்தில் எங்கிருந்து கிளம்புகின்றன என்று தெரியாதபடி சில குரல்கள் 'உள்ளே போங்கள்! உள்ளே போங்கள்!' என்று கூவின. பின்னாலிருந்தவர்கள் முன்னாலிருந்தவர்களைத் தள்ளினார்கள். கடலின் அலைகள் ஒன்றை ஒன்று தள்ளிக் கொண்டு வந்து கடைசிப் பேரலையைக் கரையிலே போய் மோதும்படி செய்கின்றனவல்லவா? அது போலவே இந்த ஜன சமுத்திரத்திலும் நடந்தது.

முன்னாலிருந்தவர்கள் பின்னால் வந்தவர்களால் மோதப்பட்டு வாசற் காவல் புரிந்த சேவகர்களைத் தள்ளிக் கொண்டு உள்ளே புகுந்தார்கள். அவ்வளவுதான்; காவேரிக் கரையில் சிறிய உடைப்பு எடுத்தாலும் வரவரப் பெரிதாகி வெள்ளம் குபுகுபுவென்று பாய்வது போல் ஜனங்கள் நிலா முற்றத்தில் தடதடவென்று பிரவேசித்தனர். சிறிது நேரத்துக்குள் நிலா முற்றம் நிறைந்து விட்டது. ஆயிரக்கணக்கான மக்கள் அங்கே சேர்ந்து விட்டார்கள்.

இப்படி ஜனங்கள் கட்டுக் காவல்களை மீறி நிலா முற்றத்தில் புகுந்து கொண்டிருந்தபோது ஏற்பட்ட ஆரவாரத்தைத்தான் செம்பியன் மாதேவி

மதுராந்தகனோடு பேசிக் கொண்டிருக்கையில் கேட்டார். குமாரனுடன் வாதாடுவதை அத்துடன் நிறுத்திவிட்டு, அரண்மனை மேல் மாடத்தின் முன் முகப்புக்கு வந்து சேர்ந்தார். தெய்வீகக் களை பொருந்திய அப் பெரு மூதாட்டியின் திருமுகத்தையும், கூப்பிய கைகளுடன் அவர் நின்ற சாந்தமான தோற்றத்தையும் பார்த்ததும் அந்த ஜன சமுத்திரத்தின் ஆரவாரம் அடங்கியது. சில வினாடி நேரம் அங்கே நிச்சப்தம் குடி கொண்டிருந்தது.



"தாயே! எங்கள் இளவரசர் எங்கே? பொன்னியின் செல்வர் எங்கே? தங்கள் கண்ணுக்குக் கண்ணான அருள்மொழி வர்மர் எங்கே?" என்று அக்கூட்டத்தில் சில குரல்கள் எழுந்தன. அவ்வளவுதான்; அந்த ஜன சமுத்திரத்தில் முன்னை விடப் பல மடங்கு ஆரவாரம் கிளம்பிவிட்டது.

செம்பியன் மாதேவி ஒன்றும் புரியாதவராகத் திகைத்து நின்றார். பழையாறை மக்களின் இதயங்களைக் கொள்ளை கொண்டிருந்த பொன்னியின் செல்வனுக்கு ஏதோ ஆபத்து நேர்ந்து விட்டது என்பதை மட்டும் அறிந்தாள். அது என்ன ஆபத்து? எப்படி நேர்ந்தது? பழுவேட்டரையர்களே ஏதேனும் விபரீதமான காரியம் செய்து சோழ குலத்துக்கும் மதுராந்தகனுக்கும் அழியாத பழியை உண்டாக்கி விட்டார்களோ?

இச்சமயத்தில் தஞ்சாவூர்த் தூதர்கள் இடித்துப் பிடித்து ஜனங்களைத் தள்ளிக் கொண்டு முன்னால் வந்து சேர்ந்தார்கள். அவர்களை அழைத்துக் கொண்டு வந்த சேவகர்களில் ஒருவன்,



"பெருமாட்டி! இவர்கள் தஞ்சாவூரிலிருந்து முக்கியமான செய்தி கொண்டு வந்திருக்கிறார்கள்!" என்றான். செம்பியன் மாதேவி ஜனக் கூட்டத்தைப் பார்த்துக் கை அமர்த்தி விட்டுத் தூதர்களை நோக்கி, "என்ன செய்தி கொண்டு வந்தீர்கள்!" என்று கேட்டார்.

"தாயே! மிகத் துயரமான செய்தி கொண்டு வந்திருக்கும் அபாக்கிய சாலிகள் நாங்கள். சக்கரவர்த்தியின் கட்

டளையின் பேரில் இளவரசர் அருள்மொழி வர்மர் இலங்கையிலிருந்து கோடிக்கரைக்குக் கப்பலில் வந்து கொண்டிருந்தார். வரும் வழியில் சுழிக் காற்றில் கப்பல் அகப்பட்டுக் கொண்டு விட்டது. துணையாக வந்த கப்பல் உடைந்து முழுகி விட்டது. அதிலிருந்தவர்களைக் காப்பாற்றுவதற்காக இளவரசர் கடலில் குதித்தார். பிறகு அகப்படவில்லை. கடலிலும் கடற்கரையெங்கும் தேடுவதற்கு ஏற்பாடு செய்திருக்கிறது. சக்கரவர்த்தியும் மலையமான் மகளாரும் இச் செய்தியைக் கேட்டுப் பெருந்துயரில் ஆழ்ந்திருக்கிறார்கள். தங்களையும் மதுராந்தகத் தேவரையும் இளையபிராட்டியையும் உடனே வரும்படி சக்கரவர்த்தி எங்கள் மூலம் செய்தி அனுப்பியிருக்கிறார்!''

இவ்வாறு தூதர்கள் கூறியது செம்பியன் மாதேவியின் காதிலும் விழுந்தது. அதே சமயத்தில் ஜனக்கூட்டத்தின் செவிகளிலும் விழுந்தது.

செம்பியன் மாதேவியின் கண்களில் நீர் தாரை தாரையாகப் பெருகியது. அதைப் பார்த்த ஜனங்கள் மேலும் 'ஓ' என்று கதறினார்கள்.

கூட்டத்தில் முன்புறம் இருந்தவர்களில் ஒருவர் ''தாயே! தாங்கள் தஞ்சை போகக் கூடாது! இளையபிராட்டியும் தஞ்சைக்குப் போகக் கூடாது. சக்கரவர்த்தியை இங்கே வரும்படி செய்ய வேண்டும்'' என்று கூவினார்.

''பொன்னியின் செல்வர் கடலில் முழுகி விட்டார் என்பது பொய். பழுவேட்டரையர்கள்தான் அவரைக் கொன்றிருப்பார்கள்!'' என்றார் இன்னொருவர்.

''மதுராந்தகரும் இனி தஞ்சைக்குப் போகக்கூடாது. இங்கேயே இருக்க வேண்டும்!'' என்று இன்னொரு குரல் கேட்டது.

''இளையபிராட்டி எங்கே? அவரை நாங்கள் பார்க்க வேண்டும்!'' என்று பல குரல்கள் கூவின.

செம்பியன் மாதேவி தன் அருகிலிருந்த சேடிகளில் ஒருத்தியைப் பார்த்து இளவரசியை அழைத்து வரச் சொன்னார்.

கீழே கூட்டத்தில் கலந்து நின்று கொண்டிருந்த ஆழ்வார்க்கடியானும் அதேசமயத்தில் அங்கிருந்து நகர்ந்து சென்றான். பழையபடி குறுக்கு வழியில் விரைவாகச் சென்று, குந்தவை தேவி, வானதியை மூர்ச்சை தெளிவித்துக் கொண்டிருந்த கொடி வீட்டைக் கண்டு பிடித்தான். வந்தியத்தேவனிடம் இளையபிராட்டி கூறிய கடைசி வார்த்தைகளைக் கேட்டுக் கொண்டே சென்று அரண்மனை முற்றத்தில் நடக்கும் அமர்க்களத்தைப் பற்றி அறிவித்தான்.

இளையபிராட்டி வானதிக்குச் சைத்யோபசாரம் செய்யும் வேலையைப் பணிப்பெண்களிடம் ஒப்புவித்துவிட்டு, அவசரமாகக் கிளம்பினாள்.



ளையபிராட்டி குந்தவை தேவி அரண்மனை மேல் மாட முகப்பில் செம்பியன் மாதேவியின் அருகில் நெருங்கியபோது, அந்த மூதாட்டியின் கண்களிலிருந்து கண்ணீர் பெருகுவதைக் கவனித்தாள். அந்தக் காட்சி குந்தவையின் கண்களிலும் கண்ணீர் பெருகச் செய்தது. இதைக் கண்ட ஜன சமூகம் மேலும் துயர சாகரத்தில் மூழ்கியது.

''பொன்னியின் செல்வர் கடலில் மூழ்கவில்லை. பழுவேட்டரையர்கள் கொன்று விட்டார்கள். அவர்களைப் பழிக்குப் பழி வாங்க வேண்டும்!''

''சக்கரவர்த்தியைப் பழுவேட்டரையர்கள் சிறையில் வைத்திருக்கிறார்கள். அவரை விடுவித்து அழைத்து வர வேண்டும். இளவரசி கட்டளையிட்டால் இந்தக் கணமே நாங்கள் புறப்படச் சித்தமாயிருக்கிறோம்.''

இவ்வாறெல்லாம் அந்தக் கூட்டத்திலிருந்தவர்கள் இளையபிராட்டியைப் பார்த்துக் கூவினார்கள்.

குந்தவையின் மனம் தீவிரமாகச் சிந்தித்தது. இளவரசர் உயிரோடிருக்கிறார் என்ற உண்மையை இப்போது வெளியிடக் கூடாது. ஆனால் ஜனங்களையும் சமாதானப்படுத்தி அனுப்ப வேண்டும். அதற்கு ஒரு வழி தோன்றியது.



கண்ணில் பெருகிய கண்ணீரைத் துடைத்துக் கொண்டு ஜனக்கூட்டத்தின் முன் வரிசையில் நின்றவர்களை இளவரசி நோக்கினாள். அதற்குள் ஆழ்வார்க்கடியானும் வந்தியத்தேவனும் அங்கே வந்து நின்று கொண்டிருந்தார்கள். ஆழ்வார்க்கடியானைப் பார்த்து இளைய பிராட்டி மேலே வரும்

படி சமிக்ஞை செய்தாள். ஆழ்வார்க்கடியான் அவ்விதமே மேலே ஏறிச் சென்றான். அவனிடம் குந்தவை மெல்லிய குரலில் ஏதோ கூறினாள்.

ஆழ்வார்க்கடியான் ஜனங்களைப் பார்த்து கையமர்த்தினான். இடி முழக்கம் போன்ற பெரிய குரலில் கூறினான்: "பொன்னியின் செல்வர் இறந்திருப்பார் என்று இளையபிராட்டியினால் நம்ப முடியவில்லை. முன்னொரு சமயம் காவேரித் தாய் இளவரசரை ஏந்திக் காப்பாற்றியது போல் சமுத்திர ராஜனும் அவரைக் காப்பாற்றியிருப்பார் என்று நம்புகிறார். நிமித்தக்காரனைக் கேட்டதில் அவனும் அப்படியே சொல்கிறானாம். இளவரசரைத் தேடிக் கண்டுபிடிக்க இளையபிராட்டி தக்க ஏற்பாடு செய்வார். உங்களையெல்லாம் நிம்மதியாக வீட்டுக்குத் திரும்பிப் போகும்படி கேட்டுக் கொள்கிறார்!"

இதைக் கேட்டதும் அந்த ஜனக் கூட்டத்தில் ஒரு பெரிய ஆசுவாச நெடுமூச்சைப் போன்ற சத்தம் எழுந்தது.

"நிமித்தக்காரன் எங்கே? அவன் வாயினால் நாங்களும் அந்த நல்ல செய்தியைக் கேட்கிறோம்" என்றார் ஒருவர்.

இதுதான் சமயம் என்று வந்தியத்தேவன் தாவிக் குதித்து மேல்மாடத்துக்குச் சென்றான்.

ஆழ்வார்க்கடியான் அருகில் போய் நின்றுகொண்டு, "இளவரசருக்குப் பெரிய கண்டம் நேர்ந்தது உண்மைதான். ஆனால் அவருடைய உயிருக்கு அபாயம் ஒன்றும் நேரவில்லை. விரைவில் கிடைத்து விடுவார்!" என்றான்.

"உனக்கு எப்படித் தெரியும்?" என்றது ஒரு குரல்.

"நான் நிமித்தக்காரன். கிரஹங்களையும் நட்சத்திரங்களையும் பார்த்து அறிந்து கொண்டேன். நிமித்தங்களைப் பார்த்தும் தெரிந்து கொண்டேன்."

"பொய்! நீ சொல்வது பொய்! நீ நிமித்தக்காரன் அல்ல! நீ ஒற்றன்!" என்றது அதே குரல்.

வந்தியத்தேவன் அந்தக் குரலுக்கு உரியவனைக் கவனித்துப் பார்த்தான். அவன் வைத்தியர் மகன் என்பதை அறிந்துகொண்டான்.

"பைத்தியக்காரா! என்னையா ஒற்றன் என்று சொல்கிறாய்? நான் ஒற்றனாயிருந்தால், யாருடைய ஒற்றன்?" என்று கேட்டான்.

"பழுவேட்டரையர்களுடைய ஒற்றன்!" என்று வைத்தியர் மகன் பளிச்சென்று மறுமொழி கூறினான்.

"என்ன சொன்னாய்?" என்று வந்தியத்தேவன் கர்ஜித்தான்.

ஜனங்கள் கீழே நின்ற நிலா முற்றத்திலிருந்து வந்தியத்தேவன் நின்ற மேல் மாடம் பன்னிரண்டு அடி உயரத்தில் இருந்தது. அதை அவன் பொருட்படுத்தாமல் மேல் மாடத்திலிருந்து வைத்தியர் மகன் பேரில் பாய்ந்தான்.

இருவருக்கும் துவந்த யுத்தம் ஆரம்பமாயிற்று. சண்டை என்றால் எல்லாருக்கும் எல்லாக் காலத்திலும் வேடிக்கை பார்ப்பதில் பிரியம் உண்டு அல்லவா?

வந்தியத்தேவனுக்கும் வைத்தியர் மகனுக்கும் சண்டை நடந்த இடத்தைச் சுற்றி இடைவெளி விட்டு ஜனங்கள் வட்ட வடிவமாக நின்று வேடிக்கை பார்க்கத் தொடங்கினார்கள்.

மேல் மாடத்தில் இருந்தவர்கள் கவலையுடன் அதை நோக்கினார்கள்.

ஜனக் கூட்டத்தில் பெரும்பாலோர் விஷயம் இன்னதென்று தெரிந்து கொள்ளாமலே முன்னைவிட அதிகக் கூச்சல் போடத் தொடங்கினார்கள்.

இச் சமயத்தில் வாசற் பக்கத்திலிருந்து சங்கநாதமும் கொம்புகளின் முழக்கமும் கேட்டன.

"முதன் மந்திரி அநிருத்தப் பிரம்மராயர் வருகிறார். வழி விடுங்கள்!" என்ற குரல் முழக்கமும் கேட்டது.

அந்தப் பெருங்கூட்டத்தில் முதன் மந்திரிக்குத் தானாகவே வழி ஏற்பட்டது.

(தொடரும்)

கல்கி கலெக்ஷன்

அமரர் கல்கி

# ஒரு கனவு

நேற்றிரவு ஓர் அதிசயமான கனவு கண்டேன். தயவு செய்து அதைக் கேளுங்கள்; கேட்டபின் நீங்கள் "கனவென்றால் இதுவல்லவா கனவு?" என்று சொல்வீர்கள்.

• • •

"அடாடா! இவ்வளவு நாள் தெரியாமல் போய் விட்டதே!" என்று பெரிதும் தவித்துப் போனேன். வெண்ணெயை வைத்துக்கொண்டு நெய்க்கு அழுத கதையாக அல்லவா போயிற்று? உலகத்தையே வென்று விடுவதற்குரிய உபாயம் கையில் இருக்க, இந்தியாவிலுள்ள ஒன்றரை லட்சம் வெள்ளைக்காரர்களை வென்று சுயராஜ்யம் சம்பாதிப்பதுதானா ஒரு பெரிய காரியம்? – காங்கிரஸ்வாதிகள், மிதவாதிகள் எல்லாரும் முழித்துக் கொண்டு நிற்கட்டும்; நாம் முந்திக் கொண்டு இந்தியாவிற்குப் பூரண சுதந்திரத்தை அளித்து விடுவோம் என்று நிச்சயம் செய்தேன்.

உடனே, படை திரட்டும் முயற்சி ஆரம்பமாயிற்று. இது சுலபமாக இல்லை. ரொம்பவும் கஷ்டமாயிருந்தது. சிலருக்குப் பணத்தாசை காட்டியும், சிலருக்குப் புகழ் ஆசை ஊட்டியும், வேறு சிலரைப் பயமுறுத்தியும், மற்றும் சிலரைப் பலாத்காரப் படுத்தியும் கொண்டு சேர்க்க வேண்டியிருந்தது. கடைசியாக, ஒரு பெரிய படை திரண்டு விட்டது. தென்னாட்டில் போருக்குத் தகுதியானவர்கள் அனைவரும் அதிலே சேர்ந்திருந்தார்கள் என்பதை உங்களுக்கு மகிழ்ச்சியுடன் தெரிவிக்கிறேன். இந்த வீர சுதந்திரப் படையில் ஸ்திரீகளும் சம பகுதியாயிருந்தார்கள் என்பதை நினைக்கும்போது என்னுடைய தோள்கள் பெருமையினால் பூரிக்கின்றன.

ஆனால் உலக சரித்திரத்திலேயே இதைப் போன்ற கட்டுக்கடங்காத போர் வீரர் படை இருந்திராது என்று சொல்வேன். கிழக்கே பார் என்றால் வடக்கே பார்ப்பார்கள். நிமிர்ந்து நில் என்றால் தலைகீழாக நிற்பார்கள். ஒருவரைக் கண்டால் இன்னொருவருக்கு ஆகாது. நெல்லிக்காய் மூட்டை என்றால் இந்தச் சைன்யத்துக்குத்தான் சொல்லலாம்.

ஸ்திரீகள் பகுதியிலோ சொல்ல வேண்டியதில்லை. ''மார்ச்'' என்ற கட்டளை பிறக்கும்போதுதான் அந்த வீர நாரீ மணிகள், கடைசியாக ஒருமுறை கண்ணாடி பார்த்து வரவும், முகப் பவுடர் பூசிக் கொள்ளவும் மற்றும் இதுபோன்ற முக்கியமான காரியங்களுக்காகவும் ஓடுவார்கள்.

இப்பேர்ப்பட்ட சைன்யத்தை வைத்துக்கொண்டு, கட்டுப்பாட்டிலும் ஆயுத பலத்திலும் நிகரற்ற பிரிட்டிஷாரை வெல்லுவதற்குக் கிளம்பின என் பேரில் அநுதாபப் படுகிறீர்களல்லவா? உண்மைதான். ஆயினும் நான் திரட்டிய இந்தச் சைன்யம் ஒன்றினாலேயே அவர்களை வெல்ல முடியும் என்ற திட நிச்சயத்தினால்தான் இதில் தலையிட்டேன். ''துணிவுள்ளவர்கள்தான் வெற்றியடைவார்கள்'' என்னும் கொள்கை என்



பிரபு புதியவர். என்ன செய்வதென்று அவருக்கு ஒன்றும் புரியவில்லை. மீனம்பாக்கத்துக்கு மோட்டாரில் சென்று அங்கே ஓர் ஆகாய விமானத்தைப் பிடித்து நேரே டில்லிக்குச் சென்றார் - வைஸராய் அவர்களிடம் யோசனை கேட்க!

அப்புறம், எங்களுடைய திக்விஜயம் ஆரம்பமாயிற்று. சென்ற இடமெல்லாம் வெற்றி, வெற்றி, வெற்றியே.

பல்லாவரத்திலும், பெங்களூர் தண்டிலும் இருந்த ஆங்கில ஸோல்ஜர்கள் சென்னைக் கோட்டையிலிருந்தவர்களைப் போலவே எங்கள் சுதந்திரப் படை தாக்க ஆரம்பித்து ஓடிவிட்டார்கள். பிறகு, வழியிலே ஆங்காங்கிருந்த ஆங்கில ஸோல்ஜர்களும் சரி, ஆங்கில அதிகாரிகள், வியாபாரிகள் முதலியோரும் சரி, நாங்கள் வருகிறோம் என்ற செய்தியைக் கேட்டதுமே ஓடத் தொடங்கினார்கள்.

விஷயத்தில் உண்மையாயிற்று.

● ● ●

முதன் முதலில், சென்னைக் கடற்கரையோரமுள்ள ஸெண்ட் ஜார்ஜ் கோட்டைக்குப் போனோம். இக் காலத்தில் பெரிய தளபதிகள் அனுசரிக்கும் முறையைப் பின்பற்றி நானும் படைக்குப் பின்னால் பத்திரமான இடத்தில் நின்றுகொண்டு "தாக்குங்கள்" என்று உத்தரவு பிறப்பித்தேன். எங்கே சமயத்தில் பின்வாங்கி விடுவார்களோ என்று நான் பயந்தது, நல்லவேளையாய், உண்மையாகவில்லை, போர் வீரர்கள் ஏக காலத்தில் தங்கள் முழு பலத்தையும் பிரயோகிக்கலானார்கள்.

கோட்டைக்குள் அப்போது ஏற்பட்ட கலக்கத்தைப் பார்க்க வேண்டுமே, நீங்கள்? எதிரிகள் தாக்கத் தொடங்கியதும் ஆங்கில ஸோல்ஜர்கள் விழுந்தடித்து ஓடிய அந்த அபூர்வக் காட்சியைப் போல் இதற்கு முன் யாரும் பார்த்திருக்க மாட்டார்கள் என்பது நிச்சயம்.

இந்தச் செய்தி கவர்னர் மாளிகைக்கு எட்டிற்று. பாவம்! கவர்னர் எர்ஸ்கின்

● ● ●

கடைசியாக, டெல்லிக்குப் போய்ச் சேர்ந்தோம். அதற்குள் சகல மாகாண கவர்னர்களும் அங்கு வந்து சேர்ந்து விட்டார்கள். வைஸராய் என்ன, கவர்னர்கள் என்ன, சேனாதிபதி என்ன, நிர்வாக சபை மெம்பர்கள் என்ன? எல்லாரும் இரவு பகலாக எங்களுடைய படையெடுப்பை எப்படித் தடுப்பது என்பது பற்றி யோசனை செய்து கொண்டிருந்ததாகத் தெரிந்தது.

டில்லிக்கு வெளியில் நாங்கள் இருந்த போதே ஆங்கிலப் படைகள் எங்களை எதிர்க்க வந்தன. ஸோல்ஜர்கள் எல்லாரும் தங்களுடைய இரண்டு காதுகளிலும் பஞ்சு

வைத்து அடைத்துக் கொண்டு வந்தார்கள். மேன்மை தங்கிய லேடி வில்லிங்டன் அவர்களுடைய யுக்தி இது என்று பின்னால் தெரிய வந்தது.

ஆனால் அதெல்லாம் எங்களிடம் பலிக்குமா? "தாக்குங்கள்" என்று உத்தரவு பிறந்தது. சுதந்திரப் படை வீரர்கள் தாக்கத் தொடங்கினார்களோ, இல்லையோ, ஸோல்ஜர்களின் காதில் இருந்த பஞ்சுக் கத்தைகளெல்லாம் பொல பொல வென்று கீழே விழுந்து விட்டன. பார்க்க வேண்டுமே அவர்களுடைய ஓட்டத்தை!

ஆகாய விமானங்களையும் அனுப்பிப் பார்த்தார்கள். பலிக்கவில்லை. அவைகளைத் தூரத்தில் கண்டவுடனேயே, சுதந்திர வீரர்கள் தங்கள் தாக்குதலைத் தொடங்கவே, ஆகாய விமானங்கள் எங்கள் அருகிலேயே வராமல் ஒதுங்கிச் சென்றுவிட்டன.

பிறகு, சமாதானத்துக் கறிகுறியான வெள்ளைக் கொடியுடன் ஒரு தூதுவன் வந்தான். தாங்கள் பம்பாய்க்குச் சென்று கப்பலேறிப் போய் விடுவதாகவும், போகுங் காலையில் எவ்விதத் தொந்தரவும் செய்யக் கூடாதென்றும் அதில் கேட்டிருந்தார்கள். அதற்கு நாங்களும் இசைந்தோம். அவர்களுக்குச் சுமார் பத்து மைல் தூரம் பின்னாலேயே நாங்கள் சென்று கொண்டிருந்தோம்.

பம்பாய் வாசிகள் என்றும் காணாத காட்சியைக் கண்டார்கள். இந்தியாவிலிருந்த வெள்ளைக்காரர்கள் அவ்வளவு பேரும், தங்கள் நகருக்கு வந்து அவசர அவசரமாய்க் கப்பல் ஏறுவதைப் பார்த்தார்கள். எல்லாரும் கப்பல் ஏறிய பிறகு நாங்கள் கடற்கரையை அடைந்தோம். கப்பல் கிளம்பக் கொஞ்சம் தாமதமாயிற்று. வைஸராய்க்கும் மற்றவர்களுக்கும் மறுபடியும் கொஞ்சம் சபலம் தட்டியிருக்குமோ என்று தோன்றிற்று. எனவே, "தாக்குங்கள்" என்று மறுபடி உத்தரவு இட்டேன். அவ்வளவுதான், வைஸராய் வில்லிங்டன் கப்பல் மேல் தளத்துக்கு வந்து துயரம் ததும்பிய முகத்துடன் "போய் வருகிறோம்!" என்று சமிக்ஞையால் தெரிவித்தார். கப்பல்கள் கிளம்பின.

● ● ●

டில்லியில் இந்தியாவின் பூரண சுதந்திர அரசாங்கம் ஸ்தாபிக்கப்பட்டது. தேசமக்கள் நன்றியறிதலுடனே எங்களுடைய ஞாபகார்த்தமாக ஒரு பெரிய ஜயஸ்தம்பம் நாட்டினார்கள். அதிலே பின் வருமாறு எழுதப்பட்டிருந்தது:-

**"இந்தியாவில் விடுதலைக்காகத் தமது செவிப் புலனைத் தத்தம் செய்து முழுச் செவிடாய்ப் போன கல்கிக்கும், அவருடைய தலைமையில் கத்தியின்றி**



# அவசரமான காரியம்

குடியரசு இந்தியாவின் பொதுத் தேர்தல்கள் நெருங்க நெருங்கப் புதிய புதிய கட்சிகள் சிருஷ்டியாகி வருவது யாரும் எதிர்பார்க்காத விஷயம் அல்ல. காங்கிரஸ் அக்ராசனராக இருந்த ஆச்சாரிய கிருபளானியின் தலைமையில் ஒரு கட்சி ஏற்படப் போகிறது. இப்போது பிரபல வங்காளத் தலைவர்களான டாக்டர் பி.ஸி. கோஷ், டாக்டர் சுரேச சந்திர பானர்ஜி இவர்களின் தலைமையில் மற்றொரு கட்சி உருவாகப் போகிறது. இத்தகைய காரியங்களுக்கு எப்போதுமே வங்காளம் பெயர் பெற்றதாதலால், அங்கு ஏற்படவிருக்கும் புதிய கட்சியை அலட்சியமாகக் கருதுவதற்கில்லை. இவ்விதம் மகத்தான காங்கிரஸ் ஸ்தாபனத்தைச் சேர்ந்தவர்கள் தாய் ஸ்தாபனத்திலிருந்து பிய்த்துக் கொண்டு தனித் தனியாகக் கட்சிகளையும் கோஷ்டிகளையும் சிருஷ்டித்துக் கொண்டிருந்தால், காங்கிரசின் எதிர்காலம், தேசத்தின் எதிர்காலம் என்ன ஆவது? காங்கிரசின் பெருமை குறைந்து அதில் ஊழல்கள் மலிந்து விட்டன என்ற காரணத்தினாலேயே பல பிரமுகர்களும் அதிலிருந்து விலகிப் புதிய கட்சிகளைச் சிருஷ்டிக்க முற்படுகிறார்கள். எனவே, அதற்கு இடம் கொடுக்காமல் இருக்க வேண்டியது காங்கிரஸ் மேலிடத்தாரின் முழு முதற் கடமையாகும். காங்கிரசில் படிந்துள்ள ஊழல்களைக் களைந்து அதைத் தூய்மைப் படுத்தும் கைங்கர்யத்தை அவர்கள் இனி ஒரு விநாடியும் தாமதமின்றி அவசரமாக மேற்கொள்ள வேண்டும்.

— அமரர் கல்கி

(கல்கி, நவம்பர் 19, 1950)

இரத்தமின்றித் தங்கள் தொண்டையின் வலிவையும், கரங்களின் பலத்தையும் கொண்டே யுத்தம் செய்து பூரண சுதந்திரத்தை நிலை நாட்டிய வீரர்களுக்கும் ஞாபகச் சின்னம்."

இதற்குக் கீழே யுத்த வீரர்களின் பெயர்கள் பொறிக்கப்பட்டிருந்தன. சென்னையில், இந்த வாரத்தில் மியூஸிக் அகாடமி, பைன் ஆர்ட்ஸ் ஸொஸைடி இவ்விரண்டு சபைகளின் ஆதரவிலும் கச்சேரி நடத்திய தென்னாட்டுப் பாடகர்கள், வாத்தியக்காரர்கள் அனைவருடைய பெயர்களும் இருந்தன. பின்னர், டாக்கி நட்சத்திரங்கள், நாடக மேடைத் திலகங்கள், கிராமபோன் பிரசித்தி பெற்ற குயில்கள், கிளிகள் எல்லாருடைய பெயர்களும் இருந்தன.

ஆமாம்; எவ்வளவோ முன் ஜாக்கிரதையுடன் படைக்கு வெகுதூரம் பின்னாலேயே நான் இருந்து வந்தும், செவிகளைப் பறி கொடுத்தேன். ஆனாலும் என்ன? இந்தியாவின் சுதந்திரத்துக்காக இந்தத் தியாகம் செய்வது ஒரு பெரிதா? மேலும் இன்னொரு அனுகூலமும் இருக்கிறதே? இனிமேல் சங்கீதம் கேட்க வேண்டாமே?

● ● ●

"அம்மா!" என்ற சத்தம் கேட்டுத் திடுக்கிட்டு விழித்துக்கொண்டேன். வாசலில் பால்காரன் ஓட்டிச் சென்ற எருமை மாட்டின் குரல் அது. நல்ல வேளை! காது செவிடாகவில்லை. இதை எண்ணியபோது எருமையின் குரல் கூடக் கர்ணாமிர்தமாயிருந்தது.

கண்டது எல்லாம் கனவு என்று உணர்ந்தேன். "பண்டித மோதிலால்" பாடிப் பிரசித்தி பெற்ற ஸ்ரீமதி கே.பி. சுந்தராம்பாள் அவர்கள் சமீபத்தில் ஒரு சங்கீத மகாநாட்டில் **"சங்கீதத்தினால் உலகத்தையே வெற்றி கொள்ளலாம்!"** என்று சொன்னார்களல்லவா? அதை நினைத்துக் கொண்டே தூங்கி விட்டதன் பலன்தான் மேற்படி கனவெல்லாம். காலையில் கண்ட சொப்பனம் பலிக்கும் என்பார்கள். ஒருவேளை இதுவும் பலிக்குமோ, என்னமோ?

(ஆனந்தவிகடன்)

**சென்னைக்கு வந்திருந்தார் மத்திய மனிதவள மேம்பாட்டுத் துணை அமைச்சர் உமாபாரதி. பிற்பகல் மூன்று மணிக்கு அப்பாயிண்ட்மெண்ட். நாம் போனவுடன் "ஒரே தலைவலி. (ஹோமியோபதி) மருந்து சாப்பிட்டிருக்கிறேன். ஒரு அரைமணி டயம் கொடுங்கள். சின்னதாய் ஒரு தூக்கம் போட்டால், சரியாகி விடும். சிரமத்துக்கு ரொம்ப வருந்துகிறேன். என்னை மன்னிப்பீர்கள் இல்லையா?" என்றார்.**

**காத்திருந்தோம். அவர் மறுபடி எழுந்தபோது மணி நான்கு. புறப்படத் தயாரானவர், நம்மையும் தம்முடன் காரில் அழைத்துக்கொண்டார். விருந்தினர் இல்லத்தில் புறப்பட்டு, மே. மாம்பலத்தில் ஒரு கல்யாண மண்டபத்தை அடைகிறவரை நமக்கு பேட்டியளித்தார். நாம் விடைபெறும்போது மீண்டும் "ரொம்ப சாரி! உங்களுக்கு ரொம்பவே சிரமம் கொடுத்து விட்டேன். என்னை மன்னிப்பீர்களில்லையா?' என்று கேட்டு, தர்மசங்கடப் படுத்தி விட்டார்! இனி பேட்டியிலிருந்து...**




*"முதல் தடவையாக மத்திய அமைச்சர் பதவியில் இருக்கிற உங்களுடைய தனிப்பட்ட சாதனை என்று எதைச் சொல்லுவீர்கள்?"*

"அமைச்சர் பதவிக்குப் புதுசு என்பதால் பதவி ஏற்ற இரண்டு மூன்று மாதங்களுக்கு எதுவும் எனக்குப் பிடிபடவில்லை. அப்புறம் ஒருவாறு புரிந்து கொண்டு செயல்பட ஆரம்பித்தேன். எனக்கு மனித வள மேம்பாட்டுத் துறை இளைஞர் நலத்துறை கிடைத்ததில் பெரும் மகிழ்ச்சி. காரணம், இளைஞர்கள் கையில்தான் இந்த தேசத்தின் எதிர்காலம் இருக்கிறது என்பது என் அசைக்க முடியாத நம்பிக்கை. அந்த இளைஞர் சக்தியை, தேசத்தின் முன்னேற்றத்துக்குப் பயன்படும் படியாக, ஒரு புதிய திட்டத்தை நான் தீட்டியது, எனக்கு ஆத்ம திருப்தி அளித்த ஒரு விஷயம் என்று பெருமையுடன் சொல்லுவேன். தேசிய மறுசீரமைப்பு படை (நேஷனல் ரீ கன்ஸ்டிரக்ஷன் கார்ப்ஸ்) என்ற அந்தத் திட்டத்தின்படி, இளைஞர்கள் தங்கள் பதினெட்டாவது வயதிலிருந்து, இருபத்து ஐந்தாம் வயதுக்குள் ஒரு வருட காலத்தை நாட்டு நலனுக்காக அர்ப்பணிக்க வேண்டும்! என்பது அதன் சாராம்சம். அந்த ஒரு வருட காலத்தில், கல்வி, உடல்நலம், கிராம மேம்பாடு என்று எந்தத் துறையில் வேண்டுமானாலும் அவர்கள் சேவை செய்யலாம். இதை இந்திய இளைஞர்கள் ஒவ்வொருவருக்கும் கட்டாயம் என்று கொண்டு வர வேண்டும் என்பது தான் எனது ஆசை. ஆனால், பி.ஜே.பி.க்கு தனி பலம் இல்லாத சூழ்நிலையில் இதைக் கட்டாயமாக்குவது சாத்தியமில்லாமல் போய் விட்டது. எனவே இப்போதைக்கு, விரும்பும் இளைஞர்கள், இத்திட்டத்தின் மூலமாக தேசத்துக்கு ஒரு வருட காலம் உழைக்கலாம்."

*"ஜெயலலிதாவால்தான் உங்கள் ஆட்சி*

கவிழும் என்று நீங்கள் எதிர்பார்த்திர்களா?"

"ஆம்; ஆரம்பத்தில் ஆதரவுக் கடிதம் கொடுப்பதில் தாமதம் செய்தபோதே, இவரிடமிருந்து அடுக்கடுக்காய் பிரச்னைகள் தொடரும் என்பது எதிர்பார்த்ததுதான். ஆனால் ஒரு முக்கியமான கட்டத்தில், இவ்வளவு சீக்கிரமாகக் கவிழ்ப்பார் என்று எதிர்பார்க்கவில்லை. சோனியாவும், ஜெயலலிதாவும் சேர்ந்து செய்த சதிதான் இது."

"இப்போதுள்ள சூழ்நிலை, பா.ஜ.க.வுக்கு தேர்தலில் சாதகமான நிலையை ஏற்படுத்தியுள்ளதா?"

"நிச்சயமாக! வாஜ்பாய் அரசு, அநியாயமாகக் கவிழ்க்கப்பட்டு விட்டது என்ற அனுதாபம்; ஓராண்டில் வாஜ்பாய் அரசின் சாதனைகள்; பிராந்தியக் கட்சிகளுக்கும், கூட்டணியில் முக்கியத்துவம்; சமீபத்தில் கார்கில் ஊடுருவல் காரணமாக ஏற்பட்டுள்ள ஒன்றுபட்ட தேசிய அளவிலான எழுச்சி; சோனியாவின் இத்தாலியக் குடியுரிமை பிரச்னை என்று பல விதமான சாதகமான விஷயங்களால், பா.ஜ.க. கூட்டணிக்கு நிச்சயம் மெஜாரிட்டி கிடைக்கும் என்பதில் சந்தேகமில்லை.

"உமா பாரதி என்பதுதான் உங்கள் இயற்பெயரா? தமிழ்ப் பெயர் போல இருக்கிறதே!"

"என் இயற் பெயர் உமா. நான் சன்னியாசம் பெற்றபோது, என் பெயருடன் 'பாரதி'யைச் சேர்த்து உமாபாரதியாக்கியவர் கர்நாடகத்தைச் சேர்ந்த என்னுடைய குருஜி."

"பாரதியார் புகழ் பெற்ற தேசியக் கவிஞர். தமிழ்நாட்டுக்காரர். அவரைப் பற்றிக் கேள்விப்பட்டதுண்டா?"

"ஓ எஸ்! அவர் வேற்றுமை பல கொண்ட இந்தியாவில் ஒற்றுமையாகப் போராட வேண்டியதன் அவசியத்தை வலியுறுத்திய தேசியக் கவிஞர். வீரம் செறிந்த அவரது கவிதைகளை நான் வாசித்தது உண்டு. உலகளாவிய அவரது பார்வை என்னை மிகவும் கவர்ந்த ஒன்று. தமிழ்நாட்டைச் சேர்ந்த இன்னொரு தலைவரும் என்னை மிகவும் கவர்ந்தவர். அவர் காமராஜர். அதிகம் படிக்காவிட்டாலும், அனுபவம் அதிகம் கொண்டவர். எளிமையின் மறுஉருவம்; அகில இந்திய அளவில் அவரது அனுபவம், அரசியலின் பங்கு முக்கியமானது!"

"எப்படியும் ஒருநாள் சோனியாகாந்தி இந்தியாவின் பிரதமராக வரக்கூடும் என்று நினைக்கிறீர்களா?"

"இந்தியாவில் மக்களுக்குப் பதில் முதுகெலும்பில்லாத புழுக்கள் இருந்தால் மட்டுமே அது சாத்தியம். கண்டிப்பாக அந்த நிலைமை இந்தியாவில் கிடையாது!"

"வரப் போகிற தேர்தலை விடுங்கள். அதற்கடுத்த தேர்தல் எப்போது நடக்கும்?"

"உங்களுக்கு ரொம்பத்தான் குறும்பு!"

சந்திப்பு: எஸ். சந்திரமௌலி

ஸ்ரீ ராம ஜெயம்

# வடமாநில புனித யாத்திரை

25 ஆண்டு களுக்கும் மேலான அனுபவம்

6.9.99 இது 22 நாட்கள் கொண்டது. பூரி, ஜெகன்னாத், கோனாரக், புவனேஸ்வர், கயா, புத்தகயா, அலகாபாத், அயோத்தியா, காசி, சாரநாத், ஹரித்துவார், ரிஷிகேஷம், கேதார்நாத், பத்ரிநாத், நியூடெல்லி, ஆக்ரா, மதுரா, பிருந்தாவன். நபர் ஒருவருக்குக் கட்டணம் ரூபாய் 5550/-

15.9.99 இது 14 நாட்கள் கொண்டது. ஹரித்துவார், ரிஷிகேஷம், பத்ரிநாத், கேதார்நாத், நியூடெல்லி, ஆக்ரா, மதுரா, பிருந்தாவன், நபர் ஒருவருக்கு கட்டணம் ரூபாய் 3600/-

4.10.99 இது 8 நாட்கள் கொண்டது. பெங்களூர், மைசூர், ஸ்ரீரங்கப்பட்டினம், சிருங்கேரி, அன்னபூர்ணா, சுப்ரமண்யம், தர்மஸ்தலம், கொல்லூர் மூகாம்பிகை, உடுப்பி, முருடேஸ்வரர், கோமடேஸ்வரர், ஸ்ரவணபெலகுலா, பேலூர், ஹலபேடு, கோகர்ணம், ஜோக்பால்ஸ். நபர் ஒருவருக்குக் கட்டணம் ரூ. 2100/-

30.10.99 இது 12 நாட்கள் கொண்டது. பூரி, ஜெகந்நாத், கோனாரக், புவனேஸ்வர், கயா, புத்தகயா, அலகாபாத், அயோத்தியா, காசி நபர் ஒருவருக்குக் கட்டணம் ரூ. 3600/-

30.10.99 இது 17 நாட்கள் கொண்டது. பூரி ஜெகந்நாத், கோனாரக், புவனேஸ்வர், கயா, புத்தகயா, அலகாபாத், அயோத்தியா, காசி, சாரநாத், ஹரித்துவார், ரிஷிகேஷம், நியூ டெல்லி, ஆக்ரா, மதுரா பிருந்தாவன். நபர் ஒருவருக்குக் கட்டணம் ரூ. 5000/-

ஆங்காங்கு தங்கும் அறைகள், ஊர் சுற்றிப் பார்க்க பஸ் கட்டணம், தூங்கும் வசதி கொண்ட இரண்டாம் வகுப்பு ரயில் கட்டணம், கைதேர்ந்த தென்னிந்திய பிராமணர்களைக் கொண்டு காலை காபி, டிபன், மதியம், இரவு உணவளிப்பதுடன் இங்கு குறிப்பிட்ட அனைத்துச் செலவுகளும் எங்களைச் சேர்ந்தவை.



மேலும் விபரங்களுக்கு :

## ஸ்ரீ விஜயலட்சுமி டிராவல் சர்வீஸ்

நெ. 4, வெங்கடாசல செட்டித் தெரு, திருவல்லிக்கேணி,
சென்னை - 600 005. ☎போன் : 8572144.

# சிவராஜ் பித்த வாயு சூரணம்

**அஜீரணம், வாயுக்கோளாறு, மலச்சிக்கல் ஆகியவற்றிலிருந்து நிவாரணம் பெற**
**100 கிராம் புட்டி ரூ 100 V.P.P. சார்ஜ் ரூ . 25 தனி**



## பித்த வாயு சூரணம்

**Stockist**

**CHENNAI : PUSHPA TRADING CO.,**
**10, NAINAPPAN STREET, PARK TOWN.**

**THIRUTHANI : SRI VINAYAKA PHARMA,**
**373, M.P.S. SALAI.**

**KANCHEPURAM : TAMILNADU MEDICAL AGENCIES.**
**25, NELLUKARA STREET.**

**எல்லா மருந்துக் கடைகளிலும் கிடைக்கும்**



## SIVARAJ PHARMACY

**C- 18, B-1, Rajaram Nagar, Salem - 636 007.**

"இன்னும் எவ்வளவு தூரம்?"

ஜமேதார் ஹரிகிஷோர் இந்தியில் கேட்டான்.

பதில் வரவில்லை. திரும்பிப் பார்த்தான்.

ஹவில்தார் ஜெயராமன் சாலை இறக்கத்துப் பனை மரத்தின் கீழ் உபாதை நீக்கிக் கொண்டிருந்தான். காது கேட்கும் தூரம் தான். எனினும் பதில் இல்லை.

கார்கிலில் மாண்டு போன வேல்சாமியின் உடலை ஏற்றி வரும் பயணம் இது. பெங்களூரில் 'ப்ளைட்'டில் வந்து இறங்கிய வேல்சாமியின் பாடியை வாங்கிக்கொண்டு குடும்பத்தாரிடம் ஒப்படைக்க நாராயண

# கார்கில்

குப்பம் போக வேண்டும்.

இந்தப் பயணத்தில் அடிக்கடி இப்படி ஜெயராமன் 'ஆஃப்' ஆகி வருகிறான்!

களைத்து விட்டானோ? இருக்காது. சேலத்துக்காரன். வானம் பார்த்த பூமியைக் கதற வைத்துக் கதிர் பார்க்கும் விவசாயக் குடும்பம்.

'களைப்போ மனச்சோர்வோ தலை நீட்ட நேரமில்லை. உழு, உழை. கரண்டிச் சூறையாடி வஞ்சித்து ஊழல் செய்து எவன் எப்படியாவது செல்லரித்து நாசமாகட்டும்! நீ உழு. இல்லையேல் பட்டாளம் போ!

இப்படி அந்த மண்ணின் மூலகங்களின் மூல சத்தியம் வார்த்த மௌன வார்ப்புகளில் உருக்காகி உருவானவன். இவனுக்குக் களைப்பு வராது. வேறு ஏதோ?

ஜமேதார் ஹரிகிஷோரின் பார்வை எதிர்ப் பனை மர நிழல் தூரத்தில் நெடுஞ்சாலைப் பாலத்துக் கைப் பிடிச்சுவர் மீது தடவி மறைவதில் பதிந்தது.

பின்னால் வரும் வாகன ஹெட் லைட்களின் வெளிச்சம் வளையும்போதெல்லாம் அது வந்தது.

ஒரு கிலோமீட்டர் தூரத்திற்கு டிராபிக் ஜாம். வாகன வரிசை அனுமார் வாலாக நீண்டிருந்தது. சாலையில் ஏதோ மரம் விழுந்து விட்டதாம். வருகிறவர்களும், போகிறவர்களும் வலம் சுற்றி வந்து போவதில் ஒரே குழப்பம்.

நாராயணகுப்பம் போய்ச் சேர எவ்வளவு நேரம் ஆகுமோ? நடுவில் அவர்கள் மிலிட்டரி டிரக் மாட்டிக் கொண்டிருந்தது. சென்டிமீட்டர் சென்டிமீட்டராக நகர்ந்து, நின்று, நகர்ந்து, கடுப்பு தாங்க முடியாமல் அவர்கள் இருவரும் என்ன விஷயம் என்று பார்க்க அரை கிலோ மீட்டர் நடந்து விட்டனர்.

எதிரே தாற்காலிக அமைதியோடு நெடுஞ்சாலைப் பாலம். கீழே ஆறு. மணல் ஆறு. மேலே நட்சத்திரம் மட்டும் தெரிந்த பின்னிரவு வானம்.

பொழுது விடிய இன்னும் இரண்டு மணி நேரம் இருக்குமோ? விடிய விடிய நாராயண குப்பத்துக்கு அலறல்களையும் அழு குரல்களையும் விநியோகிக்கப் போகிறோம்!

உபாதை நீக்கி முடித்து ஹவில்தார் ஜெயராம் 'பேண்ட் ஜிப்'பை மேலேற்றிக் கொண்டு திரும்பினார்.

"டைம் கித்னா?"

ஹரிகிஷோர் வேறு கேள்விக்கு மாறினான்.

ஜெயராம் தன் ரேடியம் பூசிய வாட்ச் டயலைப் பார்த்தான்.

"மூணரை."

"நாராயணகுப்பம் இன்னும் எவ்வளவு தூரம்?"

ஜெயராம் உடனே பதில் சொல்லவில்லை.

தொலைவில் தெரிந்த நெடுஞ்சாலைப்

சிவ. முருகேசன்

பாலத்தைப் பார்த்தான். ஹ்ரிகிஷோரின் பார்வையும் அங்கே திரும்பியது. மறு கோடியில் ஒரு மாட்டு வண்டி. மூடு வண்டி. இரு சக்கரங்களுக்குக் கீழே கட்டியிருந்த லாந்தர் விளக்கு ஆடி ஆடி அசைவது தெரிந்தது.

''பதினொரு கிலோமீட்டர்'' ஜெயராம் சொன்னான்.

"எப்படித் தெரியும்?"

மீண்டும் ஜெயராம் மௌனமானான்.

சில நொடிகள் கழித்துப் பதில் சொன்னான்.

"தெரியும்... நான் இந்த ஏரியாக்காரன்."

ஹரிகிஷோரின் பார்வை அசைந்து அசைந்து வரும் மாட்டு வண்டியின் கிராமியக் கவர்ச்சியில் லயித்தது.

என்ன ஒரு விநோதமான சவால் இது.

'நீங்கள் 'ஜெ'ட்டிலோ ராக்கெட்டிலோ பறந்து போங்கள். நாங்கள் 'இருப்போம். நீங்கள் எப்படி உதடு பிதுக்கி அலட்சியப் பார்வை பார்த்தாலும் உங்களைச் சந்திப்போம்' என்று ஒற்றை மாட்டு வண்டியின், மேலே கூண்டாக வில் வைத்து மூடிய கூரையும் சொல்லாமல் சொல்கின்றன.

என்ன விச்ராந்தி! எங்கள் இருப்பை அசைவை யாரும் நிலை குலைக்க முடியாது என்று என்ன ஒரு நிம்மதி நிச்சயம்!



ஹரிகிஷோர் கார்கில் பகுதியை நினைத்தான்.

மலைப் பனி. மண் மேடு. பதுங்கு குழிகள். பாறை மறைவுகள். கண்ணுக்குத் தெரியாத கண்ணி வெடிகள். திடீரென்று மெஷின் கன்களின் சடசடப்பு. ஒவ்வொரு நொடியிலும் உயிருக்கு உத்தரவாதம் வேண்டாத உக்ர வெறி!

மீண்டும் ஆடியசைந்து வரும் மாட்டு வண்டிக்கு அவன் பார்வை மாறியது.

இந்த நிம்மதியை... விச்ராந்தியை அனுமதிப்பதில் ஆயிரமாயிரம் ஜவான்களோடு தனக்கும் ஒரு சிறு பொறுப்பு இருப்பது போல் ஒரு லேசான திருப்தி அவனுக்குள் ஊறிப் படர்ந்தது.

ஹரிகிஷோர் பின்னால் ஊர்ந்து ஊர்ந்து நகர்ந்து வரும் 'டிராபிக் ஜாம்' வாகனங்களிடையே மிலிடெரி டிரக்கில் வைக்கப் பட்டிருந்த வேல்சாமியின் சடலம் ஞாபகம் வந்தது.

மூன்று நாளைக்கு முன் வரை அவன் கூட இந்தத் திருப்தியை அனுபவித்திருப் பான்.

கார்கிலில் தன் உயிரை துச்சமாக மதித்து அவன் துணிச்சலோடு முன்னேறி ஊடுருவல்காரர்களைத் தாக்கி அழித்ததை கம்பெனி கமாண்டர் புகழ்ந்ததைப் பல வாய்கள் சொல்லி விட்டன.

மாண்ட சோல்ஜரின் சடலத்தின் மீது வைக்கப்படும் மலர் வளையங்கள் போலவே அந்தப் புகழ் மொழிகள் உடன் வருகின்றன.

---

**''தலைவரே, நாம் நிற்க வச்ச வேட்பாளரு இந்த அளவுக்கு அல்பதனமா நடந்துக்குவாருன்னு தெரியாம போச்சு.''**

**''ஏன் என்ன பண்ணினார்?''**

**''இவர எதிர்த்து நிற்கிற ஆளுக்கு வோட்டு போடுறேன்னு சொல்லி அவர் கிட்ட ஐநூறு ரூபாய் வாங்கிட்டார்!''**

**— பூனாம்பாளையம் ஆர்.பி. ஜெயச்சந்திரன்**

---

இப்போது ஜெயராமின் மௌனத்தைக் குலைக்க வேண்டும்! அவனைப் பேச வைக்க வேண்டும்.

''ஏய் ஜெயராம், அந்த மாட்டு வண் டியைப் பார்.''

அவன் திரும்பிப் பார்த்தான்.

''க்யா சைட் 'யார்'!'' என்றான்.

ஜெயராம் பதில் சொல்லாமல் வண்டியையே பார்த்தான்.

''இந்த 'டிராபிக் ஜாமி'லே அந்த வண்டி வேற மாட்டிக்கிட்டா இன்னும் 'டிலே' ஆயிடும்'' என்று வேறு சிந்தனை குறுக்கிட அதைத் தெரிவித்தான் ஹரிகிஷோர்.

அப்போதும் ஜெயராமிடம் பதில் இல்லை.

''நீ சைலண்ட் ஆய்ட்டே ஜெய்ராம்.''

''ம்ம்ம்ம்...''

ஹரிகிஷோர் விடாமல் கிளறினான்.

''என்ன கவலை?''

''நாம்ப வேல்சாமி குடும்பத்தைச் சந்திக்கப் போகிறோம்...'' சொல்லி விட்டு ஜெயராம் பெரு மூச்செறிந்தான்.

''இது பார்ட் ஆஃப் த கேம் யார்! இதே மாதிரி என் டெட்பாடியையும் என் குடும் பத்துகிட்டே நீயே கொண்டு போய்ச் சேர்க்க வேண்டி வரலாம்.''

'ஷ்ஷ்' என்று ஹரிகிஷோர் வாயில் வந்த அச்சானியச் சொல்லை அடக்குவது போல் சீறினான் ஜெயராம்.

''பக்வாஸ் பன்கரோ!'' (முட்டாள் தனத்தை நிறுத்து) என்றான்.

''நெருப்புன்னா வாய் சுட்டுடாது.'' ஹரிகிஷோர் வளர்த்தான்.

''ப்சப்'' என்று அலட்சியமாக அதைக் கடந்த ஜெயராம் ''வேல்சாமியும் நானும் ஒரே 'பேட்ச்'ல செலக்ஷன் ஆனதும் பெங் களூர்ல டிரெய்னிங் எடுத்தோம். போன லீவிலே தற்செயலா வேல்சாமியை சாந்தினி சௌக்ல பாத்தேன். பெண்டாட்டிக்கு சேலை வாங்க வந்தான். எப்படா கல் யாணம் ஆச்சுன்னேன். போன மே லீவ்லென்னான்.''

ஜெயராம் பேச்சை நிறுத்தினான். சட் டென்று அவன் குரல் கம்மியது.

''நெறய வளையல் வாங்கினான்... என்னடா விசேஷம்னேன். பொண்டாட்டி முழுகாம இருக்கான்னான்.''

சாலை முகப்பில் நின்றிருந்த முதல் அம்பாசிடர் கார் எதிரில் அந்த மாட்டு வண்டி வளைவதை இருவரும் பார்த்தனர். சலங்கைச் சத்தம் கேட்டது. கடையாணி

யிலோ மாட்டுக் கழுத்திலோ மாட்டி இருக்க வேண்டும்.

''சிறிது நேர மௌனத்துக்குப் பின் குழந்தை பிறந்துட்டிருக்குமா?'' என்று ஹரிகிஷோர் கேட்டான்.

"தெரியலே. பிறந்திருக்கலாம். இன்னும் 'லேட்' ஆகலாம்."

ஒரு சோல்ஜரின் குழந்தை தந்தையைப் பார்க்கும் முன்பே அநாதையாகும் துக்கம் பளீரென்று அலையாக ஹரிகிஷோர் நெஞ்சைத் தாக்கிற்று. அதை அனுமதிக்கக் கூடாது. எதிர்த்துத் தாக்க வேண்டும்!

அவன் உடல் முறுக்கேறியது. குரல் உறுதி பெற்று கணீரென்று ஒலித்தது.

''எதுக்கும் ஒரு சோல்ஜர் கலங்கக் கூடாது ஜெயராம்! அது வேஸ்ட். கிரேட் வேஸ்ட்"

ஜெயராம் திரும்பி அவனையே பார்த்தான்.

''ஹரிகிஷோர், நான் கலங்கிடலே. ஒனக்குத் தெரியுமே? யஷ்வந்த் சஹாய், சஹாரா டிஸ்ட்ரிக்ட்ல சின்ச் நகர் பக்கத்திலே அன்பத்வாடிக்கு ஒரு சோல்ஜரோட டெட்பாடியை எடுத்துட்டுப் போய் வந்தானே!"

ஹரிகிஷோர் தன் பேண்ட் பாக்கெட்டில் கைவிட்டு ஒரு சிகரெட் பாக்கெட்டை எடுத்து ஒரு சிகரெட்டை உருவி வாயில் பொருத்தி லைட்டர் தட்டிப் பற்ற வைத்துக் கொண்டு ஜெயராமிடம் நீட்டினான்.

அவன் வாங்கவில்லை.

"இப்போ வேணாம்" என்றான்.

சிகரெட் புகையை உறிஞ்சி ஊதிவிட்டு ஹரி கிஷோர் தொடர்ந்தான்.

''தெரியும்! மராத்தா லைட் இன்ஃபண்ட்ரி மேன் நாராயண் சலுங்கே தானே!"

"ஆமாம்."

''ஹி பிகேம் அன் ஹிஸ்டரி. கியா பைட்டர்? கியா ஹிம்மத் (தைரியம்)'' என்றான் ஹரி கிஷோர்.

"ம்ம்ம்" என்று ஆமோதித்து விட்டு ஜெயராம் தொடர்ந்தான். "யஷ்வந்த் சஹாயை போன வாரம் கேண்டீன்ல பாத்தேன். சின்ச் நகர் முழுவதுமே ஒரு வரலாறுன்னான். அறுபத்தஞ்சிலே எழுபத்தி ஒண்ணுலே நெறய நெறய ஃபேடலிட்டி'

ஹரிகிஷோர் கூர்ந்து கேட்டான்.

நாராயண் சலுங்கேயின் அப்பா ஒரு ரிடையர்ட் சோல்ஜர். பிள்ளை உடலைப் பாத்து அவர் கத்தலே. கலங்காம ஸல்யூட் பண்ணி இருக்கார். அப்பா மகனுக்குச் செஞ்ச சல்யூட்."



''நம்ம தலைவர் மாதிரி தேர்தல் வாக்குறுதி அளிக்க யாரும் கிடையாது!''

''எப்படி சொல்ற?''

''நாங்க ஆட்சிக்கு வந்தா குற்றால அருவியில் வருடம் முழுவதும் தண்ணீர் விழுவதற்கு ஏற்பாடு செய்வோம்'னு பேசியிருக்கிறாரே!''

— எஸ். பிரியா

வீரமரணம் என்பது ஒரு சோல்ஜருக்கு மகத்தான வெகுமதிதான். அதை ஹரிகிஷோர் அறிவான். எனினும் ஜெயராம் விவரித்த விதம் ஹரிகிஷோர் முதுகுத் தண்டில் சலனம் ஏற்படுத்தியது. ஒரு புல்லரிப்பின் அலை பாய்ந்து உடம்பில் பரவி மயிர்க்கால்கள் சிலிர்த்தன.

"என் கவலை வேல்சாமி பாடியைக் கொண்டு போறப்ப அவனுக்குக் குழந்தை பொறந்திருந்தா, அவன் பெண்டாட்டி எப்படிக் கதறுவாளோங்கறதுதான்!"

மாட்டு வண்டி அவர்களைக் கடக்கிற கட்டத்திற்கு வந்துவிட்டது.

'ஏற்கெனவே உள்ள டிராபிக் ஜாமில் இந்த மாட்டு வண்டி நுழைந்தால் குளறுபடி' என்று நினைத்து ஹரிகிஷோர் கையாட்டினான்.

பின்னாலிருந்து வந்த ஒரு லாரி ஹெட்லைட் வெளிச்சம் வண்டிக்குள் பாய்ந்து மறைந்தது. உள்ளே ஓர் இளம்பெண் படுத்திருந்தாள். துணைக்கு ஒரு கிழவி. ஒரு முப்பது வயசுக்காரன். வண்டி ஓட்டிக்கு அறுபது வயசிருக்கும்.

வண்டி நின்றது.

"வண்டி எங்கே போவுது?"

வண்டி ஓட்டி மாட்டின் மூக்கணாங் கயிற்றை இழுத்துப் பிடித்தபடி பதில் சொன்னான். பட்டாளத்து உடையின் மீது ஒரு மரியாதையோடு,

"பேட்டைக்குங்க."

## கலை நகரமாகும் தொழில் நகரம்!

தொழில் நகரமான திருப்பூர், இனி கலை நகரமானாலும் ஆச்சரியப்படுவதற்கில்லை. ஆம்; வசதியுள்ளவர்கள் மட்டுமே விலை கொடுத்து வாங்கக் கூடிய அளவுக்கு ஆயிரக்கணக்கில் விலை கொண்ட தஞ்சாவூர் பெயிண்டிங்குகளை, சில நூறு ரூபாய்கள் மட்டுமே விலை கொண்டதாக்கி வரு





• கல்பனா

கிறார் செல்வி கல்பனா.

''நான் தஞ்சை ஓவியங்களைக் கண்ணாடியிலேயே வரைந்து விடுகிறேன். ஆயில் பெயிண்டிங் இது. அதனால் செலவும் கம்மி. வாங்குவோரின் எண்ணிக்கையும் அதிகம் என்பதால், ஏராளமான பெண்கள் வந்து என்னிடம் கற்றுக் கொண்டிருக்கிறார்கள்!'' என்கிறார்.

**தகவல், படம்: ரோகிணி**

"என்ன இந்த நேரத்துலே?"

"மருமவளுக்குப் பிரசவ நோவு. துடிக்கிறா. ஊருக்குள்ளற மருத்துவ வசதி இல்லே. அதான் பேட்டை டாக்டர்கிட்டே கூட்டிட்டுப் போறோம்."

ஜெயராம் குறுக்கிட்டுக் கேட்டான்.

"எந்த ஊரு?"

"நாராயணகுப்பம்."

"வழியிலே மரம் வுளுந்து 'டிராபிக் ஜாம்'. வண்டிங்க எல்லாம் வரிசையா நிக்குது. நீங்க மேக்கால வண்டி வழியிலே திரும்பி 'கட்' பண்ணிட்டுப் போயிடுங்க. இல்லேன்னா இந்த டிராபிக் ஜாம் நீங்கறதுக்குள்ளே வண்டியிலே பிரசவம் ஆயிடும்."

ஜெயராம் நிதானமாகச் சொன்னான்.

"ரொம்ப நன்றிங்க ஐயா! பட்டாளத்துக்காரர் கண்ணைத் தொறந்து விட்டீங்க."

வண்டியை மேற்கே ஒடிந்த கிளைப் பாதையில் வளைத்த கிழவர் சற்று நிறுத்தினார்.

"எங்க மகன் வேல்சாமி கூடப் பட்டாளத்திலே தாங்க இருக்கான். பிரசவ வேதனையிலே துடிக்கறது வேல்சாமி பெஞ்சாதி தான். எங்க மருமவ."

இன்னும் இவர்களுக்குச் செய்தி வந்து சேரவில்லை! எங்கோ கோளாறு! சட்டென்று என்னமோ புரிந்துகொண்டு பக்கத்தில நின்ற ஹரிகிஷோர் ஜெய்ராமின் கையை இறுகப் பற்றி ஆட்டினான்.

உணர்ச்சி வசப்பட்டு உளறி விடாதே என்பது போல!

"அவர்களைப் போக விடு" என்று இந்தியில் சொன்னான். "நாம அங்கே போய்க் காத்திருப்போம்" என்று தொடர்ந்தான்.

வண்டி நகர்ந்தது.

இரண்டு சக்கரங்களுக்கிடையே லாந்தர் வெளிச்சம் ஒளியும் நிழலும் பாய்ச்ச அது மெதுவாகக் கடந்து கடந்து செல்வதையே இருவரும் கண் எடுக்காமல் பார்த்தனர்.

ஹரிகிஷோர் பெருமூச்செறிந்தான்.

"வெரிகுட் ஜெயராம்! நீ எங்கே கண்ட்ரோல் விட்டுடுவியோண்ணு பயந்தேன்" என்றான்.

"முஜே மாலூம்! எல்லா இடங்கள்ளேயும் நாராயண் சலுங்கேயின் அப்பாக்கள் இருக்க மாட்டார்கள். அதுவும் இந்த மாதிரி சந்தர்ப்பத்தில். வேல்சாமி குடும்பம் அவனுக்குக் குழந்தை பிறக்கிற வரையில் தெம்பா இருக்கட்டும்."

அவர்கள் இருவரும் மெதுவாக நகர்ந்து கொண்டிருந்த தங்கள் மிலிட்டரி டிரக்கை நோக்கி வந்தார்கள். ஏறி உட்கார்ந்தார்கள்.

வேல்சாமியின் சடலத்தை வைத்திருந்த மரப் பெட்டியின் மீது வைத்திருந்த மலர் வளையம் சரிந்து விழுந்திருந்தது.

ஹரிகிஷோர் அதைச் சரி செய்து எடுத்து மேலே வைத்தான்.

கூட இருந்த மற்ற இருவருடனும் அவர்கள் ஏதும் பேசவில்லை.

ஜெயராம் கனத்துவிட்ட நெஞ்சோடு இமைகளை மூடினான். பிறக்கப் போகும் அந்தக் குழந்தைக்கு அவன் மனசில் ஒரு பெயர் தோன்றியது. கார்கில்.

டிரக் அந்த மாட்டு வண்டி வளைந்த வண்டிப் பாதையை நெருங்கியதும் ஜெயராம் திரும்பிப் பார்த்தான். வண்டி காணவில்லை. போயிருக்கும்.

✉ 'ஆபரேஷன் அண்டப்புளுகு' என்ற தலையங்கம் படித்தேன். சாதாரண நாளி லேயே பாகிஸ்தான் புளுகிக் கொண் டிருக்கும். காஷ்மீர் பிரச்னையை முடித்து விட்டால் காலந் தள்ள முடியாதே என்பது பாக். பிரதமர்களுக்கு எப்போதும் உள்ள ஒரு 'கவலை'. இந்தியாவில் தற்போதுள்ள காபந்து சர்க்கார் கடுமையான நடவடிக்கை எடுக்க இயலாது என்று தவறாகக் கணக் கிட்டு விட்டது பாகிஸ்தான். செம அடி வாங்கிக் கொண்டிருப்பதை தன் நாட்டு மக் களுக்கு மறைத்துவிட 'ஆபரேஷன் அண்டப் புளுகு!' ஒன்றுதான் அதற்கு இப்போதுள்ள வழி!

விஜித்திரராஜபுரம், ஜி. ராமதாஸ்.

✉ ஆபரேஷன் அண்டப் புளுகைத் தட்டிக் கேட்டதும் முதல்வருக்கு முதல் மார்க் என்று தட்டிக் கொடுத்ததும் தலையங்க நேர் மையையும் துணிச்சலையும் பிரகாசிக்கச் செய்தன.

திருவண்ணாமலை, ஆர். ஆர். சாமி

✉ முதல்வருக்கு முதல் மார்க் கொடுப் பதானால் மெத்தனம், வெற்று அறிவிப்புகள், சுணக்கம், வாக்குறுதிகளை நிறைவேற்றாமை இவற்றிற்குத் தாராளமாகத் தரலாம்.

'பாராளுமன்றத் தேர்தலில் ஏற்பட்ட தோல்வியைச் சரிக்கட்டி மக்களை திருப்திப் படுத்த வேண்டுமானால் தமிழக அரசு உயிரைக் கொடுத்து உழைத்தாக வேண்டும்' என்று கல்கி எழுதியதை கல்கிக்கே நினைவு படுத்துகிறேன்.

உயிரைக் கொடுத்து இந்த அரசு உழைக்கிறதா என்பதை கல்கி இதழ் மனதில் கை வைத்து எழுதட்டும்.

"செய்வதைச் சொல்வோம்... சொன் னதைச் செய்வோம்" என்கிற தி.மு.க.வின் வழக்கமான பல்லவியை அவர்களே இப் போது பாடுவதை விட்டு விட்டார்கள். Performance எப்படி இருக்கிறது என்பதை அவர்களே அறிந்திருக்கிறார்கள். அவர்களது Performance ஐத் திறந்த புத்தகமாக மக் களிடம் பயமின்றி வெளியிட ஏன் தயக்கம்?

சென்னை - 1, எஸ். பிரபாகரன்.

✉ எண்ணற்ற பல வதந்திகளுக்கு விளக்க மளிக்கும் விதமாக அமைந்திருந்தது கமலின் விளக்கமான பேட்டி!

நெய்வேலி-3, எஸ். ஸ்ரீகாந்த்.

✉ கமலின் பேட்டியில் வழக்கம் போலவே பல கேள்விகளுக்கு குழப்பமான பதி லையே தந்திருக்கிறார். 'நீங்கள் நாத்திகராக இருந்தும் ஏன் கறுப்புச் சட்டை அணிவதில்லை' என்று கேட்டிருந்தால் அவரின் கடைசி பதில் சரி. 'ஏன் அப்படி அடையாளம் காட்டிக் கொள்கிறீர்கள்?' என்ற கேள்விக்கு வந்த பதில் பொருத்தமே இல்லை!

பொன்மலை, ஆர். பிரகாஷ்.

✉ இந்தியா- பாகிஸ்தான் கிரிக்கெட் பற்றிய கேள்விக் கான பதிலில் விளை யாட்டையும் யுத்தத்தையும் வேறுபடுத்திக் காட்டிய தராசின் திறமை அட்ட காசம்!

சென்னை-14,
அய்யாறு வாசுதேவன்.

✉ ஜெய்ஸ்ரீ ராஜின் 'முகமூடி மனிதர்கள்' என்னும் சிறு கதை வித்தியாசமான படைப்பு - இவரது எழுத்து நடை மனதை ஈர்க்கும் வகையில் அமைந் துள்ளது.

விழுப்புரம் - 2,
வை. வெங்கடேசன்.

✉ அழ நேரம் கிடைக்காத ஒரு பெண்ணின் குமுறல்களை வெளிப்படுத்திய 'அழுவதற்கு ஒதுக்கிக் கொடு' என்ற கவிதை ரொம்பவும் உணர்ச்சிமயமாய் இருந்தது.

பூனாம்பாளையம்,
ஆர்.பி. ஜெயச்சந்திரன்.

✉ "இந்த சாடிலைட் சானல் யுகத்திலும் பி.பி.சி. ரேடியோ நிகழ்ச்சியைக் கேட்டு ரசித்து எழுதுகிறீர்களே. இது அந்த நிகழ்ச் சியைக் கேட்டு மகிழ்ந்ததை விடவும் அதிக சந்தோஷத்தைத் தருகிறது" என்று ஒரு வாச கர் கேள்விக்கு, தராசு பதில்களில் கூறப்பட் டுள்ளது. இந்த சாடிலைட் சானல் யுகத்தில் தமிழ்நாட்டு வானொலி நிகழ்ச்சியை யாரும் தொடக் கூட மாட்டார்கள். மற்றபடி பெரும்பாலானவர்கள் தினமும் இரவு 9.15லிருந்து 9.45 வரை பி.பி.ஸி. தமிழோ சையைக் கட்டாயம் காது கொடுத்துக் கேட் கிறார்கள்; அரை மணி நேர நிகழ்ச்சியில் அவ்வளவு தரம். நம்பகத் தன்மையுள்ளது!

சீர்காழி - 10, ஆர். ராஜதுரை

## வி.ஐ.பி.யைத் தெரிஞ்சுக்கங்க!

ஒரு தொகுதியில் நின்று வென்ற சட்டமன்ற உறுப்பினர் மீண்டும் அடுத்த தேர்தலின் போதுதான் தொகுதியில் காட்சியளிப்பார். இது தான் இப்போதைய நடைமுறை. ஆனால் ஒரு தொகுதியில் போட்டியிட்டுத் தோற்ற பிரமுகர் ஒருவர், தொகுதி முழுக்கச் சென்று வாக்காளர்களுக்கு நன்றி சொன்னது மட்டுமல்லாமல், ஒவ்வொரு கிராமத்திலும் உள்ள குறைகளைக் கேட்டறிந்து, கூடிய மட்டும் அவற்றை நிவர்த்தி செய்வதைப் பற்றிக் கேள்விப்பட்டிருக்கிறீர்களா?

"தேர்தலில் ஜெயிப்பது அல்லது தோற்பது என்பது கூட்டணிகள் அமைவதைப் பொறுத்தது. எனவே அதைப் பற்றிக் கவலைப்படாமல் நான் சார்ந்திருக்கும் தொகுதிக்கு என்னால் முடிந்த வரையில் காரியங்களைச் செய்து கொடுத்துக் கொண்டிருக்கிறேன்!" என்கிறார் அந்தப் பிரமுகர். யார் அவர் என்கிறீர்களா? மறுமலர்ச்சி தி.மு.க.வின் செய்தித் தொடர்பாளராக இருக்கும் கே.எஸ். ராதா கிருஷ்ணன்தான் அவர்.

கோவில்பட்டியிலிருந்து டவுன்பஸ் போகும் தொலைவில் இருக்கும் கிராமம் குறிஞ்சாகுளம். கரிசல் மண். வானம் பார்த்த பூமி. பள்ளியிறுதி வகுப்பு வரை படித்திருந்த கிராம முன்சீப் சீனிவாச நாயக்கர் வீட்டிற்கு மட்டும்தான் ஹிந்து, தினமலர், தினமணி பத்திரிகைகள் வரும். வீட்டில் சுமார் அறுநூறு புத்தகங்கள் கொண்ட நூலகம். போதாததற்கு ஜெர்மன் நியூஸ், சோவியத் நாடு போன்ற பத்திரிகைகளையும் வாங்குவார். கிராமத்து இளைஞர்கள் உருப்படியாக பொழுதைக் கழிக்க ஒரு நல்ல இடமாக இருந்தது அவர் வீடு. காங்கிரஸ் அனுதாபியாதலால், அந்தப் பகுதிக்கு வரும் காங்கிரஸ் தலைவர்கள், சீனிவாச நாயக்கர் வீட்டிற்கும் தவறாமல் விசிட் செய்வார்கள். மூன்று மகன்களையும் கல்லூரி வரை படிக்க வைத்தார் அவர். மூன்று பேரில் கடைக்குட்டிதான் ராதாகிருஷ்ணன்.

"அருகிலுள்ள திருவேங்கடம் என்னும் சிறு ஊரிலும், கோவில்பட்டியிலும் பள்ளிப் படிப்பை முடித்தேன். தமிழ்நாட்டில் எப்போதெல்லாம் விவசாயிகள் போராட்டம் வெடிக்கிறதோ அதன் எதிரொலி எங்கள் ஊரிலும் இருக்கும். துப்பாக்கிச்சூடு, கண்ணீர்ப் புகை என்று போராட்டம் அடக்குமுறைகளைச் சந்திக்கும். எங்கள் ஊருக்கு அருகில் உள்ள கழுகுமலையில் சர்வோதயா மாநாடு ஒன்று நடந்தது. அதில் பங்குகொள்ள ஜெயப்பிரகாஷ் நாராயணன் வந்திருந்தார். அவர் பேச்சால் எனக்குள் எழுந்த உத்வேகம், விவசாயிகள் படும் வேதனை, ஆகியவைதான் என்னைப் பொது வாழ்க்கைக்கு வரத் தூண்டியவை'' என்கிறார் ராதாகிருஷ்ணன்.

நெல்லைக் கல்லூரியில் படிக்கும்போது பல மாணவர் போராட்டங்களில் கலந்து கொண்டதால் கல்லூரி நிர்வாகத்தின் கோபத்துக்கு ஆளாகி, பல கல்லூரிகள் மாற வேண்டியதாகி விட்டது. தொடர்ந்து மதுரை, சென்னைக் கல்லூரிகளில் படித்து வழக்குரைஞர் ஆனார் ராதாகிருஷ்ணன்.

"அப்போது நாகர்கோயில் இடைத் தேர்தலில் காமராஜ் போட்டியிட்டார். அவரது பிரசாரத்திற்கு முக்கியப்பங்கு வகித்தவர் நெடுமாறன். மாணவர் காங்கிரஸிலிருந்து நானும் நண்பர்களும் பிரசாரத்திற்குச் சென்றிருந்தோம். நெடுமாறன் அவர்கள் அறிமுகம் கிடைத்தது. அதன் பிறகு நெடுமாறனின் அணுக்கத் தொண்டனாக மாறினேன் என்று சொல்லும் ராதாகிருஷ்ணனும் சிலரது சூழ்ச்சி காரணமாக காங்கிரஸிலிருந்து நெடுமாறன் விலக்கப்பட்டபோது சேர்த்து விலக்கப்பட்டார். தொடர்ந்து அவர் காமராஜ் காங்கிரஸ் கட்சியைத் துவங்கியதும், ராதாகிருஷ்ணனுக்கு பொதுச் செயலாளர் பொறுப்பு கொடுக்கப்பட்டது. தமது



ஐ.ஏ.எஸ். கனவையும் அவர் கைவிட்டு விட்டு முழு நேர அரசியலில் குதிக்க வேண்டியதாகி விட்டது.

# "நான் எப்போதுமே தலைமைக்கு விசுவாசி!"

''நெடுமாறனோடு காமராஜ் காங்கிரஸில் இணைந்து பணியாற்றிய காலம் மறக்க முடியாதது!" என்கிறார் ரா.கி. இலங்கைப் போராட்டம் தீவிரமாக இருந்த காலகட்டம் அது. பிரபாகரன், உமா மகேஸ்வரன், அமிர்தலிங்கம் போன்ற ஈழத்துப் போராட்ட வீரர்கள் சென்னையில் தங்கியிருந்தனர். இந்திய அரசின் ஆதரவும் மக்களின் அனுதாபமும் ஈழத் தமிழர்கள் மேல் முழுமையாக இருந்தது. ஈழத்துப் பிரமுகர்களிடம் நெடுமாறனுக்கு இருந்த நெருக்கத்தால், ராதாகிருஷ்ணனுக்கும் அவர்கள் எல்லோரிடத்திலும் நல்ல நட்பு ஏற்பட்டது.

"மைலாப்பூரில் உள்ள என் அறையில் பல நாட்கள் பிரபாகரன் தங்கியிருந்திருக்கிறார். அவர் விரும்பிச் சாப்பிடுவது நண்டு. அமிர்தலிங்கம் அவர்கள் என்னை 'My dear Son' என்று அன்பொழுக அழைப்பார். அவர்களுடன் பேசிப் பழகியது என்றென்றும் நினைவில் இருக்கும்" என்று சொல்லும் ராதாகிருஷ்ணன், ஈழத்துப் பிரமுகர்கள் தொடர்பு காரணமாக நேர்ந்த இழப்பு ஒன்றையும் வருத்தத்தோடு சொல்கிறார்.

''பாண்டிபஜாரில் பிரபாகரனுக்கும் முகுந்தனுக்கும் நடந்த துப்பாக்கி மோதல் தொடர்பாக என் அறையிலும் போலீஸார் சோதனை செய்தார்கள். அப்போது இந்திரா காந்தி, காமராஜ், தேவராஜ் அர்ஸ், ஆகியோருடன் நான் எடுத்துக் கொண்ட படங்களின் ஆல்பம் இருந்தது. அதை எடுத்துக் கொண்டு போய் விட்டார்கள். அப்புறம் எவ்வளவோ முயன்றும் இன்றளவும் அது கிடைக்கவில்லை'' என்று அந்தச் சம்பவத்தை நினைவுகூர்கிறார். பிரபாகரனுடன் ராமாவரம் தோட்டத்திற்குச் சென்று எம்.ஜி.ஆருடன் உணவருந்தி மகிழ்ந்ததும் உண்டு.



மதுரையில் ஈழப் போராட்டத்துக்கு ஆதரவாக 'டெஸோ' மாநாடு ஒன்று நடந்தது. அதில் கலைஞர், நெடுமாறன் உட்பட அகில இந்தியத் தலைவர்கள் பலர் கலந்து கொண்டனர். வைகோ, நெடுமாறன் ஆகியோரது ஆலோசனையின் பேரில் அந்த மாநாட்டின் வெற்றிக்காக முழுமையாகப் பாடுபட்டார் ராதாகிருஷ்ணன். வைகோ மூலம் கலைஞர் அறிமுகம் கிடைத்தது. ஒரு பெரிய அரசியல் கட்சியில் இருந்தால் பொது மக்களுக்கு பல்வேறு பிரச்னைகளில் உதவியாக இருக்கலாமே என்ற ஆர்வம் ராதாகிருஷ்ணனை தி.மு.க.வுக்குக் கொண்டு வந்தது. 1989–ல்

கோவில்பட்டி தொகுதியில் போட்டியிடும் வாய்ப்பும் கிடைத்தது. "ஒரு பெரிய கட்சி என்றால் கட்சியின் நலனுக்காக, தலைவரின் ஆணைப்படி பல வேலைகளைச் செய்ய வேண்டி வரும். தி.மு.க.வில் நான் இருந்த போது கலைஞர் அவர்களின் நம்பிக்கைக்கு உரித்தாகி அப்படிப் பல பணிகளைச் செய் திருக்கிறேன்'' என்கிறார். அதன்பின் வைகோ ம.தி.மு.க.வைத் துவக்க வேண்டிய கட்டாயம் வந்தபோது இயல்பாகவே அவரைத் தொடர்ந்தார் ராதாகிருஷ்ணன்.

இன்று ம.தி.மு.க. செய்தித் தொடர்பாளராக உள்ள ராதாகிருஷ்ணனுக்கு தேசிய மட்டத்திலிருந்து உள்ளூர் வரை பத்திரிகைக் காரர்களின் பரிச்சயம் உண்டு. கட்சியின் யுக்திகளையும், எண்ணங்களையும் சப்தம் போடாமல் பத்திரிகைகளில் கொண்டு வரும் சாமர்த்தியமும் உண்டு. பல்வேறு முக்கியப் பிரச்னைகளைப் பற்றி 'உரிமைக்குக் குரல் கொடுப்போம்' என்ற புத்தகத்தையும் எழுதியிருக்கிறார். போராட்டங்களில் கலந்து கொண்டு நான்கு முறை சிறை சென்றிருக்கிறார். பிரபல வழக்குரைஞர் காந்தியின் ஜூனியராக பல ஆண்டுகள் இருந்து அதன்பின் சுயமாகச் செயல்பட்டுக் கொண்டிருக்கிறார்.

"என் வழக்குரைஞர் தொழிலில் நான் சம்பாதித்த பணத்தை விட, பொதுமக்கள் பிரச்னைகளுக்காகத் தொடுத்த வழக்குகளுக்குச் செலவழித்ததுதான் அதிகம். குறிப்பாக கேரளாவில் மேற்கு நோக்கிப் பாயும் நதிகளின் தண்ணீரை தமிழகத்திற்குத் திருப்பி விடவேண்டும் என்று வழக்குப் போட்டேன். என் கோரிக்கையிலுள்ள நியாயத்தைப் புரிந்து கொண்ட நீதிபதிகள், 'நதிகளை தேசியமயமாக்க வேண்டும்' என்று கருத்துத் தெரிவித்தனர். அதனைத் தொடர்ந்து உச்சநீதிமன்றத்தில் 'நதிகளை தேசியமயமாக்க வேண்டும்' என்று வழக்குப் போட்டுள்ளேன்.

''இது தவிர எனக்கு பெருத்த மனநிறைவை அளிக்கும் விஷயம், நிலத்தடி நீரையும் சுற்றுச் சூழலையும் பாதித்துக் கொண்டிருந்த விருதுநகர் அரசு சிமெண்ட் தொழிற்சாலை. நான் கேஸ் போட்ட காரணத்தால் 75 கோடி செலவில் நவீனமாக்கப்பட்டது. பாதிப்புகள் ஒழிந்தன'' என்கிறார் ராதாகிருஷ்ணன்!

ஐக்கிய நாடுகள் சபையின் மனித உரிமைக் குழுவின் உறுப்பினராகும் வாய்ப்பு சமீபத்தில் ராதாகிருஷ்ணனுக்கு கிடைத்தது. ஆனால் கட்சிப் பணிகளை விட்டு விட்டு நியூயார்க்கில் இருக்க வேண்டிய பதவியாதலால், அதை நிராகரித்து விட்டார். மனித உரிமைகள் என்றால் என்ன என்கிற புத்தகத்தையும் எழுதியிருக்கிறார். நடக்க இருக்கும் ம.தி.மு.க. மாநாட்டில் கொடியேற்ற வாய்ப்புக் கொடுத்த வைகோவை வாயாரப் புகழ்கிறார்.

"என்னுடைய பலமாக நான் நினைப்பது, எந்தத் தலைவரின் கீழ் நான் பணியாற்றுகிறேனோ அந்தத் தலைவரின் முழு நம்பிக்கையைப் பெற்று விசுவாசமாய் பணியாற்றுவதுதான்!'' என்கிறார் ராதாகிருஷ்ணன்.

**— ஸ்ரீநிவாசன்**

படம் : **ராஜன்**

## சோனியா காந்தி ஒரு கன்னடப் பெண்ணாம்!



**சோ**னியா காந்தியின் பூர்வீகம் இத்தாலி அல்ல; இந்தியாதான்– அதுவும் அவர் கன்னடத்துக்காரர் என்று ஒரே போடாகப் போடுகிறார், 'கர்நாடக யுவ சைன்யா' என்கிற அமைப்பின் தலைவரான தலக்காடு சிக்கரங்கே கவுடா.

நம்ப முடியவில்லையே என்பவர்களுக்கு அவர் ஆதாரமும் காட்டுகிறார். கர்நாடகத்தில் 'மால்பே' என்கிற கடற்பகுதியை உள்ளடக்கிய பகுதி காரவள்ளி. இங்கு 'மய்யா' என்பது பெண்களுக்குரிய ஒரு குடும்பப் பெயர்.

இப்பெயரைக் கொண்ட ஒரு பெண்தான் பண்டைக்காலத்தில் கிரேக்க நாடக நடிகர் ஒருவரைத் திருமணம் செய்து கொண்டு இத்தாலிக்குக் குடிபெயர்ந்தார். இந்தக் கன்னடத்துப் பெண்ணின் குடும்பப் பெயரான 'மய்யா'தான் இத்தாலியில் 'மய்னோ' என்று மருவி விட்டது. மய்னோ என்பது சோனியா காந்தியின் குடும்பப் பெயர். எனவே, சோனியாவின் பூர்வீகம் கர்நாடகா தான் என்கிறார் அவர்.

தகவல்: ப. **மூர்த்தி**

# கற்காலத்துக்குப் போகும் இலக்கியவாதிகள்!

இது, இலக்கியவாதிகளின் ரகளை வா..ரம்! பாலகுமாரன் பிரச்னை ஒரு பூதம் மாதிரி கிளம்பி, மறுபடியும் விளக்குக்குள்ள அடங்கிப் போக, மெட்ராஸ்ல நடக்கற ஒவ்வொரு இலக்கியக் கூட்டத்திலும் ஏதாவது ஒரு ரகளை நடந்துட்டிருக்குது.

நல்ல எழுத்தாளர்கள் – கவிஞர்கள்னு பொதுவா மக்களுக்கு அறிமுகமாகியிருக்கறவங்க சிலர் அங்கங்க கேவலமா நடந்துக்க ஆரம்பிச்சிருக்காங்க.

லாஸ்ட் வீக் நடந்த ரெண்டு புக் ரிலீஸ் ஃபங்ஷன்லேயும் ரகளை.

ஒரு கூட்டத்துல, எழுத்தாளர் ஒருத்தர் மேடையிலேயே தன்னோட காழ்ப்புணர்ச்சியைக் கச்சடா வேர்ட்ஸ்ல காட்ட, இன்னொரு கூட்டத்துல, ஒரு கவிஞர் நல்லா தண்ணி போட்டுட்டு வந்து அன்-பார்லிமென்டரி வேர்ட்ஸ் யூஸ் பண்ணி நாறடிச்சார்.

இந்த கலாட்டாக்களுக்கெல்லாம் அறிவுபூர்வமான காரணம் எதுவும் இல்லைங்கறதுதான் விசேஷம்.

இப்பல்லாம் அரசியல் கூட்டங்களே ரொம்ப கண்ணியமா நடக்கற மாதிரி தெரியுது. இலக்கியவாதிகளெல்லாம் 'தொன்மங்களை'த் தேடி கற்காலத்துக்குப் போயிட்டிருக்காங்க.

• • •

ரெண்டு, மூணு வாரம் முன்னால 'சங்கமம்' ஸாங்ஸ் பத்தி எழுதியிருந்தேன். (கொஞ்சம் ஜாஸ்தியா புகழ்ந்திருந்ததா ஞாபகம்.) அந்தப் படத்துப் பாட்டு ஒண்ணை டீவில (ட்ரெய்லர்?) பார்த்தேன். ஒரு நல்ல பாட்டை மேக்ஸிமம் எத்தனை மோசமா பிக்சரைஸ் பண்ண முடியும்ங்கறதுக்கு பெஸ்ட் எக்ஸாம்பிள்! டீ.வி சீரியல்கள்கூட இதைவிட நல்லாருக்கும்! ஏ.ஆர். ரகுமான் மனசு உடைஞ்சுடாம இருக்கணும்.

• • •

பி. கிருஷ்ணமூர்த்தி, (ரிடையர்டு, சீனியர், கிளாஸ் ஒன், சென்ட்ரல் கவர்ன்மென்ட் ஆபீசர், நியூடெல்லி) ஒரு லெட்டர் போட்டிருக்கார். இந்த ரெண்டு பக்கமும் சுத்த வேஸ்ட்ங்கறதுதான் அதனோட தாத்பரியம்.

சூப்பர் மார்க்கெட் மூலமா உபயோகமான மெசேஜஸ் ஏதும் தரப்படறதில்லைங்கறது கிஷ்மு சாரோட குற்றச்சாட்டு. சொஸைடிக்கு யூஸ்ஃபுல்லா பண்றதுன்னா என்னன்னு யோசிச்சுப் பார்த்தேன்.

பஸ்ஸுக்கு பஸ் திருவள்ளுவர் இருக்கார். சுவருக்கு சுவர் ஏசுநாதர் இருக்கார். ஒண்ணாங் கிளாஸ் புஸ்தகத்துலேருந்து காந்தியும்தான் பேசிட்டே இருக்கார். அதிகப் பிரசங்கி மாதிரி நான் வேறவா மெசேஜ் தரணும்? அப்படி ஒரு பிளானும் இல்லைங்கறதை ரிடையர்டு, கிளாஸ் ஒன், சீனியர் ஆபீசருக்குத் தெரிவிச்சுக்கறேன்.

• • •

ரெண்டு இஷ்யுஸ் முன்னால நான் தந்திருந்த 'இதுவரை வராத

செய்திகள்' - பிட்ஸுக்கு அபாரமான (நாலஞ்சு பேர்) வரவேற்பு இருந்ததால் இப்ப இன்னும் சில பிட்ஸ் தரலாம்னு நினைக்கறேன்.

1. ராமானுஜரோட லைஃப் ஹிஸ்டரி - எந்த சம்பவமும் விடுபடாம - டீவி சீரியலா (டிடி) வரப் போறது. பதினைஞ்சு வருஷ ரிஸர்ச்சாம்! தமிழ், தெலுங்கு, கன்னடம், சமஸ்கிருதம், இங்கிலீஷ்ல இதுவரைக்கும் ராமானுஜரைப் பத்தி வந்திருக்கற அத்தனை மெடீரியல்ஸோட அடிப்படையிலும் தயாரிக்கப்பட்ட ஸ்கிரிப்ட். ராமானுஜர் பிரயாணம் செய்த அத்தனை ஊர்களுக்கும் போய் ஷூட் பண்றாங்களாம்! (காஷ்மீர் பக்கம் இப்ப ஷூட்டிங் இருக்காதுன்னு நினைக்கறேன்.)



2. சுவாமி சுகபோதானந்தாவோட மனசே ரிலாக்ஸ் ப்ளீஸ் (கிடைன்ல வந்ததே?) இப்ப ஆடியோ கேஸட்டா வரப் போறது. குரல் கொடுத்திருக்கறவர் நிழல்கள் ரவி.

3. 'சலாம் பாம்பே' மீரா நாயரோட அடுத்த படத்துக்கு மியூசிக் டைரக்டர் யார் தெரியுமா? மடோனா!

4. உலகம் பூராவும் கல்கி நூற்றாண்டு செலிப்ரேட் பண்றாங்க இல்லியா. அதையொட்டி சென்னைல ஒரு சிறப்புக் கலை நிகழ்ச்சி நடக்கப் போகுது. ஜூலை 24ஆம் தேதி கல்கியோட ஸாங்ஸை அடிப்படையா வைச்சு மியூசிக், டான்ஸ், டிராமா, கவிதைன்னு பல விஷயங்களை ஒண்ணு சேர்த்திருக்காங்க. வரலாறு காணாத வகையில பல லீடிங் ஆர்டிஸ்ட்ங்க ஒண்ணு சேரப் போறாங்க இந்த ப்ரோக்ராம்ல. விவரமா நெக்ஸ்ட் வீக் விளம்பரம் வரும்னு எடிடர் சொல்றாங்க.

• • •

தமிழ்நாட்டுல கவர்ன்மெண்ட் டிபார்ட்மெண்ட்கள்ல தலைமைப் பொறுப்பில் இருக்கறவங்க பெண் ஐ.ஏ.எஸ். அதிகாரிங்கதான்னு ஒரு நியூஸ் படிச்சேன். எங்க அக்காகிட்டே இத சொன்னப்போ ஒரு பாயின்ட்ல புடிச்சா! ரொம்ப வருஷம் முந்தி கல்கி பேட்டிலதான் திலகவதி (ஐ.பி.எஸ்) சொல்லிருந்தாங்களாம். பெண் அதிகாரின்னு இருக்கறதுல ஒண்ணும் தனிப் பெருமை கிடையாதுன்னு.... ஆனா பொதுவா எல்லாருமே அதை ஆசையா பிடிச்சுக்கிட்டு வுட மாட்டேங்கறாங்க - லேடி ஆபீசர், லேடி எக்ஸிகியூடிவ், லேடி தொழிலதிபர், என்னை மாதிரி லேடி காலமிஸ்ட், லேடி ஹவுஸ் ஒய்ஃப்னு மட்டும்தான் சொல்லலை இன்னும்...! இட் இஸ் ஹை டைம் வி ஸ்டாப்ட் திஸ். நீங்க என்ன நினைக்கறீங்க?

— சுமி

அமெரிக்காவில் சிறப்பான முறையில் நடனப் பள்ளிகள் நடத்திக் கொண்டிருக்கும் இருவர், ஒரு தடவை சென்னை வந்திருந்தபோது, நகரின் பிரபல சபாக்கள் சில வற்றை அணுகி, சீசனில் வாய்ப்புக் கேட்டிருக்கிறார்கள். அந்த சபாக்காரர்கள், வாய்ப்புத் தருவதற்கு பிரதியுபகாரமாக கணிசமான நன்கொடை கேட்டிருக்கிறார்கள். இதனால் மனம் நொந்து போன அவர்கள், ஒய்.ஜி.பியைப் பார்த்துப் பேசிக் கொண்டிருந்தபோது, தங்களின் கசப்பான அனுபவத்தை வேதனையுடன் குறிப்பிட்டனர்.



படம் : ஸ்ரீஹரி

இப்படி பெரியவர்களே, வலியப் போய் வாய்ப்புக் கேட்க வேண்டிய சூழ்நிலையில், திறமையான இளைய தலைமுறையினருக்கு, ஒரு மேடையமைத்துக் கொடுக்க யார் முன் வருவார்கள்?

தவிரவும், இசைவிழா என்றால், மாலை நேரங்களில், பெரியவர்கள் கச்சேரிகளுக்குப் போவதுதானே வழக்கம். மாணவப் பருவத்தில் இருக்கிறவர்களுக்கு, கச்சேரிகளுக்கும் நடன நிகழ்ச்சிகளுக்கும் போய் ரசிப்பதற்கு இல்லாவிட்டாலும், அந்த விஷயங்களை அறிமுகப்படுத்தும் விதமாகக் கூட வாய்ப்புகள் கிடைப்பதில்லையே!

இதையெல்லாம் மனத்தில் கொண்டு, நாம் இது விஷயமாக ஏதாவது செய்தே ஆக வேண்டும் என்றார் ஒய்.ஜி.பி. அப்போதுதான், நாமே ஓர் அமைப்பை ஏற்படுத்தி, அதன் மூலமாக ஏன் இந்த நோக்கங்களை எல்லாம் செயல்படுத்தக் கூடாது என்று கேட்டார். அப்படிப் பிறந்ததுதான் பாரத் கலாசார்.

முதல் கட்டமாக, நன்கொடைகள் திரட்டினோம். அதை வைப்புத் தொகையாக வைத்துக் கொண்டு, அதிலிருந்து கிடைக்கிற வட்டியைக் கொண்டு இசை விழா நடத்துவதும் விருதுகள் வழங்குவதும் இதன் நோக்கம்.

செம்மங்குடி சீனிவாச ஐயர்தான் பாரத் கலாசார் டிரஸ்டின் தலைவர். அவர் குத்து விளக்கு ஏற்றி வைக்க, முதல் கச்சேரி மகாராஜபுரம் சந்தானத்தினுடையது. அடுத்து, பத்மா சுப்ரமணியம் டான்ஸ். அடுத்தது யேசுதாஸ் கச்சேரி. ஆர்.ஆர். சபாவில் முதல் வருடம் (85 – 86) நிகழ்ச்சிகள் நடைபெற்றன.

இந்தச் சமயத்தில் கூட, பல்வேறு சபாக்களும் இசைவிழா நடத்துவதன் காரணமாக, எங்களுக்கு ஆடிடோரியம் கிடைப்பது ரொம்ப சிரமமாக இருந்தது. இந்தப் பிரச்னைக்கு என்ன தீர்வு என்று யோசித்தோம்.

எங்கள் திருமலை ரோடு பள்ளிக்கூட வளாகத்தில் வகுப்பறைக் கட்டடங்களுக்கு மத்தியில் திறந்த வெளிப்பகுதி இருந்தது. அங்கேயே ஓர் அரங்கம் கட்டினோம். இதிலே மிகப் பெரிய அனுகூலம் இருந்தது. இசை, கலை, நிகழ்ச்சிகளை வெளியிடங்களில் நடத்துவதை விட, பள்ளிக் கூட வளாகத்திலேயே நடத்தினால், மாணவ மாணவிகளையும் கச்சேரிகள் கேட்க வைக்கலாமல்லவா!

பாரத் கலாசாரில் இன்னொரு முக்கியமான கொள்கையும் உண்டு. பொதுவாக சபாக்களில், வயதான, சீனியர் வித்வான்களைத்தானே ஆண்டுதோறும் தேர்ந்



தெடுத்து விருது வழங்கி கௌரவிப்பார்கள். அதி லிருந்து மாறுபட்டு, திறமை யான இளைய தலை முறைக் கலைஞர்களைத் தேர்ந்தெடுத்து, அவர் களை கௌரவிக்கிறோம். நாங்கள் கொடுக்கிற பட்டம் 'யுவ கலா பாரதி'!

இந்த யுவ கலா பாரதி பட்டத்தைக் கூட, ஆரம் பத்தில் எங்கள் பள்ளியில் படித்த மாணவருக்கே கொடுத்து கௌரவித் தோம். அந்த மாணவர்

# நாங்கும் பந்த புணு!

**திருமதி ஒய்.ஜி.பி**

யார் தெரியுமா! இன்று கர்நாடக சங்கீத உலகில் கொடி கட்டிப் பறக்கிற விஜய் சிவாதான். அதே போல லால்குடியின் குமாரர் ஜி.ஜே.ஆர். கிருஷ்ணன் கூட இந்த கௌரவம் பெற்ற எங்கள் பள்ளியின் முன்னாள் மாணவர் தான். இன்று யுவ கலா பாரதி விருது பெறாத பிரபல இளைய தலைமுறைக் கலை ஞர்கள் யாருமில்லை என்று பெருமையுடன் நான் சொல்லுவேன்.

இன்னொரு விஷயமும் சொல்ல வேண் டும். நன்றாகப் படிக்கிற மாணவர்களுக்கு, ஸ்காலர்ஷிப் கொடுப்பது போல, எங்கள் பள்ளிக் கூடத்தில் படிக்கிற நடனம் மற்றும் இசையில் சிறந்து விளங்கும் மாணவ மாணவிகளுக்கு, அவர்களுடைய திறமையை வளர்த்துக் கொள்ளுவதற்கு ஊக்கம் அளிக் கிற வகையில் ஸ்காலர்ஷிப் கொடுத்தால் என்ன என்று நினைத்தோம். அதன்படியே, சில மாணவர்களைத் தேர்ந்தெடுத்து ஸ்காலர்ஷிப் வழங்கி வருகிறோம்.

எங்கள் பள்ளிக் கூட மாணவர்களை, வெறுமனே கச்சேரியையோ, நடன நிகழ்ச்சி யையோ பார்க்க வைத்தால், அவர்களுக்குத் தானாக ஓர் ஆர்வம், ரசிப்புத் தன்மை இவை வந்து விடும் என்று சொல்ல மாட்டேன். ஆனால், அவர்களுக்கு பாரத் கலாசார் மூல மாக ஒருவித ஆர்வத்தை ஏற்படுத்த வேண் டும் என்பது என்னுடைய லட்சியம். இத னால், நாங்கள் என்ன பண்ணினோம் தெரி யுமா? பகல் நேரக் கச்சேரிகளுக்கு, எங்கள் பள்ளிக் கூட மாணவர்களை கட் டாயமாக அழைத்துக் கொண்டு போய் உட்கார வைத்தோம். பல மாணவர்களுக்கு இதென்னடா போர் என்று தான் தோன்றி யது. சில மாணவர்கள் வெளிப்படையாக என் னிடமே இதைக் குறிப்பிட் டார்கள்.

அவர்களுக்கெல்லாம் நான் சொன்னது இது தான்: "இந்த நிகழ்ச்சி களுக்கு நீங்கள் வர வாய்ப்பே இல்லை என்றால், உங்க ளுக்கு கர்நாடக இசை பற்றிய ரசிப்புத் தன்மையே இல்லாமல் போய்விடும். ஆனால், கட்டாயத்தின் பேரில் இப்போது நீங்கள் வந்திருக்கிறீர்கள். முதல் சில நாட் களுக்கு ஒன்றுமே உங்களுக்குப் புரியாது; உங்களால் ரசிக்க முடியாது.

ஆனால் அதற்காகவெல்லாம் நீங்கள் கவலைப்பட வேண்டாம். தொடர்ந்து இவை உங்கள் காதுகளில் கேட்டுக் கொண்டிருந் தாலே போதும். உங்கள் மனத்தில் இது பதிந்து விடும்; நாளடைவில் உங்களுக்கு இதில் ஒருவித ஆர்வம் ஏற்பட்டு விடும்.

டெலிவிஷனில் எத்தனையோ தொடர் கள் வருகின்றன. இவற்றில் டைட்டில் பாடல்கள் இடம் பெறுகின்றன. பல விளம் பரங்கள் ஒளிபரப்பாகின்றன. அவற்றை மனப்பாடம் செய் என்று குழந்தைகளிடம்

நாம் சொல்லுகிறோமா? ஆனால், திரும்பத் திரும்பக் கேட்டுக் கொண்டே இருப்பதன் மூலம் அவை நம் மனத்தில் ஆழமாகப் பதிந்து விடுகின்றன. அது போலத்தான், இசைக் கச்சேரிகளும். தொடர்ந்து கச்சேரி களைக் கேட்கக் கேட்க, அவை பழக்கமாகி, அவற்றின் மீது ஈடுபாடு ஏற்பட்டு விடுகிறது.

கச்சேரிகளுக்கு வரும் மாணவ, மாணவி யருக்குக் கூடுதலாக மார்க் கொடுத்து, அவர் களை ஊக்கப்படுத்தவும் முடிவு செய்தோம். முன்பெல்லாம், ஒரு கச்சேரிக்கு வந்தால், இரண்டு மார்க் என்று கொடுத்து, ஒரு மாண வன் நாலு கச்சேரிக்கு வந்தால், மொத்தம் எட்டு மார்க். இந்த எட்டு மார்க்கை, சரா சரியாக்கி ஐந்து சப்ஜெக்ட்கள் என்றால், அனைத்திலும் தலா ஒண்ணரை மார்க் வீதம் அதிகரித்து விடுவோம்.

ஆனால், சில வருடங்களில், இது குறித்து ஆசிரியர்கள், மாற்றுக் கருத்து ஒன்றைத் தெரிவித்தனர். கச்சேரிகள், கலை நிகழ்ச்சி களுக்கு மாணவர்களை வரவழைக்க ஏதா வது 'இன்செண்டிவ்வை மார்க்குகளாக, படித்து, பரீட்சை எழுதி வாங்கும் மார்க்கு களுடன் சேர்க்க வேண்டுமா? என்பதுதான் அவர்கள் கூறிய கருத்து. அதுவும் ஒருவிதத் தில் சரிதான் என்று பட்டது. மார்க் முறைக்கு பதிலாக அவுட் ஸ்டாண்டிங், வெரி குட், குட், என்று கலைகளை ரசிக்கும் திறனுக்கும் கிரேடுகள் வழங்க ஆரம்பித்து விட்டோம். தவிர, மேல் வகுப்பு மாண வர்கள், தாங்கள் பார்த்த நிகழ்ச்சிகள் பற்றிய தங்கள் கருத்துக்களை எழுதிக் கொடுக்கும் முறையும் பள்ளிக் கூடத்தில் அமலுக்கு வந்தது.

அது போலவே, எங்கள் பள்ளிக் கூடத் தில் ஆண்டு விழாக்களில் வருடா வருடம் குறிப்பிட்ட 'தீம்' ஒன்றை எடுத்துக் கொண்டு, மொத்த நிகழ்ச்சியையும் அதன் அடிப்படை யிலேயே திட்டமிடுவோம். நிகழ்ச்சிக்குரிய பல்வேறு ஐட்டங்களின் கதை, கருத்துச் சுருக் கத்தை அச்சிட்டு, ஆண்டு விழாவுக்கு சில நாட்களுக்கு முன்னதாகவே மாணவர்களுக்கு வழங்கி விடுவோம்.

மாணவர்களும், அவர்களுடன் நிகழ்ச் சிக்கு வரும் பெற்றோர்களும் அச்சிட்ட விவ ரங்களைப் படித்து விட்டு வந்தால், நிகழ்ச்சி களை அதிகமாக ரசிக்க முடியும். மேலும், உயர் வகுப்புகளில், ஆண்டு விழா நிகழ்ச்சி களின் அடிப்படையில் குவிஸ் நடத்தி, பரிசு வழங்குவதும் வழக்கம்.

இப்படியெல்லாம் தொடர்ச்சியாக, பல் வேறு கலை, கலாசார நிகழ்ச்சிகளுக்கு, மாண வர்கள் சிறு வயது முதலே அறிமுகமாகிற போது, தானாகவே உறிஞ்சிக் கொள்ளும் தன்மை என்று விஞ்ஞானத்தில் சொல்வார் களே, அதுபோல, மியூஸிக், டான்ஸ் போன்ற இனிமையான, மென்மையான கலை அம்சங் கள் மாணவர்களின் ஆழ்மனத்தில் அவர் களையும் அறியாமல் பிரவேசித்து விடும்.

அடுத்த படியாக, இந்த வருடம் நாங்கள் எங்கள் பள்ளிக் கூடத்தில் அறி முகப்படுத்திய 'அன்னையர் தினம்' பற்றி நான் குறிப்பிட விரும்புகிறேன். வழக்கமாக அன்னையர் தினம் கொண்டாடப்படும் மேமாதத்துக்கு பதிலாக, கஸ்தூர்பா காந்தி யின் பிறந்த தினத்தைத்தான் நாங்கள் அன் னையர் தினமாகக் கொண்டாடுகிறோம்.

பொதுவாகவே, இந்தத் தலைமுறைக் குழந்தைகளுக்கு, பெற்றோரிடம் ஆசை, அன்பு எல்லாம் இருந்தாலும், மரியாதை குறைவாகவே இருப்பதை நாம் காண்கிறோம். வட இந்தியாவில், வீட்டை விட்டுப் புறப் படும் போதும், வீட்டுக்கு வந்த உடனேயும், அம்மா. அப்பாவின் காலைத் தொட்டு வணங்கும் வழக்கத்தைக் கடைப்பிடிக்கிறார் கள். வீட்டுக்குப் பெரியவர்கள் வந்தாலும், பெரியவர்களைச் சந்திக்கப் போனாலும் கூட இந்தப் பழக்கத்தை அவர்கள் கடைப்பிடிக்கிறார்கள்.

நான் எங்கள் பள்ளிக் கூட மாணவர்கள் பொதுத் தேர்வு எழுதும் போது, பரீட்சை ஹாலுக்குப் போய் பிரத்யேகமாய்ப்



**"பிரபல நடிகையான உங்கள் மனைவி ஜெயஸ்ரீ நடிச்ச படம் பவள விழாவை நோக்கி ஓடிக் கொண்டிருக்கிறதே... ஆனா நீங்க ரொம்ப... ரொம்ப... கவலையா இருக்கீங்களே, ஏன்?"**

**"எந்த நிமிஷம் அவளிடமிருந்து விவாகரத்து நோட்டீஸ் வருமோன்னு கவலைதான்!"**

**– வெ. நாகராஜ்**



பிரார்த்தனை செய்து ஆசிர்வதித்துவிட்டு வருவது பல வருடங்களாக நடந்து வரும் வழக்கம். அப்போது கூட, வட இந்தியக் குடும்பங்களிலிருந்து வரும் மாண வர்கள், என் கால்களைத் தொட்டு, வணங்கி, ஆசி பெறுவார்கள்.

இதையெல்லாம் பார்க்கிற போது, நம் குழந்தை களுக்கும் இந்த மரியாதை தெரிய வேண்டும் என்று நான் நினைப்பேன். இது தான், என்னை, அன்னை கஸ்தூர்பா பிறந்த நாளை, அன்னையர் தினமாக எங்கள் பள்ளிக் கூடத்தில் கொண்டாடத் தூண்டியது. அன்றைய தினம், பெற்றோர்களுக்கு சுற்றறிக்கை மூலம் தகவல் தெரிவித்து, அம்மாக்களை வகுப்புகளுக்கு வர வழைத்தோம். வேலைக்குப் போகாத குடும்பத் தலைவி கள் மட்டுமல்லாமல் வேலைக்குப் போகும் அம்மாக்கள் கூட வந்திருந்தனர். அம்மாக்கள், வழக்கமாக மாணவர் கள் உட்காரும் இருக்கைகளில் உட்கார்ந்து கொள்ள, மாணவர்கள் அவர்கள் முன் மண்டியிட்டு அமர்ந்து கொண்டார்கள். தாங்கள் கொண்டு வந்திருந்த தட்டில், அம்மாவின் பாதங்களை வைத்து, தண்ணீரால் கழுவி, சந்தனம் குங்குமம் இட்டு, ஸ்லோகம் சொல்லி, பூக் களைப் போட்டு, பாத பூஜை செய்தார்கள். முதலில் வெட்கப்பட்ட சில குழந்தைகள், மற்றவர்களைப் பார்த்து சகஜமாகி, பாத பூஜை செய்ய ஆரம்பித்து விட்டார்கள்.

நானும், அந்த பூஜையில் கலந்து கொண்டேன். என் னுடைய தாயார் படத்தை பள்ளிக் கூடத்துக்கு எடுத் துக் கொண்டு போய், அதன் முன்னால் அமர்ந்து, பூஜை செய்தேன்: அப்போது நான் பேசியதை உங்க ளுடன் பகிர்ந்து கொள்ள விரும்புகிறேன். "நாம் சிங்கம், மானைப் போல மாற வேண்டும் என்று நினைப்ப தில்லை; மானை சிங்கம் போல மாற்றவும் முயற்சி செய்வது இல்லை. அது அது அதனதன் இயற்கை என்று எடுத்துக் கொள்ளுகிறோம். ஆனால், நம் குழந் தைகளை மட்டும் குழந்தைகளாக நாம் பார்ப்பது இல்லை. சொன்னதைப் புரிந்து கொண்டு, சொல்வதைக் கேட் டுக் கொண்டு, பெரியவர்கள் போல நடந்து கொள்ள வேண்டும் என்று எதிர்பார்க்கிறோம். இது எப்படி நியாயமாகும்? உலகில் குறையே இல்லாதவர் யாருமே இடையாது. எனவே, நீங்கள் பெற்ற குழந்தையை, அத னுடைய குறை, நிறைகளுடன் அப்படியே ஏற்றுக் கொள் ளுங்கள்; தனித் தன்மையை உணர்ந்து அங்கீகாரம் கொடுங்கள். அதுதான் தாய்மையின் சிறப்பு அம்சம்" என்றேன்.

பாத பூஜை முடிந்த பிறகு தாய்மார்கள், நெஞ்சம் நெகிழ்ந்ததை அறிந்தபோது, நானும் மனம் நெகிழ்ந்தேன்.

இந்த பாத பூஜையில் இரண்டு விஷயங்கள் இருக் கின்றன. பெற்றோருக்கு உரிய மரியாதை செலுத்துவது குழந்தைகளின் கடமை என்பது ஒன்று. குழந்தைகளை தனித்தன்மையுடைய நபர்களாக ஏற்றுக் கொள்ளுவது தான் தாய்மையின் சிறப்பு என்பது இன்னொன்று.

*(அடுத்த வாரம் சொல்லுகிறேன்)*

## டி.வி.யில் பார்த்தவை :

**— என். கோபாலகிருஷ்ணன்,**
**(உச்சநீதிமன்ற வழக்கறிஞர்)**

● விஜய் டி.வி.யில் புதுமை என்ற பெயரில் பாடல்களை ஒளிபரப்பும்போது காட்சிகளின் மேலும் கீழும் ஏதேதோ படங்களை ஓடவிட்டுக் கொண்டிருக் கிறார்கள். இதனால் கவனம் பெரிதும் சிதறுகிறது. இந்தக் கோணங்கித்தனத்தை நீக்கிவிட்டு பழையபடி பளிச்சென்று பாடல்களை ஒளிபரப்பட்டும்.



● தன்னைவிட சற்றே பெரிய காட் டெருமையைத் தனியா கவும், தன்னைவிட மிகவும் பெரிய யானை யைக் கூட நாலைந்து பேராகச் சேர்ந்தும் வேட்டையாடும் சிங்கம் (பெண் சிங்கம்தான்; ஆண் சிங்கம் சோம் பேறி), தன் குட்டிகளிடம் மட்டும் பாசமாக இருப்பதும், எப்படி பதுங்கி வேட்டையாடுவது என்பதை அவை களுக்குக் கற்றுக் கொடுப்பதும் வெகு ஆச்சர்யம். வேகமாக ஓடி பெரிய இரையைப் பிடிக்கும்போது, சரியாக அதன் குரல்வளையைப் பிடிப்பதையும் டிஸ்கவரியில் பார்த்தப் போது மேலும் வியப்பு.

● பல சேனல்களிலும் 'வாலி'யில் வரும் சோனா பாடலை ஒளிபரப்பு கிறார்கள். ''பாலிருக்கும் பழமிருக்கும்'' என்பது போன்ற பாடல் காட்சிகள் எவ்வளவு இனிமையாக படமாக்கப் பட்டிருந்தன. இப்போது எண்ணற்ற ஆண்களும் பெண்களும் பின்னணியில் தொம் தொம் என்று குதிக்க, கூச்சமில் லாமல் நாயக நாயகிகள் காதல் புரிவது கண்றாவி.

● புதுப்புது நடிகர் நடிகைகளின் வாரங்கள் ஒளிபரப்பப்படுகின்றன. இப் போதுதான் ஒரு வழியாக 'சோ'வின் வாரம் வந்திருக்கிறது. டி.ஆர். ராஜ குமாரி, டி.எஸ். பாலையா போன்ற பழம் பெரும் நடிக நடிகைகளின் அரு மையான படங்களையும் ஒளிபரப்ப லாமே.

**— ஜி.எஸ்.எஸ்.**

# 'ஜெ'க்கு மதிப்பு, வோட்டு வங்கியாலா?

● வி.பி. மகராசி, மதுரை - 16.

? தமிழகத்தில் மூன்றாவது அணியை உருவாக்க வேண்டும் என்பதற்காகப் பல்வேறு கட்சிகளை உடைக்கும் முயற்சியில் தி.மு.க. இறங்கியுள்ளது என திண்டிவனம் ராமமூர்த்தி கூறியிருப்பது பற்றி...?

! 'ஜெ'யுடன் கூட்டணி முயற்சி நடக்கும் போதே 'ஜெ'யின் ஆளுமை அவர் மீது செலுத்தப்பட்டு வருகிறது; ஜெ போலவே கோயபல்ஸ் பிரசாரத்தில் இறங்குகிறார்.

● ஆர். ராஜதுரை, சீர்காழி.

? ராஜஸ்தான் மாநிலத்தில் ஒன்பதாம் வகுப்பு முதல் பன்னிரண்டாம் வகுப்பு வரையுள்ள பாட நூல்களில் ஆர்.எஸ்.எஸ்ஸுக்கு ஆதரவாக இருந்த பாடப் பகுதிகளை காங்கிரஸ் அரசு நீக்கியது பற்றி...?

! இது உண்மையானால் நல்ல விஷயந்தான்.

● ஜி. செல்வராஜன், ரிஷிவந்தியம்.

? அஹிம்சையால் ஆங்கிலேயரை வெல்லலாமென வழிகாட்டிய காந்தி, அண்டை நாடான பாகிஸ்தானை வெல்வதற்கு வழியைக் காட்டாதது ஏன்...?

! காந்திய வழியை பாரதம் கைவிடவில்லை என்பதைத்தான் சிம்லா, லாகூர் பேச்சு வார்த்தைகள் உணர்த்துகின்றன. ஆனால், போர் நம்மீது திணிக்கப்படும் போது நாம் கைகட்டிக் கொண்டு உட்கார்ந்திருப்பதை காந்திஜியும் விரும்பமாட்டார். நம்மைக் கொல்ல வந்த பகைவையும் எதிர்க்கலாம் தவறில்லை.

❑ ரூ. 50 பரிசு பெறுபவர் :
ஏ.எம். கஸாலி ஷமீம்,
121, மேலத் தெரு,
அரசர் குளம்,
புதுக்கோட்டை
மாவட்டம் - 614 801.



• புதிய அங்கீகாரம்

● எம். அசோக்ராஜா, அரவக்குறிச்சிப்பட்டி.

? ஒரே மேடையில் சோ.பா - ஜெ - எப்படி...?

! ஜெ வருவதற்கு முன்பே மேடை ஏறிப் பேசிவிட்டுச் சென்று விட்டாரே சோ.பா - உஷார் ஆசாமிதான்!



• சாட்சியமே தேவை!

● ஏ. முத்து லட்சுமி, மதுரை - 16.

? கல்கியின் சார்பில் கார்கில் நிதி திரட்டுவீர்களா...?

! இல்லை. அலுவலக ஊழியர்களுக்குள்ளேயே ரூ. 11,000க்கும் அதிகமாகத் திரட்டி அனுப்பி விட்டோம். நிதி தர விரும்புவோர் நேரடியாகவே முதல்வருக்கோ மத்திய அரசுக்கோ அனுப்பலாமே. வேறு யார் மூலமாவது அனுப்புவதெனில் யோசித்துச் செயல்படுமாறு அரசாங்கமே எச்சரிக்கிறது.

● என். பாலகிருஷ்ணன், மதுரை - 1.

? உட்பூசல் இல்லாத ஒரு கட்சியின் பெயரைச் சொல்லுங்கள் பார்க்கலாம்?

! சு. சுவாமி - வாழப்பாடி கட்சிகளில் உட்பூசல் செய்யுமளவுக்கு இன்னொரு நபர் ஏது?

● செ. சல்மான், பாம்பன்.

? சென்னையைச் சேர்ந்த நாசர் உசேன் இங்கிலாந்து அணியின் கேப்டனானது குறித்து...?



• புதிய கோயபெல்ஸ்!

! இதற்காக சோனியா இந்தியப் பிரதமராவதை நான் ஏற்பதற்கில்லை! நாசர் உசேன் போலவே உழைப்பு, அனுபவம், திறமை ஆகியவை பெற்று படிப்படியாக உயர்ந்து, பிறகு பிரதமர் பதவிக்கு முயற்சி செய்யட்டும்.

● ஏ.எஸ். யோகானந்தம், ஔவையார் பாளையம்.

? தீண்டத்தகாதவர்கள் என்பவர்கள்



* காட்டிய வழி!

# நீங்கள் கேட்டவை — தராசு



* 'தனி' சாமர்த்தியம்!

யார்?

! ஊழல்வாதிகள்!

● ஆர். தங்கராஜ், திருப்பூர்.

? இந்தியா-பாக் இடையே அணு ஆயுதப் போர் மூண்டால் பத்துக் கோடி மக்கள் அழிவார்களாமே?

! அழிவு ஒரு பக்கமிருக்க, தொடர் விளைவுகள் தலைமுறை தலைமுறையாக நீடிக்கும்.

● ஏ. எம். கஸாலிஷமீம், அரசர்குளம்.

? கார்கில் பகுதியில் நடந்த யுத்தத்தில் வீரமரணமடைந்தவர்களின் குடும்பத்தினர் சோகத்தில் இருக்கும்போது, அவர்களுக்கு நிதி திரட்ட ஆட்டம் - பாட்டம் நிறைந்த கலை நிகழ்ச்சிகள் நடத்துவது சரியா...?

! தவறில்லை. போர்க்களத்தில் உள்ள வீரர்களை உற்சாகப்படுத்துவதற்கே கூட கலைஞர்கள் செல்வதுண்டு. ஆனால், ஓர் உயர்ந்த நோக்கத்துக்கான கலை நிகழ்ச்சி தரக் குறைவாக அமைந்து விடாமல் எச்சரிக்கையாக இருக்க வேண்டும்.

● மங்கை, பாளையங்கோட்டை.

? டான்சி வழக்கில் ஜெ தப்பினால், உலகில் எந்தச் சொத்தையும் அரசியல்வாதிகள் விட்டு வைக்க மாட்டார்கள் என்று அரசு வக்கீல் பேசியிருக்கிறாரே?



* சிறந்த தானம்!

! சரியான கண்ணோட்டம். எதிர்காலத்தில் அரசியல்வாதிகள் குற்றமிழைத்து வழக்குத் தொடரப்படுமானால், ஏற்கெனவே நடந்த வழக்குகளின் தீர்ப்புகள் முன்னுதாரணமாகக் கொள்ளப்படும். எனவே அரசு வக்கீலின் கவலை நமக்குப் புரிகிறது. ஆனால் சரியான சாட்சியங்களைச் சமர்ப்பித்து தண்டனை பெற்றுத் தருவதும் அவரது சாமர்த்தியத்தைத்தான் சார்ந்திருக்கிறது.

● எஸ். முரளி, குறிஞ்சிப்பாடி.

? இந்திய ராணுவ வீரர்களுக்காக சோனியா காந்தி கொடுத்த ரத்த தானம்?

! அதைப் படம்பிடித்துப் போட்டதால் அரசியல் பண்ணுவதாக அவரைத் தாக்குவது தவறு. இதுபோன்ற நற்காரியங்களுக்குத் தலைவர்கள் முன்னுதாரணமாக விளங்குவது வரவேற்க வேண்டிய விஷயம்.

● இரா. திலீப், திருச்சி - 14.

? கணிசமான வோட் பேங்க் இருப்பதால் தான் ஜெயலலிதாவுக்குத் தொடர்ந்து மதிப்பா...?

! கூட்டு நாடுவோருக்கு வோட்டு வங்கியின் பலத்தை விட பண வங்கியின் பலத்தில் தான் கண்!

● ஸ்ரீவி நாயகன், ஸ்ரீவில்லிபுத்தூர்.

? 'காமராஜர் மணி மண்டப விழாவில் கலந்து கொண்டு காங்கிரசை பலவீனப்படுத்துவதா?' என்று குமரி அனந்தன் மீது திண்டிவனம் ராமமூர்த்தி கடுமையாகச் சாடியுள்ளதைப் பற்றி...?



* நகுதி நியமனம்

! செம ஜோக்! இனிமேல் தமிழக காங்கிரஸில் பலவீனப்பட என்ன பாக்கியிருக்கிறதாம்!

● அஸ்வதி மணாளன், சென்னை - 28.

? தன் பலமும் எதிரியின் பலமும் நன்கு தெரிந்திருந்தும் இப்படி மோத பாகிஸ்தானுக்கு என்ன தைரியம்?

! அசட்டு தைரியம்தான்!

● ராஜி, சுமுதி.

? பாரதீய பாஷா பரிஷத் விருது பெறப் போகும் எழுத்தாளர் ஜெயகாந்தனைப் பாராட்டி சில வரிகள்?

! அவர் சில ஆண்டுகளாக எழுதுவதிலிருந்து ஒதுங்கிக் கொண்டு விட்டாலும் அவர் ஏற்கெனவே எட்டிப் பிடித்த சாதனையின் சிகரம் ரொம்ப உயரமானது என மீண்டும் நிரூபணமாகியிருக்கிறது.

# நக்ஷத்ரமென்பார், நடக்கும்!



**மேஷம் :** *(அஸ்வினி, பரணி, கிருத்திகை முதல் பாதம் முடிய)*

முக்கியமான சில கிரகங்கள் இப்ப உங்களுக்கு நிபந்தனையற்ற ஆதரவு தருது. அதனால, உங்க நீண்டநாள் திட்டங்கள் ஏதாவது இப்ப சுமுகமா நிறைவேற சான்ஸ் இருக்கு. நண்பர்கள், உறவினர்கள் கிட்டேயிருந்து எதிர்பார்த்த உதவிகள் கட்டாயம் கிடைக்கும். சிலருக்கு வெளிநாட்டு வர்த்தகத் தொடர்பு லாபகரமா அமையும். அரசியல்வாதிகளுக்கு செழிப்பான பாதை புலப்படும். பெண்கள் மட்டும் உடல் நலத்துல தீவிரமா கவனம் செலுத்த வேண்டியிருக்கும். மத்தபடி இது ஏறுமுகமான வாரம்தான்.



**ரிஷபம் :** *(கிருத்திகை 2-ம் பாதம் முதல் ரோகிணி, மிருகசீரிஷம் 2-ம் பாதம் வரை)*

நீங்க ஒரு போராளி! எவ்ளோ எதிர்ப்பு பொறாமை இருந்தாலும் போராடி ஜெயிப்பீங்க. லட்சிய வேகம் அதிகம் உள்ள உங்களுக்கு இந்த வாரம் மேலதிகாரிகளாலும் நண்பர்களாலும் தொல்லைகள் அதிகம் இருக்கும். வேலையை விட்டுட்டு ஓடிடலாமான்னு கூடத் தோணும். ஆனா, உங்க திறமைக்கு முன்னால மத்தவங்க வயித்தெரிச்சல் கால் தூசு பெறாதுன்றதை மறந்துடாதீங்க. பணப் பிரச்னை இல்லாத வாரம்னாலும் அநாவசிய செலவுகளைக் கட்டுப்படுத்த வேண்டியது அவசியம்.

**மிதுனம் :** *(மிருகசீரிஷம் 3-ம் பாதம் முதல் திருவாதிரை, புனர்பூசம் 3-ம் பாதம் வரை)*

உங்க திட்டங்கள் சுமுகமா நிறைவேறும். பணப் பிரச்னை இருக்காது. பெரியவங்க ஆசி பரிபூரணமா கிடைக்கும். புது வியாபார ஒப்பந்தங்கள் வெற்றிதான். ஸ்பெகுலேஷன் துறையினருக்கு ஆதாயமான வாரம். சிலருக்கு திடீர் வெளியூர்ப் பிரயாணம் இருக்கலாம். கனவுத் தொல்லை இருக்கும். இந்த வாரம் தானதர்மம் செய்யறதுல ஈடுபாடு அதிகம் இருக்கும். கார்கில் நிதிக்கு அள்ளிக் கொடுப்பீங்க.

**கடகம் :** *(புனர்பூசம் 4-ம் பாதம் முதல் பூசம், ஆயில்யம் முடிய)*

கொஞ்சம் சுமாரான வாரம் தான். புதிய திட்டங்கள், ஒப்பந்தங்கள், வீடு மனை வாங்கறது - இதையெல்லாம் ஒரு பத்து நாளைக்குத் தள்ளிப் போடறது நல்லது. வேலை பார்க்கற இடத்துல வீண் மனஸ்தாபங்கள் ஏற்படலாம். குறிப்பா பெண்களோட சண்டை வரதுக்கு சான்ஸ் இருக்கு. ஹோட்டல்ல சாப்பிடாதீங்க. ஃபுட் பாய்சனுக்கு வாய்ப்பு அதிகம். மொத்தத்துல பொறுமையும் நிதானமும் கடைப்பிடிக்க வேண்டிய வாரம்!

**சிம்மம் :** *(மகம், பூரம், உத்திரம் முதல் பாதம் முடிய)*

ல் குரு இருக்கறது நல்ல விஷயம்தான். உங்க ஆற்றல் மேலோங்கி நிக்கும். எந்தக் காரியமும் சுலபமா நிறைவேறும். அரசாங்கம் மூலமா சில நல்ல விஷயங்கள் நடக்க சான்ஸ் இருக்கு. திருமணம், விருந்துகள்ல கலந்துக்குவீங்க. போட்டிகளில் வெற்றி நிச்சயம். எதிரிங்க பணாலாயிடுவாங்க. அப்பா உடல் நலத்துல அக்கறை செலுத்த வேண்டியது அவசியம். மருத்துவச் செலவுகள் இருக்கும்.

**கன்னி :** *(உத்திரம் 2-ம் பாதம் முதல் அஸ்தம், சித்திரை 2-ம் பாதம் வரை)*

பிரமாதமான வளர்ச்சி இருக்காதுன்னாலும் பிரச்னைகளும் அதிகம் இருக்காது. மாமூலான வாரம்தான். மனசுல எப்பவும் ஒரு குழப்பம் இருக்கும். சின்னச் சின்ன விஷயங்கள் கூட பூதம் மாதிரி பய

முறுத்தும். ராத்திரி தூக்கம் வராது. வீட்டுலே யும் குழப்பமும் சிறு மனத்தாங்கல்களும் வரும். வார்த்தைகளைக் கொட்டிடாதீங்க. ஆபீஸ்ல எல்லார் கிட்டேயும் அன்பா நடந்துக்கங்க. கடன் வாங்கறதோ, ஜாமீன் கையெழுத்துப் போடறதோ வேணாம்.



**துலாம்** : *(சித்திரை 3-ம் பாதம் முதல் சுவாதி, விசாகம், 3-ம் பாதம் வரை)*

உங்க ஆசைகள் சுலபமா நிறைவேறும். இதுவரை இருந்து வந்த பொருளாதார நெருக்கடி தீர்ந்துடும். திடீர் அதிர்ஷ்ட வாய்ப்புகளுக்கு சான்ஸ் இருக்கு. நல்லவர்கள் தொடர்பால ஆக்கபூர்வமான சில பணிகள் செய்து முடிப்பீங்க. தேக ஆரோக்கியம் சீரா இருக்கும். உத்தியோகஸ்தர்களுக்குப் பண வரவு அமோகமா இருக்கும். வழக்குகளும் சாதகமாவே தீர்ப்பாகும்.



**விருச்சிகம்** : *(விசாகம் 4-ம் பாதம் முதல் அனுஷம், கேட்டை முடிய)*

உங்க அறிவாற்றலால பல செயற்கரிய காரியங்களைச் செய்து முடிப்பீங்க. நண்பர்கள் உதவுவாங்க. பணப் பிரச்னை இருக்காதுன்னாலும் அநாவசிய செலவுகள் நிறைய வரும். சமூக சேவையாளர்களுக்குப் புகழ் கூடும். எழுத்தாளர்கள் ஏற்றம் பெறுவார்கள். உலோக வியாபாரிகளுக்கு லாபம் கூடும். பெண்களுக்குப் புதுப் புடைவை யோகம் இருக்கு. விளையாட்டு வீரர்களுக்கு சிறு காயம் ஏற்படும்.



**தனுசு** : *(மூலம், பூராடம், உத்திராடம் முதல் பாதம் வரை)*

மனசுக்கு இனிய சம்பவங்கள் நடக்கும். நண்பர்கள் எதிர்பாராத இன்ப அதிர்ச்சி தருவாங்க. பண வரவு சீரா இருக்கும். வாணிபத் துறையினருக்கு வெளிநாட்டு ஒப்பந்தங்கள் கூடும். வேலை தேடும் இளைஞர்களுக்குப் பிரகாசமான எதிர்காலம் உறுதி. கணக்கு வாத்தியார்களுக்கும் கம்ப்யூட்டர் துறையினருக்கும் புகழ் கூடும். விஞ்ஞானிகளும் ராணுவ வீரர்களும் பிரமாதமான சாதனைகள் புரிவாங்க.



**மகரம்** : *(உத்திராடம் 2-ம் பாதம் முதல், திருவோணம், அவிட்டம் 2-ம் பாதம் வரை)*

நண்பர்கள் கிட்ட எச்சரிக்கையா இருங்க. பல சங்கடங்கள் அவங்களால வரலாம். வியாபாரம் சூடு பிடிக்கற நேரத்துல சிலருக்கு பொருள் இழப்பும் ஏற்படும். அந்நிய மொழிக்காரர்களை அதிகம் நெருங்க விடாதீங்க. கடன், வாங்கறது, ஜாமீன் கையெழுத்துப் போடறதெல்லாம் வேணாம். வழக்கு ஏதும் இருந்தா உடனடியா வாய்தா வாங்குங்க. இந்த வாரம் எந்தத் தீர்ப்பும் உங்களுக்குச் சாதகமா இருக்காது. வாரக் கடைசில நிலைமை கொஞ்சம் சீராக வாய்ப்பு இருக்கு.



**கும்பம்** : *(அவிட்டம் 3-ம் பாதம் முதல், சதயம், பூரட்டாதி 3-ம் பாதம் வரை)*

உடல் நலன் சீரா இருக்கும். அந்தஸ்து உயரும். குடும்பத்துல மகிழ்ச்சி பெருகும். வீட்டு உபயோகப் பொருள்கள் வாங்குவீங்க. மக்களால அனுகூலம் உண்டு. தெய்வப் பணில ஆர்வம் கூடும். சிலருக்குக் கோயில் குளம்னு சுத்தற யோகம் இருக்கு. சகோதரர்களுக்குள்ள லேசா பிணக்கு வரலாம். விட்டுக் கொடுத்து நடந்துக்கங்க.

**துலாம் ராசிக்காரரான மூப்பனாரின் ஆசைகள் சுலபமா நிறைவேறுமாம். ஆக்கபூர்வமான சில பணிகளைச் செய்து முடிப்பாராம்!**





**மீனம்** : *(பூரட்டாதி 4-ம் பாதம் முதல், உத்திரட்டாதி, ரேவதி முடிய)*

பிரமாதமான வாரம். நினைச்ச காரியம் நடக்கும். வழக்குகள் சாதகமா தீர்ப்பாகும். எதிரிகள் ஓடி ஒளிவாங்க. வெளியூர்லேருந்து நல்ல சேதி வரும். சிலருக்குக் கல்யாணம் நிச்சயமாகும். காதல் அனுபவங்கள் தித்திக்கும். பெண்களுக்குத் தோற்றப் பொலிவு கூடும். எழுத்தாளர்களுக்குப் புகழோடு பணமும் சேரும். மொத்தத்துல உபயோகமான, உற்சாகமான வாரமா இருக்கும். ●

# குறையொன்றுமில்லை

ஒரு ஆசார்யரிடம் போய்த்தான் மந்திர உபதேசம் பெற வேண்டும் என்று சொன்னேன்.

ஒரு உபநயன சம்ஸ்காரம் நடக்கிறது என்று வைத்துக் கொள்ளுங்கள்-யார் உபநயனம் செய்து வைக்க வேண்டுமோ அவர் நித்யம் சஹஸ்ர காயத்ரி ஜபம் பண்ண வேண்டும். உபநயனத்துக்கு ஒரு மாதம் முன்னரோ இரண்டு மாதம் முன்னரோ ஆரம்பித்து தொடர்ந்து பண்ண வேண்டும். அப்போதுதான் உபதேசம் பண்ணுவதற்குத் தகுதி பெறுகிறார் அவர். இவரே காயத்ரி ஜபிக்காமல் போய் அந்தப் பையனுக்கு மட்டும் உபதேசம் பண்ணினால் எப்படி பலிக்கும் அது?

பூரணமாய் சித்தி அடைந்தவர்கள்தான் சிஷ்யர்களுக்குச் சொல்லிக் கொடுக்க வேண்டும்.

கற்றுக் கொள்கிறவர்களும் மந்திரத்தைக் கேவலமாக நினைக்கக் கூடாது. 'ஓ இதுதானா...?' என்று அலட்சியம் கூடாது. அதனால் தான் சாஸ்திரம் சொல்கிறது-ஆசார்யனைப் பிரகாசிக்கச் செய்யக் கூடிய நல்ல சிஷ்யனாயிருக்க வேண்டும்; ஆசார்யர்கள் சொல்லிக் கொடுத்த மந்த்ரத்தை ரொம்ப ஜாக்கிரதையாக ரக்ஷிக்க வேண்டும் என்று.

பத்து சவரனில் ஒரு நகை பண்ணினால் அதை ஒரு பெட்டியில் வைத்துப் பூட்டி, அதை உள்ளுக்குள்ளே ஜாக்கிரதை செய்கிறோம். அது மதிப்புள்ளது என்பதால் ஜாக்கிரதையாக வைக்கிறோம். அந்த மாதிரி மந்திரத்தையும் ஹ்ருதயமாகிற பெட்டியிலே வைத்துப் பூட்ட வேண்டும். கண்டவாறு அதைச் சொல்வதற்கில்லை.

அதனால்தான் மந்திரங்களெல்லாம் பூர்வ காலத்தில் புத்தகத்தில் ஏறியதே கிடையாது. ஓலை படா பிரமாணம்; எழுதா கிளவி என்று சொல்லுவார்கள். ச்ருதி என்று சொல்லுவார்கள் அதை. 'ச்ருயததி ச்ருதி'-கேட்டு கேட்டு வர வேண்டிய விஷயம்' அப்படி விசேஷமாக அந்த மந்திரம் இல்லாமல் மந்திரத்தைக் கண்டவாறு சிதறவிட்டு, அதை சாமான்யமாக ஒருத்தன் நினைத்தானானால் அவனுக்கு இரண்டு விஷயத்திலே நஷ்டம் ஏற்படுகிறது: சம்பத்தும் கழிந்து போகிறது; ஆயுளும் அழிந்து போகிறது. ஆகையினாலே மந்திரத்தை ஜாக்கிரதையாக ரக்ஷிக்க வேண்டும்.

அந்த மந்திரத்துக்கு உள்ளீடான தேவதையினிடத்திலே உள்ளீடான பக்தியிருக்க வேண்டும்.

இதற்கு மேல் நமக்கு வேண்டியது-மந்திரம் உபதேசம் பண்ணிய ஆசார்யரிடத்திலே பக்தி வேண்டும்.

இந்த மூன்றும் இருந்தால்தான் மந்திரம் சித்திக்கும். எல்லா மந்திரங்களுக்கும் மூலமானவன் பரமாத்மா.

விஷ்ணுர்வை தேவ:

விஷ்ணுர்வை யக்ஞ: என்று தேவ சப்தத்தினாலும் யக்ஞ சப்தத்தினாலும் சொல்லப்படக் கூடியவன் விஷ்ணு. சிபி விஷ்ட: என்று சொல்லப்படக்கூடியவன் விஷ்ணு. யக்ஞத்தில் எந்த தேவதையின் பெயரைச் சொன்னாலும் அது விஷ்ணுவையே குறிக்கும் என்று வித்யாரண்ய சுவாமி அழகாக பாஷ்யம் எழுதியிருக்கிறார்.

'கறந்த பாலுள் நெய்யே போல்' என்று நம்மாழ்வார் சொல்கிறார். பாலுக்குள் நெய்யானது எப்படி இருக்கிறதோ, எள் என்கிற தானியத்துக்குள் எண்ணெய்யானது எப்படி மறைந்திருக்கிறதோ அப்படி அண்ட சராசரங்களுக்குள்ளே பகவான் மறைந்திருக்கிறான்.

எள்ளை ஆட்டினால் எண்ணெய் பெறலாம். அரணியைக் கடைந்தால் அக்னியை எடுக்




முக்கூர்



கலாம். அது போல் புத்தியாகிற மத்தை இட்டு நாம் சிரமப்பட்டோமானால் உள்ளே இருக்கிற பரமாத்மாவை நாம் பார்க்க முடியும். வெளியிலே பார்க்க முடியாது. அஷ்டாங்க யோகத்தினால் சமாதி நிலையை நாம் அடைந்தால் உள்ளுக்குள்ளே பகவான் இருப்பதை அறியலாம்.

உள்ளேயும் வெளியேயும் எங்கும் வியாபித்திருப்பவனான அவனை உள்ளேயும் பார்க்கலாம் வெளியேயும் பார்க்கலாம்.

**லக்ஷ்மிநரசிம்மாச்சார்யார்**

அப்படிப்பட்டவன், விஷ்ணு என்கிற சப்தத்தினால் யக்ஞத்திலே விசேஷமாகக் கொண்டாடப்படுகிறான். இதையெல்லாம் வேதம் எடுத்துக் காட்டிற்று. வேதம் என்ன சொல்கிறதோ அதையேதான் சஹஸ்ர நாமமும் நமக்கு எடுத்துக் காட்டுகிறது.

விஷ்ணு சப்தத்தினுடைய பெருமையை எடுத்துக் காட்டுகிறது.

ஒரு குழந்தை பிறக்கிறபோது அதோடு கூட ஐந்து விஷயங்கள் பிறக்கின்றன என்கிறது சாஸ்திரம். அவை கண்ணுக்குத் தெரிவதில்லை. என்னென்ன...?

ஆயுள்–எவ்வளவு வயதுவரை அது வாழும்

கர்மா–இன்ன செயல் செய்து பிழைப் பான்

வித்தம்–இவ்வளவு பொருள் சம்பாதிப் பான்

வித்யா–இவ்வளவு கல்வி வாய்க்கும்.

விதனம்–இன்றைய தினம்–இந்த க்ஷணத்தில் பிராண வியோகம்.

– இந்த ஐந்தும் ஏற்கெனவே நிர்ணயிக் கப்பட்ட விஷயம்தான். நாமாக ஒரு விருத்தியைப் பண்ண முடியாது.

வித்தம் என்ன உண்டோ அவ்வளவு தான் கிடைக்கும். கல்வியும் வித்யையும் எவ்வளவு உண்டோ அவ்வளவுதான் வாய்க்கும். மரணமும் கால நிர்ணயப்படி தான் நடக்கும். ஆயுள் பிராயமும் அப்படித் தான்–

ஆகையினாலே கண்ணுக்குத் தெரியாத இந்த ஐந்து– இவற்றைப் பற்றி நாம் விசா ரமே படுவதில்லை.

ஒருத்தரைப் பார்த்துச் சொல்லிவிட் டார்: "நாளைக்கு மூன்று மணிக்கு உமக்குப் பிராணவியோகம்" என்று சொல்லிவிட்டா ரென்று வைத்துக் கொள்வோம்...

அப்புறம் இன்றைக்குச் சிறக்குமா அவருக்கு. நாளைக்கு சந்தோஷமாக இருக்க முடியுமா...? நாளன்னிக்கு மத்தியானம் மூன்று மணி வந்துவிடப் போகிறதே, வந்து விடப் போகிறதே என்று நினைத்துக் கொண்டே இன்றைக்கே பிராணனை விட்டுவிடுவார் அவர்!

அந்த மாதிரி, இந்திர பதவி போய்விடப் போகிறதே போய்விடப் போகிறதே என்று நினைத்துக் கொண்டிருந்தால் அந்தப் பதவியினாலே சந்தோஷம் வருமா?

புண்யத்தினால் சம்பாதிக்கக் கூடிய ஸ்தானமும் அழியக் கூடியது என்பது தெரிய வேண்டும்.

ஆகையினாலே புண்யம், பாபம் இரண் டுமே நமக்கு விலங்கு.

இரண்டுமே விலங்கு என்றால் எப்படி...? புண்யத்துக்கும் பாபத்துக்கும் என்ன வித்தி யாசம்? புண்ணியம் என்பது பொன்னா லான விலங்கு; பாபம் என்பது இரும்பினா லான விலங்கு.

கையிலே விலங்கு போட்டுக் கொண் டால் நான் தங்கத்திலே போட்டுக் கொண்டேன் என்று ஒருத்தர் சொன்னால் அதிலே ஏதாவது பெருமை உண்டா? சுதந்தரமாகக் கையை எடுக்க முடியுமா? ஏதாவது பண்ண முடியுமா? தங்கத்தினால் விலங்கு போட்டுக் கொள்கிற மாதிரிதான்

## அருள்வாக்கு

இப்போதுள்ள வித்யைகளும் போதனை முறைகளும் வெற்று லௌகிகத்துக்கும் அகங் காரத்துக்குமே ஆஸ்பதமாக இருக்கின்றன என்பதால், ஆத்மார்த்தமான சாஸ்திரங்களை, கலைகளை, வித்யைகளைக் குறைவாகப் பேசக் கூடாது. இவை எல்லாம் அகங்காரத் தைக் கரைத்து, லோகக்ஷேமத்தையும் ஆத்ம க்ஷேமத்தையும் தரவே நம் தேசத்தில் ஏற்பட்டி ருந்தன. இப்போதும் கூடப் புதிது புதிதாக விருத்தியாகியிருக்கிற வித்யைகள், டெக் னாலஜி ஆகியவற்றால் எத்தனையோ லோக

புண்ய கர்மா!

புண்ய கர்மாவைப் பண்ணி சுவர்க்க லோகாதிகளுக்குப் போய் அப்படிப்பட்ட– லோகங்களுக்கெல்லாம் போய் அந்தப் பதவியெல்லாம் பார்த்துவிட்டு மறுபடியும் பூலோகத்துக்குத்தான் வந்து விழ வேண் டும். மறுபடியும் இந்த ஜன்மா!

இப்படியே இதிலேயே சுற்றிக் கொண்டேயிருக்க வேண்டும்!

கிணற்றிலே ஜலம் தூக்குகிறதைப் பார்க் கிறோம். குடத்திலே நன்றாகக் கயிற்றைக் கட்டி உள்ளே இறக்குகிறோம். ஜலத்தைத் தூக்குகிறோம். மறுபடியும் உள்ளே–மறுபடி யும் எடுக்கிறோம். அந்த மாதிரி நாம் கீழே விழுவதும் மேலே போவதும் நிகழ்ந்து கொண்டேயிருக்கிறது.

பந்து விளையாடுகிறபோது பார்க்க லாம். பந்தைக் கீழே தட்டினால் திரும்பவும் மேலே உயரும்; மேலே போன பந்து திரும்

பவும் கீழே வரும்.

அந்த மாதிரிதான் இந்த ஜீவன்– மேலே போவதும் கீழே வருவதும் ஒரு பந்து விளையாட்டு மாதிரி. மேலேயும் கீழேயும் போய்ப் போய் வந்து கொண்டிருக்கும்.

ஆகையினால்தான் உபநிஷத் சொல்கிறது– புண்ய-பாப கர்மாக்களை உதறித் தள்ள வேண்டும்.

நல்ல மணற்பாங்கான இடத்திலே– சமுத்திரக் கரையிலே, ஒரு குதிரையை பிராதஹ் காலத்தில் கொண்டு போய் விட்டோமானால், அந்த மணலில் அது புரண்டு எழுந்து, உடம்பைச் சிலிர்த்து ரோமங்களையெல்லாம் உதிர்க்கும். அந்த மாதிரி நாம் பகவான் எதிரில் விழுந்து விழுந்து எழுந்திருக்கிறபோது நம் புண்ய-பாபங்கள் எல்லாவற்றையும் உதறித் தள்ள வேண்டும்.

ணப்பட்ட அழகான வழி அது. என்ன வழி...?

'பரம பதம் எங்கேயிருக்கிறது?' என்று ஒருத்தர் கேட்டார்.

இரண்டு கையையும் மேலே தூக்கிக் காட்டி 'அங்கேயிருக்கு!' என்றார் பதில் சொன்னவர்!

'அங்கே' என்றால் அது எவ்வளவு தூரம்? 'மேலே' என்றால் அது எத்தனை தூரம்... தெரியுமா?

தெரியாது!

மேலே இருக்கிறது என்பது மாத்திரம் தெரியும்!

காஞ்சிபுரம் எவ்வளவு தூரம் என்று கேட்டால் சொல்லலாம். ஸ்ரீரங்கம் எவ்வளவு தூரம் என்றால் சொல்லலாம். நம்மால்



க்ஷேமத்தை உண்டாக்கலாம்; நல்லறிவை வளர்த்துக் கொள்ளலாம். எல்லா 'எலிமென்ட்'களுக்கும் மூலமான 'எனர்ஜி' ஒன்றேதான் என்று கண்டு பிடித்து விட்ட அடாமிக் (அணு) ஸயன்ஸிலேயே நன்றாக ஊறினால் அதுவே 'கூட ஆத்மிக அத்வைதத்துக்குக் கொண்டு போய் விட்டு விடும். ஓயாமல் ஆசை வாய்ப்பட்டுப் பறப்பாகப் பறந்து கொண்டிராமல் ஆன்றோர்கள் போட்டுத் தந்த வாழ்க்கை முறையை நாம் மேற்கொண்டு வித்யைகளை அப்பியசித்து வந்தால் இன்றும் அவை புறத்துக்கு நல்லது செய்யும்; உள்ளுக்கு ஞானமும் தரும்.

மருந்தோடு பத்தியமும் முக்கியம். வித்யை என்கிற மருந்துக்கு அடக்கம், விநயம் என்கிற பத்தியம் அவசியம். இப்போது அது இல்லாததால் மருந்தே விஷமாயிருக்கிறது. ஆனால் அடக்கத்தோடு பயின்றால் வித்யையே உண்மையில் ஞானம்தரும் அமிருதமாகும்.

**— ஜகத்குரு காஞ்சி காமகோடி**
**ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி**
**சங்கராச்சார்ய ஸ்வாமிகள்**

அவன் திருவடியையே பற்றிக் கொண்டு இருக்க வேண்டும்.

ஆகையினால் புண்யம் பாபம் இரண்டும் பகவானை அடைவதற்குத் தடை என்று உணர்ந்து இதிலே புத்தி போகாமல் அவன் திருவடியையே பற்றினோமானால் அந்த திவ்யமான சரணாரவிந்தத்திலேயிருந்து நமக்குக் கிடைக்கக் கூடியது உத்தமோத்தமமான ஆனந்தம்.

அந்த ஆனந்தத்துக்கு அளவே இல்லை. அனுபவித்தால்தான் அது தெரியும். உயர்ந்த நிலையை அதன்மூலம் நாம் அடைந்துவிட முடியும். அந்த இடத்துக்குப் போனால்தானே நாம் அதை அனுபவிக்க முடியும்? அதற்கென்ன வழி...?

அவனேதான் வழி! அவனேதான் மார்க்கமாயிருந்து நம்மை அழைத்துக் கொண்டு போகிறான். நமக்கு அந்த பகவான் விஷ்ணுவினால் ஏற்பாடு பண்

சொல்லக்கூடிய நிலையில் அமைந்திருப்பதால் சொல்லலாம். பிரத்யக்ஷமானதைச் சொல்ல முடியும். பரோக்ஷமானதை, கண்ணுக்குத் தெரியாத விஷயத்தை எப்படிச் சொல்ல முடியும்?

பிரத்யக்ஷத்தினால் காண முடியாததையும் அனுமானத்தினால் யூகிக்க முடியாததையும் வேதத்தினால் அறிய வேண்டும். இவை இரண்டு மூலமாகவும் கிடைக்காததையும் வேதக் கண் கொண்டு பார்த்தோமானால் நன்கு விளங்கும். வேதம் சொல்கிறது நமக்கு – பரம பதம் எவ்வளவு தூரத்தில் இருக்கிறது என்பதைக் காட்டிக் கொடுக்கிறது.

அதிலே கௌஷீதகி உபநிஷத் என்று ஒரு உபநிஷத். பரமபதம் எங்கே இருக்கிறது. நாம் எங்கே இருக்கிறோம் என்பதை அது விளக்கிக் காட்டுகிறது.

(தொடரும்)

நான்காயிரம் மீட்டர் உயரத்தில் இருந்த பனிச்சிகரம் இரண்டில் முத்துக் குமார் காவல் புரிந்து கொண்டிருந்தான். உடன் பல்வீர்.

பனியினூடே அமைக்கப்பட்டிருந்த பதுங்கு குழி அவர்களை மறைத்தது. தோட்டத்து மண் புழுக்களைப் போல அவர்கள் பதுங்கி இருந்தார்கள்.

ஓரடி நீளமும், இரண்டங்குல அகலமும் கொண்ட ஒரு சின்னத் திறப்பு. அந்தத் திறப்பில்தான் முத்துக் குமாரின் துப்பாக்கி முனையும், கண்களும் தங்கி இருந்தன.

# மலை அரசி

எல்லைக்கோட்டைத் தாண்டி இருந்த பாகிஸ்தான் பகுதியை அவன் கண்கள் சோர்ந்து விடாமல் துழாவிக் கொண்டிருந்தன. இமைகளைக் கொஞ்சம் அழுத்தமாக மூடிவிட்டால் கூட எதிரிகள் ஊடுருவி விடக்கூடும் என்ற நிலைமை.

இந்தச் சண்டை அவனுக்குச் சம்மதமான ஒன்றல்ல. மண்ணுக்காக மனிதன் மட்டும்தான் அடித்துக் கொள்கிறான். எத்தனை சித்தர்கள், புத்தர்கள் உபதேசித்தாலும் புரிவதே இல்லை. புதைந்தால் ஆறடி. எரிந்தால் சில பிடி. தெரிந்தும் கூட சண்டை மட்டும் சிரஞ்சீவித் தன்மையை எய்தி விட்டது.

முத்துக்குமார் மூட்டைப் பூச்சிகளை நசுக்கியதில்லை. கொசுக்களைத் தட்டியதில்லை. ஆடு, கோழிகளை அடித்து உண்டதில்லை. ஆனால் ராணுவம் அவன் குடும்ப உணர்வில் ஒன்றிய ஒன்று.

அப்பா எழுபத்தொன்றில் பாகிஸ்தானுடன் நடந்த போரில் செத்துப் போனார். அண்ணன் செந்தில்குமார் ஐபிகேஎஃப்பாக இலங்கை சென்று காணாமல் போனவனாக அறிவிக்கப்பட்டான்.

அப்பா செத்தபோதும், அண்ணன் இறந்து விட்டதாக உணரப்பட்ட போதும் உறவு துக்கப்பட்டது. கண்ணீர் சிந்தியது. அம்மா பெருமைப்பட்டாள். இறப்பு எல்லோருக்கும் நிகழ்வதுதான். ஆனால் எல்லா இறப்புமே பெருமைக்குரியதாவதில்லையே.

அம்மாவை நினைத்தால் சிலிர்த்தது. அம்மா அவன் உடல் முழுவதையும் ஆக்கிரமித்திருந்தாள். அம்மா, அம்மா என்று அவன் இதயம் மெல்ல கரைந்து கொண்டிருந்தது. அம்மாதான் அவனை இங்கே அனுப்பி வைத்தாள்.

முத்துக்குமாருக்கு சண்டை பிடிக்காது தான். அர்த்தமற்றதுதான். அதற்காக, கடிக்க வரும் பாம்பைக் கொல்லாமல் விடுவதாவது? அவன் புறப்படும்போது அம்மா தன் கடைசி ஆசையைத் தெரிவித்தாள்.

"முத்து உன்னையும் அனுப்பிட்டு என்னால ரொம்ப நாள் உயிரோடு இருக்க முடியாதுடா. சீக்கிரம் செத்துருவேன். அப்படிப் போய்ட்டா என்னை எரிச்ச சாம்பலை இமயமலைல தூவி விடுடா. பேராசைதான். இருந்தாலும் மனசு ஆசைப்படுது கண்ணு."

ஒத்துக் கொண்டு வந்தான். அம்மா செத்து விட்டாள்.

கீழேயிருந்து கம்பியில்லாத் தகவல் வந்து சேர்ந்தது. அவனால் போக இயலாது. அம்மாவின் அஸ்தியை மட்டும் ஊரில் இருந்து வரவழைத்து மேலே அனுப்புமாறு கேட்டுக் கொண்டான்.

இந்திய ராணுவம் மனிதர்களால் நிறைந்தது. அஸ்தியை தருவித்து அனுப்ப ஒப்புக் கொண்டது. இப்போதோ, இன்னும் கொஞ்ச நேரத்திலோ, இன்றோ, நாளையோ வந்து சேர்ந்து விடும்.

தோள் மீது கை படிந்தது. பல்வீர்தான்.

"என்ன பல்வீர்?"

"நீ கொஞ்சம் ஓய்வெடுத்துக் கொள். நான் கவனித்துக் கொள்கிறேன்."

"வேண்டாம்."

"உன் நிலை எனக்குத் தெரியும் குமார். கொஞ்ச நேரம் ஒதுங்கி உட்கார்ந்து அழு. அப்போதுதான் பாரம் குறையும்."

மறுத்துவிட்டுக் கண்காணிப்பில் ஆழ்ந்தான். அழுவதாவது. அப்பாவை இழந்தபோதும், அண்ணனை இழந்தபோதும் அம்மா பெருமைதானே பட்டாள்? அத்தகைய அம்மாவின் இறப்பும் பெருமைக்குரியதுதானே?

பிர்ர்ர்ரென்று ஒரு பெருமூச்சு ஒலி, சங்கீதமாக முத்துக்குமாரை எட்டியது. அம்மாவின் அஸ்தி வந்து சேர்ந்து விட்டது. உடலில் சிலிர்ப்பு. ஊருக்குப் போய், நீண்ட நாள் கழித்து அம்மாவைப் பார்க்கையில் ஏற்படும் உணர்வு இப்போதும் பிரவாகித்தது. நரம்புகள் புடைத்தன. மயிர்க்கால்கள் விறைத்தன.

அவன் உதவிக்கு அழைக்கும் முன்பாகவே, பல்வீர் வந்து அவன் இடத்தை ஏற்றுக் கொண்டான். முத்துக்குமார் பதுங்கு குழியின் படிகளில் ஏறினான்.

முகப்பில் கோவேறு கழுதை நின்றிருந்தது. அதற்கு அவன் மலையரசி என்று பெயரிட்டிருந்தான்.

மலையரசிதான் கிழிருந்து



சுபா

அவர்களுக்குத் தேவையான நீரையும், மண்ணெண்ணெயையும், உணவுப் பொருட்களையும் சுமந்து வருபவள். மனிதர்கள் ஏறி இறங்க முடியாது. கோவேறு கழுதைகள் பனிப்பிரதேசத்திலேயே உழல்பவை. பழகிய கோவேறு கழுதைகள் ஒவ்வொரு பதுங்கு குழியாகச் சென்றடைந்து சுமந்து செல்லும் பொருட்களை அங்கிருக்கும் ராணுவ வீரர்களிடம் ஒப்படைத்து விட்டுப் பின் கீழே இறங்கும். அவை தேவதூதர்கள். ஊரில் இருந்து கடிதம், வெப்பத்திற்கு மண்ணெண்ணெய், வயிற்றுக்கு உணவு என்று சகலத்தையும் கொண்டு வந்து தருபவை.

இப்போது அம்மாவின் அஸ்தி.

முத்துக்குமார் அஸ்திக் கலசத்தை அவிழ்த்தான். திறந்தான். எலும்புகளும், சாம்பலும். அம்மா!

அஸ்திக்கலசத்தைக் கீழே வைத்துவிட்டு மலையரசியின் கழுத்தை கட்டியணைத்துக் கொண்டான். அவளது நீண்ட முகத்தில் முத்தமிட்டான். மலையரசிக்கு வெட்கம் வந்து விட்டது. அவனிடம் இருந்து விடுபட்டு ஒரு சிறு துள்ளலுடன் ஓடினாள்.

அது நடந்தது.

பாகிஸ்தான் பக்கத்தில் இருந்து குண்டுகள் பாய்ந்து வந்தன. பளிச், பளிச் என்று நெருப்புப் பிழம்புகள் ஒளிர்ந்தன. குண்டுகள் வெடிக்கும் நாராசமான சப்தம் தொடர்ந்தது.

மலையரசி ஒரு தீனமான அலறலை வெளிப்படுத்தி விட்டுச் சாய்ந்தாள். நான்கு கால்களும் விரிந்தன.

முத்துக்குமார் திகைத்தான். என்ன ஒரு கருணையற்ற, அநாகரிகமான, காட்டுமிராண்டித்தனம் இது!

பதுங்குகுழியின் வாசலுக்கு பல்வீர் வந்து பார்த்தான். நிலைமையை உடன் உணர்ந்து கொண்டான்.

கோபத்தில் கிளர்ந்தெழுந்த மொழியில் ஆவேசம் குண்டெனச் சீறிப் பாய்ந்தது.

கோடானுகோடி இந்திய மக்கள், இவர்கள் பாதுகாக்கிறார்கள் என்ற நம்பிக்கையில்தானே பயமற்று இயங்குகிறார்கள். மக்கள் மட்டுமா? மலையரசியும் கூட அவன் பாதுகாப்பு அளிப்பான் என்ற நம்பிக்கையுடன்தானே மேலே வந்திருக்கும்?

நம்பிக்கைத் துரோகம் செய்துவிட்ட ஒரு குற்ற உணர்வு தலைதூக்கியது. இதயத்தில் எரிமலை வெடித்தது. ஆவேச லாவா பொங்கி வழிந்தது. பல்வீரை ஒதுக்கித் தள்ளிவிட்டு பதுங்கு குழியில் இறங்கினான்.

துப்பாக்கி முனையை நெருப்புப் பிழம்புகள் ஒளிர்ந்த இடம் நோக்கித் திருப்பி இலக்காக அமைத்து இயக்கினான்.

டட், டட், டட், டட், டட், டட், டட்.

சண்டை பிடிக்காதுதான். வன்முறையில் விருப்பமில்லைதான். மூட்டைப் பூச்சிகளை நசுக்காதவன்தான். ஆடு, கோழிகளை அடிக்காதவன்தான்... ஆனால்... ஆனால்...

எல்லாம் முடிந்து போனது. எதிர்ப் பக்கத்தில் இருந்து பதில் இல்லை. மயான அமைதி. முத்துக்குமாருக்குத் திருப்தியாக இருந்தது. எரிமலை அடங்கி இருந்தது. தான் இருந்த இடத்தை விட்டு விலகிப் படிகள் ஏறி மேலே வந்தான்.

பல்வீர் அவனைப் பார்த்துச் சிரித்தான்.

"மலையரசி தப்பித்து விட்டாள். குண்டு வயிற்றில் வெளியிலேயே இருந்தது. எடுத்து விட்டேன். மருந்து வைத்துக் கட்டியிருக்கிறேன். ஆயுள் கெட்டி. பிழைத்து விடுவாள்."

முத்துக்குமார் மலையரசியைப் பார்த்தான். எழுந்து நின்றிருந்தாள்.

'பிர்ர்ர்ர்' என்று ஒரு ஆனந்தப் பெருமூச்சை வெளிப்படுத்தினாள். லேசான நடனத்துடன் மலையிறங்கத் தொடங்கினாள்.

முத்துக்குமார் அம்மாவின் அஸ்திக் கலசத்தைக் கையில் ஏந்தினான். ●



"அந்த பாங்க் மானேஜர் சம்திங் வாங்கறதுல கில்லாடியா இருப்பார் போலிருக்கு."

"எப்படிச் சொல்றீங்க?"

"டிபாசிட் போட வர்றவங்களோட முகம் கொடுத்துக்கூட பேசாதவர், லோன் வாங்க வர்றவங்களை உட்காரவச்சு உபசரிக்கிறாரே!"

– சீர்காழி வி. ரேவதி

# என்னுடைய யூஎஸ் 64 சிறந்த முதலீடா?



அதன் விசேஷ ஜூலை ஆஃபரை மற்றும் வரிவிலக்குள்ள வருமானத்தைக் கருதினால்,

# நிச்சயமாக. US 64

**விசேஷ ஜூலை ஆஃபர்**

**ரூ. 13.50**

வரிவிலக்குள்ள **13.5%** வருமானம்.

யூஎஸ் 64 தன் முதலீட்டாளர்களுக்கு முறையான வருவாய் விநியோகத்தை, சலுகையான விலையில் ரைட்ஸ் உரிமையை, முன்னுரிமையுடன் கூடிய ஆஃபர்களை மற்றும் ஒரு போனஸ் வழங்கீட்டை அளித்து பெருமைப்படுத்தியதோடல்லாமல் கூடவே ரொக்கமாக்கும் வசதியையும், பாதுகாப்பையும் வழங்கியுள்ளது. இந்த ஆண்டு யூஎஸ் 64 ஒரு வரிவிலக்குள்ள 13.5% வருவாய் விநியோகத்தை அறிவித்துள்ளது. யூஎஸ் 64 முதலீட்டிலிருந்து பெறப்படும் வருவாய் இப்பொழுது முழுமையாக வரிவிலக்குப் பெறுவதால், இதற்கு மூலாதார வரிக்கழிப்பு கிடையாது. இப்பொழுது நாங்கள் வழங்கும் விசேஷ ஜூலை விலையில் யூனிட்களை வாங்கி புதிய முதலீட்டாளர்கள் 2 கோடி திருப்தியடைந்த முதலீட்டாளர்கள் குடும்பத்தில் சேரலாம். மேற்கொண்டு விவரங்களுக்கு தயவு செய்து அருகமைந்த யூ டி ஐ கிளையை முக்கிய பிரதிநிதியை அல்லது முகவரை அணுகவும்.

**2 கோடிக்கு மேலான முதலீட்டாளர்களின் நம்பிக்கையைப் பெற்றது**




## யூனிட் ட்ரஸ்ட் ஆஃப் இந்தியா

**மண்டல அலுவலகம்:** 29 இராஜாஜி சாலை, சென்னை 600001. போன் : 5210335. 5210347. **கிளை அலுவலகங்கள் :**
**கோயம்புத்தூர்** போன் : 214973. **சென்னை** போன் : 5210335, 5210347 / **மதுரை** போன்: 738185 **திருச்சி** போன் : 760060

SAATCHI & SAATCHI - 117/99 C TAM C

# பணம், பொய், குற்றம்!

1

"கலியுகத் தெய்வமே, கந்தனுக்கு மூத்தோனே!"

கந்தகுரு கவசம் காதில் விழ சத்யா கண்விழித்தான். கற்பகம் பூஜை செய்து கொண்டிருந்தாள். க்ரிப்பில் குழந்தை தூங்கிக் கொண்டிருந்தாள். சத்யாவிற்கு இன்னும் கொஞ்ச நேரம் தூங்க வேண்டும் போலிருந்தது. மணி பார்த்தான். ஏழரையாகியிருந்தது. இப்போது எழுந்தால்தான் ஆபீஸ் போகச் சரியாயிருக்கும். எழுந்து க்ரிப்பில் தூங்கிக் கொண்டிருந்த குழந்தைக்கு ஒரு முத்தம் கொடுத்தான்.

"தூங்கிக் கொண்டிருக்கிற குழந்தைக்கு முத்தம் கொடுக்கக் கூடாது!"

கற்பகத்தின் குரல் கேட்டது. பாத்ரூம் போனான். குளித்து விட்டு வெளியே வந்தபோது, கற்பகம் பூஜையை முடித்திருந்தாள்.

"கண்டா வந்த பிறகும் கடைசி சோமவாரத்திற்கு பூஜை பண்ணுபவள் நீயாகத் தானிருப்பாய்!" என்று சத்யா சொல்லிச் சிரித்தான்.

டொரான்டோ நகரின் மேற்குப் பகுதியில் அந்த உயர்ந்த கட்டடம் நின்று கொண்டிருந்தது. அதன் பதினெட்டாவது மாடியில் ஒரு பிளாட்டில் கற்பகம் கொடுத்த டீயை சத்யா வாங்கிக் கொண்டு பால்கனிக்கு வந்தான். சில்லென்ற காற்று முகத்திலடித்தது. டொரான்டோவின் அழகான அக்டோபரின் முதல் வாரமது. நகரம் இலையுதிர் காலத்திற்கு மாறிக் கொண்டிருந்தது. பக்கத்தில் ஓடும் ஓடையினருகில் வளர்ந்திருந்த மரங்களைப் பார்த்தான். இலைகளின் நிறங்கள் மாறியிருந்தன. எல்லா இலைகளும் பழுத்துப் போய் உதிர்வதற்குத் தயாராகியிருந்தன. ஒவ்வொரு மரமும் வெவ்வேறு நிறத்தில் காட்சியளித்தது.

"என்னவொரு அழகு! பார்த்தியா?"

"உயரத்திலிருந்து பார்க்க அழகாயிருக்கும்."

"இதென்ன உயரம்! யு.எஸ்.ல ஸ்மோக்கி மவுண்டன்ஸ்னு ஒரு இடம். இரண்டு வருஷத்துக்கு முன்னால போயிருந்தேன்."

"போதும்! பல தடவை சொல்லிட்டிங்க."

"உண்மையில அப்படியொரு அழகு. அங்கு அடர்ந்த மரங்கள். நம்மை ரோப் காரில் கொண்டு போவார்கள். கீழே பார்த்தால் வாளி வாளியாகப் பெயின்டை ஊற்றியது போலிருக்கும். அப்படியொரு விதவிதமான வண்ணக் கலவையில் மரங்களிருக்கும். நீ போனதில்லையா?"

"நல்ல கேள்வி. நீங்கயில்லாமல் நான் பக்கத்திலிருக்கிற 'ஸ்கொயர்-ஒன்' கூடப் போனதில்லை.

"நீ எப்பப் பார்த்தாலும் என் முதுகுக்குப் பின்னால ஒளிஞ்சுகிட்டேயிருக்கிற. அதுக்கு நான் என்ன செய்ய முடியும்? கவலைப் படாதே! வேணுமென்றால் ஆபிஸுக்கு மூணு நாள் லீவு போட்டுவிட்டு ஸ்மோக்கி மவுண்டன்ஸ் ட்ரிப் அடிக்கலாமா?"

"அது சரி! இந்த 'விசா'பில் (கிரெடிட் கார்டு) நேத்து வந்தது. பார்த்திங்களா?" என்று கேட்டபடி விசா பில்லைக் கொடுத்தான்.

சத்யா விசா பில்லை வாங்கிப் பார்த்தான். நாலாயிரத்து நானூற்றி சொச்சம் டாலர்ஸ் கட்ட வேண்டும் என்று காட்டியது. இரண்டு, மூன்று மாதங்களாகச் சரியாகப் பணம் கட்டவில்லை. ஊரிலிருந்து தங்கை பணம் கேட்டு எழுதியிருந்தாள். அனுப்பினான். மான்ட்ரியலுக்கும், நியூயார்கிற்கும் ஜாலியாக ட்ரிப் அடித்தான். விசா பில்லை ஒழுங்காகக் கட்டவில்லை. பில் எகிறிவிட்டது. மாதாமாதம் ஒழுங்காகக் கட்டினால் பிழைத்தோம். இல்லாவிடில்

பிருதிவிராஜ்

கிரெடிட் கார்ட் என்பது நம்மூர் கந்து வட்டி தான். தின வட்டி போட்டு ரத்தத்தை உறிஞ்சி விடுவார்கள். எனவே சத்யா கொஞ்சம் யோசிக்க ஆரம்பித்தான்.

"ஆபீஸ்ல ஓவர் டைம் கிடைத்தால் ரொம்ப வசதி. எரிக்கிடம் பேசிப் பார்க்கிறேன். ஓவர்டைம் வேலை கொடுத்தானென்றால், விசா பேலன்ஸை நல்ல கன்ட்ரோலுக்கு கொண்டு வந்து விடலாம். பார்ப்போம்!" என்றான் சத்யா.

ஆபீஸுக்குப் போனபோது, கார் பார்க்கிங் இடத்தில் ஒரு காரைக் கூட காணோம். யாரும் வந்திருக்கவில்லை. எப்போதும் யாராவது வந்திருப்பார்கள். ஒருத்தரையும் காணோம். காரை நிறுத்திவிட்டு இறங்கினான். படு காஷுவலாக சாவியை வைத்து ஆபீஸ் கதவைத் திறந்துவிட்டு உள்ளே போனான். டேபிளுக்குப் போய் கம்ப்யூட்டரை ஆன் பண்ணினான். கற்பகம் கொடுத்து விட்டிருந்த சான்ட்விச்சை டிராயரில் வைத்தான்.

செக்யூரிட்டி அலாரம் அலறியது. "பூம்... பூம்" வென்று ஒரே சத்தம். செக்யூரிட்டி அலாரத்தை நிறுத்தவில்லையென்று ஞாபகம் வந்தது.

இவனுடைய கம்பெனி தனி பில்டிங்காக இருந்தது. ஆகையினால் செக்யூரிட்டி அலாரம் உண்டு. ஒவ்வொரு ஊழியருக்கும் ஒரு நம்பருண்டு. அந்த நம்பரை பன்ச் செய்ய வேண்டும். ஆபீஸுக்கு யார் முதலில் வரு



கிறார்களோ அல்லது வழக்கமான நேரத்திற்கு மாறுபட்டு வருபவர்களோ அதைப் பன்ச் பண்ண வேண்டும். இவனுக்கும் ஒரு நம்பர் கொடுத்திருந்தார்கள். அது மறந்து விட்டது. பொதுவாக பேங்க் கார்டு நம்பர், சூட்கேஸ் நம்பர்களெல்லாம் கல்யாண நாள், பிறந்த நாளென்று வைத்திருந்தான். ஞாபகம் வைத்திருப்பது சுலபம். இது ஆபீஸ் கொடுத்த நம்பர். மனத்தில் வைத்திருந்தான். அதைத் தேடிக் கொண்டிருந்தான். 'பூம்... பூம்' என்கிற சத்தம் நிற்கவில்லை. ஊரையே கூட்டுகிற சத்தம். இன்னும் பத்து நிமிடத்தில் போலீஸ் வந்து விடும். சத்யா பதற்றமடைய ஆரம்பித்தான். பேப்பர்களை எடுத்து இறைத்தபடி தேடினான். நல்ல வேளை! தேடிக் கொண்டிருந்த சீட்டு கிடைத்து விட்டது. எடுத்துக் கொண்டு ஓடினான். செக்யூரிட்டி அலார்மில் நம்பரை பன்ச் பண்ணினான். சத்தம் நின்றுவிட்டது. அப்பாடா வென்றிருந்தது.

போன் அடித்தது. எடுத்தான். செக்யூரிட்டி ஆபீஸிலிருந்து கூப்பிட்டார்கள். விவரம் சொன்னான். சிரித்துவிட்டு, "கீப் தி நம்பர் ஹேண்டி!" என்று சொல்லிவிட்டு வைத்து விட்டார்கள். சத்யா அந்த நம்பரிலிருந்த சீட்டை கண்ணில் படுகிற மாதிரி, தன்னுடைய கம்ப்யூட்டருக்கு நேர் மேலாகக் குத்தி வைத்தான்.

**ம**தியம் கற்பகம் கொடுத்த சான்ட்விச்சை சாப்பிட்டுக் கொண்டே, இன்டர்நெட்டில் தமிழ்ப் பத்திரிகைகளை மேய்ந்தான். அப்போது ஜோ வந்து தட்டினான்.

"சத்யா மீட்டிங் இருக்குது!"

எல்லோரும் கான்ப்ரென்ஸ் ஹாலிற்குப் போனார்கள். மேடையின் மத்தியில் ஸ்பீக்கர் ஃபோன் வைக்கப்பட்டது. எல்லா புரோக்ராமர்களும் சுற்றி உட்கார்ந்தார்கள்.

"ஹலோ! எரிக் பேசறேன். யாரெல்லாம் இருக்கிறீர்கள்?"

"ஜோ, எட்வர்ட், சத்யா..." என்று பட்டியல் படிக்கப்பட்டது. உடனே எரிக் பேச ஆரம்பித்தான். எரிக் இந்தக் கம்பெனியின் துணைத் தலைவன். கம்பெனியின் ஆணிவேர். பத்து வருடங்களுக்கு முன்னால் மிகச் சின்னதாய் இந்தக் கம்பெனி ஆரம்பிக்கப் பட்ட போது, இந்தக் கம்பெனியில் சேர்ந்தவன். கம்பெனியுடன் வளர்ந்து விட்டான். இவர்கள் கம்பெனிக்கு அமெரிக்காவிலுள்ள புளோரிடா ஸ்டேட்டில் ஒரு பெரிய கான்ட்ராக்ட் கிடைத்திருந்தது. அந்தக் கம்பெனியின் ப்ராஜெக்ட்டில் இவர்களெல்லாம் வேலை பார்த்துக் கொண்டிருந்தார்கள். எரிக் புளோரிடாவிலிருந்தான். அங்கிருந்தபடியே ஆணை பிறப்பித்துக் கொண்டிருந்தான். வாரத்திற்கொரு முறை டெலிபோனில் கூப்பிட்டுப் பேசுவான். அது போல் இப்போதும் பேசிக் கொண்டிருந்தான். ஒவ்வொருவருக்கு முள்ள பொறுப்பான பகுதிகளைப் பற்றிக் கேட்டான்.

"சத்யா! கம்யூனிகேஷன் ரொட்டீன் எந்த அளவில இருக்குது?"

சத்யா பதில் சொன்னான்.

"ஜோ! ஷெட்யூல் ரொட்டீன்?" ஜோ பதில் சொன்னான்.

"அது சரி! சூப்பர்வைசர் ரொட்டீன்ஸ்?" என்று கேட்க, யாருமே பதில் சொல்லவில்லை. அதைப் பார்த்துக் கொண்டிருந்த சைனாக்காரன், கம்பெனியை விட்டு ஓடிப் போய் விட்டான். யாரும் பொறுப்பெடுக்கத் தயாராயில்லை.

"யாராவது ஒருவர் பொறுப்பெடுக்க வேண்டும்!" என்றான் எரிக்.

விசா பில் கவலையிலிருந்த சத்யா, இது தான் சமயமென்று உள்ளே நுழைந்தான்.

"நான் பொறுப்பெடுக்க முடியும். ஆனால் வழக்கமான ஆபீஸ் நேரத்தின் போது, என்னுடைய வேலையே சரியாயிருக்கும். வேணுமெனில், ஓவர் டைம் பண்ணுகிறேன்."

எதிர்ப் பக்கம் சிறிது நேரம் மௌனம்.

"ஓகே. எவ்வளவு நாளாகும்?"

"சொல்ல முடியாது. இனிமேல்தான் எல்லா புரோக்ராம்களையும் ஸ்டடி பண்ண வேண்டும்."

"ஓகே. நான் அக்கவுண்டன்டிடம் பேசுகிறேன்!" என்றான் எரிக். பிறகு சில வழக்கமான கேள்விகளுடன் பேச்சு முடிவடைந்தது.

சத்யா மனதிற்குள் விசிலடித்தான். ஓவர் டைம் கிடைத்தது சந்தோஷமாயிருந்தது.



**எட்டடியில் மலை!**

உலகிலேயே மிகவும் சமவெளியாக அமைந்துள்ள நாடு மாலத்தீவுதான். இந்த நாட்டிலுள்ள அதிகபட்ச உயரமான மலை 2.4 மீட்டர் மட்டுமே!

ஆதாரம் : 1001 வியக்க வைக்கும் அதிசய உண்மைகள்

தகவல் : நெ. இராமன்

விசா பாக்கியை சுலபமாகக் குறைத்துவிட முடியும். சைனாக்காரன் எழுதிய எல்லாப் புரோக்ராமும் இவனுக்குத் தெரியும். அதிலுள்ள பிரச்னைகளும் தெரியும். அந்த சைனாக்காரன் பாதிக்கு மேல் இவனிடம் கேட்டுத்தான் எழுதினான். அதனால் அதிலுள்ள பிரச்னைகளைத் தீர்ப்பது எளிது. ஆனால் கம்பெனியில் சொல்லவில்லை. அப்பத்தான் நிறைய ஓவர் டைம் எழுத முடியும்.

அடுத்த பத்தாவது நிமிடம் அக்கவுன்டன்ட் கூப்பிட்டார்.

"சத்யா! இதுதான் ஓவர் டைம் ஷீட்ஸ். நீங்க எப்போது வருகிறீர்களோ, அப்போது இதை நிரப்பிக் கொடுங்க. ஓவர் டைம் செக் தனியாகத் தரப்படும். நீங்க வழக்கத்திற்கு மாறுபட்ட நேரங்களில் வந்து வேலை பார்க்கும் போது, செக்யூரிட்டி ஆபிஸிற்குச் சொல்லி விடவும்!'' என்று சொல்லவிட்டு, ஓவர்டைம் ஷீட்களைக் கொடுத்துவிட்டுப் போனார்.

தோன்றிய போதெல்லாம் ஆபீஸ் போனான். சனி, ஞாயிறு என்று பார்க்கவில்லை. சும்மா போனான். செக்யூரிட்டி ஆபிஸிற்கு கூப்பிட்டுச் சொல்லுவான். கொஞ்ச நேரம் வேலை செய்வான். சீக்கிரமே பிரச்னை தீர்ந்துவிடும். பிறகு கொஞ்ச நேரம் இன்டர்நெட்டில் மேய்ந்து விட்டு கிளம்பி விடுவான். ஓவர் டைம் ஷீட்டில் மாலை ஐந்து மணி வரை வேலை பார்த்ததாக எழுதிவிடுவான். வாரா வாரம் சம்பளத்துடன், ஓவர் டைமிற்கான பணமும் கிடைத்தது. மூன்று மாதத்தில் விசா பாக்கியும் வெகுவாகக் குறைந்தது. இவர்கள் வேலை பார்த்துக் கொண்டிருந்த புராஜெக்ட்டும் ஏறக்குறைய முடிகிற நிலைமைக்கு வந்து விட்டது. எல்லாம் நன்றாகத்தான் போய்க் கொண்டிருந்தது.

ஒரு நாள் பாஸ் எரிக் புளோரிடாவிலிருந்து திரும்பி வந்தான். உடனே எல்லோரையும் மீட்டிங் ஹாலிற்கு கூப்பிட்டான். பேச ஆரம்பித்தான்.

''அநேகமாக நம்முடைய சிஸ்டத்தை ஏற்றுக் கொண்டு விட்டார்கள். மிச்சமிருக்கிற வேலைகளை சீக்கிரமாக முடித்து விடுங்கள். ஆனால் நமக்கும், கஸ்டமருக்கும் மிகப் பெரிய பிரச்னை வரும் போலிருக்கிறது. சிஸ்டத்தை யார் பராமரிப்பது என்பதுதான் பிரச்னை. நாம் டொரான்டோவில் உட்கார்ந்து கொண்டு இருபத்தி நாலு மணி நேரமும் சேவை செய்வோமென்று சொன்னால் நம்ப மறுக்கிறார்கள். நம்முடைய புரொக்ராம்களை ஒரு கணிசமான தொகைக்குக் கேட்கிறார்கள். 'கொடுத்து விட்டால், நாங்களே இரண்டு, மூன்று புரொக்ராமர்களை வைத்துக் கொண்டு பிரச்னைகளை சமாளித்துக் கொள்வோம். எல்லாவற்றிற்கும் உங்களை எதிர்பார்க்க வேண்டாம்' என்பது அவர்கள் வாதம். நான் ஒத்துக் கொள்ளவில்லை. அதைக் கொடுத்து விட்டால், நமக்கு எந்தப் பிடிமானமும் இருக்காது. அதை நான் விரும்பவில்லை. மேலும் அவங்க வேறு யாருக்கும் விற்றாலோ அல்லது கொஞ்சம் மாற்றி வேற பெயரில் வெளியிட்டாலோ நம்மால் எதுவும் பண்ண முடியாது. இதுதான் பிரச்னை. உங்களுக்குத் தெரிந்திருக்க வேண்டும் என்பதால் சொல்லுகிறேன்!'' என்று எரிக் நீண்ட லெக்சர் கொடுத்தான்.

''இந்தாளுக்கு கஸ்டமரிடமுள்ள பிரச்னையை நம்ம கிட்டச் சொல்லி ஏன் கழுத்தை அறுக்கிறான்? நம்ம பே-செக் ஒழுங்காக வருமில்லியா! பிறகென்ன கவலை?'' என்று கமென்ட் அடித்தான் சத்யா. பிரச்னையின் ஆழத்தை அப்போது அவன் உணரவில்லை.

இரண்டு நாள் கழித்து, இரவு ஏழு மணிக்கு ஆபீஸ் போனான். எட்டு மணிக்கெல்லாம் வீட்டிற்குத் திரும்பி விட்டான். ஓவர்டைம் ஷீட்டில் இரவு ஒன்பது மணி வரையிருந்ததாக எழுதி வைத்துவிட்டு வந்தான். வீட்டில் நிம்மதியாகத் தூங்கினான்.

மறுநாள் காலை ஆபீஸ் போனபோது சத்யா போலீஸாரால் கைது செய்யப்பட்டான்.

(தொடரும்)



''நம்ம மந்திரி கொஞ்சம் அவசரப் பட்டுட்டாரு!''

''எப்படி?''

''கார்கில் நிதிக்கு, தன்னோட ஒரு மாத சம்பளத்தைத் தர்றேன்னு சொல்றதுக்குப் பதிலா, ஒரு மாத லஞ்சம்னு சொல்லிட்டாரு!''

– பாம்பன் செ. சல்மான்



# கா

பிரதமர் வாஜ்பேயும் நவாஸ் ஷெரீஃபும் சிரித்தபடி லாகூரில் பஸ்ஸில் இருந்து இறங்கிய அன்று-பாகிஸ்தான் ரெஜிமெண்ட் 13ல் பணிபுரியும் துணை மேஜர் சல்லாவுத்தீனுக்கு ஒரு ரகசிய சேதி வந்தது. எல்லைக் கோட்டுக்கு அருகில் இருக்கும் முசாபராபாத்தில் கூலிப் படைகள் தருவிக்கப்பட்டுவிட்டன. இயந்திரத் துப்பாக்கிகள் மற்றும் வயர்லெஸ் இயக்கும் விதங்களை அவர்களுக்குக் கற்பிக்க உடனே போக வேண்டும். சல்லாவுத்தீனுக்கு ஒரு பாட்டில் ஆப்கானிய ரம் அடித்தது போல விறுவிறுப்பாக இருந்தது. அவனுக்கும் அவன் ரெஜிமெண்டுக்கும் எத்தனை பெரிய வாய்ப்பு! இந்திய எல்லைக்குள் ஊடுருவல்! சிற்றெறும்புகளைப் போல, மெள்ள மெள்ள முஜாஹிதின் கூலிப்படைகளும், பாகிஸ்தான் ஜவான்களும் சாரி சாரியாக இந்தியாவுக்குள்! இந்தப் புனித ஜெகாத்தில், சிற்றெறும்புக் கூட்டம் யானையின் காதுக்குள் யாரும் அறியாது புகப் போகிறது.

சல்லாவுத்தீன் லாகூரில் பிறந்தபோது, பால் மற்றும் ரொட்டியுடன் மூன்றாவதாக அவனுக்கு ஊட்டப்பட்டது இந்தியத் துவேஷம். நாயையும் ஹிந்துஸ்தானியையும் ஒன்றாய்ப் பார்த்தால், ஹிந்துஸ்தானி மேல் முதலில் கல்லெறி என்று அவன் தாத்தா மூத்த சல்லாவுத்தீன் சொல்லுவார். இது அருமையான சந்தர்ப்பம். வாய்ப்புக் கிடைத்தால், ஒரு இந்திய ராணுவ வீரனை யாவது... சல்லாவுத்தீனுக்கு ரொம்ப சந்தோஷமாக இருந்தது.

இந்திய ராணுவத்தின் நாகா ரெஜிமெண்டைச் சேர்ந்த கேப்டன் சேதுராமனுக்கும் அன்றுதான் தலைமையகத்திலிருந்து கடிதம் வந்தது. மே மாதம் 15 ஆம் தேதியிலிருந்து ஒரு மாதம் அவனுக்கு விடுப்பு வழங்கப்பட்டிருந்தது. 'அம்மாடி' என்று வாய் நிறையத் தமிழில் சொல்லிக் கொண்டான் சேது. உலகக் கோப்பை கிரிக்கெட் பார்க்கலாம். மனைவி சியாமளாவையும், மூன்று வயது தீபிகாவையும் ஆசை தீரக் கொஞ்சலாம். பருப்பு உசிலியும், மோர்க் குழம்புமாய் அம்மா சமைத்துப் போடுகிற ருசியை நாக்கில் தங்க வைக்கலாம். தாம்பரம் வீட்டுக்கு அவர்கள் குடிபோன

நாலே நாட்களில் இவன் கிளம்பும்படி ஆகி விட்டது. ஸ்ரீநகர் ஊடுருவல் தடுப்பு முகாமில் உடனே பணியாற்ற அழைப்பு வந்து விட்டது. ஒரு வருஷம் அங்கே பணியாற்றினால் போதும். அமைதிப் பகுதிக்கு மாற்றல் கேட்டு, சென்னைக்கே வரவும் வாய்ப்பு உண்டு. ஆச்சு, ஓடின ஓட்டமாய் ஒரு வருஷம் முடிந்தது. ஆனால் தாம்பரம் வீடு எப்படி இருக்கும் என்றே ஒரு வருஷத்தில் மறந்து விட்டது. குழந்தை எங்கே நடப்பாள், சியாமளா எங்கே பேப்பர் படிப்பாள், அம்மாவின் பூஜையில் இருக்கும் சாலிக்கிராமம் எங்கே வைக்கப்பட்டிருக்கும் எதுவும் தெரியாது போனது. இப்போது ஜாலி. விடுமுறை ஒரு மாதம்.

ஏப்ரல் மாதம் இந்திய அரசாங்கத்தின் நிலையான அரசு பற்றிய கனவும், மே மாதம் சேதுவின் விடுமுறை பற்றிய கனவும் கலைந்து போனது. தீபிகாவை மடியில் வைத்துக் கொண்டு கிரிக்கெட் மாட்ச் பார்ப்பதற்கு பதிலாக, கக்ஸார் பகுதியில் 12,000 அடி உயரத்தில், முதுகில் இருபது கிலோ சுமையுடனும் அவன் ரெஜிமெண்டின் ஆறு பேருடனும் பனிமேல் தவழ்ந்து தவழ்ந்து முன்னேறிக் கொண்டிருந்தான் சேது.

வெல்லமும், பருப்பும், மத்தாளும், துப்பாக்கியும் முதுகில் சுமை. மிகக் கொஞ்சமே சாப்பிடவும், அருந்தவும் வேண்டும். அப்போதுதான் இயற்கையின் அழைப்பு அடிக்கடி நேராது. மேலும் அடுத்த ரேஷன் எப்போது வருமோ? அதிலே பூரியும் உருளைக் கிழங்கும் வந்தால் கல்யாண சமையல் சாதம்! ஆனால் சேதுவுக்குத் தெரியும்- ரேஷன் வருவதை விடவும் அவர்கள் எதிர்பார்ப்பது, கோவேறு கழுதைகளின் வரவைத்தான். அவ்வளவு உயர்ந்த பகுதிகளில், மெயில் வேன் வராது என்பதால் கழுதைகளின் மேல் தான் வீட்டிலிருந்து வரும் கடிதங்களை அனுப்புவார்கள். இன்று பூரி வராவிட்டாலும் பரவாயில்லை. சியாமளாவிடமிருந்து கடிதம் வந்தால் போதும். கூட இருக்கும் மணீந்தர் சிங் வெறும் இருபத்து மூணு வயசுப் பிஞ்சு. அவனும் கூட தன் அம்மாவின் கடிதத்திற்காக கழுதைகளைத் தான் எதிர்பார்த்திருக்கிறான்.

'மணீந்தர், இன்று கடிதம் நிச்சயம் வரும். கவலைப்படாதே.'

'ஆமாம் சாப். ஆனால் காத்திருப்பது கஷ்டமாக இருக்கிறது. உண்மைதான். உண்டு, இல்லை என்று தெரிந்தால் பரவாயில்லை. போன கடிதத்தில் சியாமளா காத்திருத்தல் பற்றி கவிதை எழுதி அனுப்புங்கள்' என்று எழுதியிருந்தாள். அவர்களுக்குள் அது ஒரு விளையாட்டு. அவள் தலைப்புக் கொடுப்பாள். அடுத்த கடிதத்தில் இவன் கவிதை தரவேண்டும். கல்யாணம் ஆன புதிதில் சியாமளாவுக்கு ரொம்ப ஆச்சரியம்! துப்பாக்கி பிடிக்கும் கை கவிதை எழுதுமா? ஆர்மி கேம்ப் இரவுகளில், ஒரு கும்பல் பஞ்சாபி நாட்டுப் பாடல்களைப் பாடும். குடியும் சிகரெட்டுமாய் ஒரு கும்பல் கூத்தாடும். இவன் கவிதை எழுதுவான். போன முறை வீட்டில் பூத்த போகன் வில்லா பற்றி கவிதை கேட்டாள்.

# காத்திருப்பு

பாரதி பாஸ்கர்

மலர் வனத்தில் தைரியமாய்
மதுவிலக்குச் செய்த மலர்
மலர்கின்ற அவசரத்தில்
மணம் வீச மறந்த மலர்

என்று எழுதியிருந்தான். சியாமளாவுக்கு இது பிடித்ததா என்று தெரியவில்லை. 'காத்திருத்தல்' பற்றி இன்னும் கவிதை வரவில்லை. எதிரி தென்படுகிறானா என்று மணிக்கணக்காய் படுத்தவாறு காத்துக் கொண்டிருக்கும் தங்களைப் பற்றி எழுதுவதா? வாசல் மணியோ, டெலிபோன் மணியோ அடித்

கார்கில் கதை — 3

தாலே பயத்தோடு செய்திக்குக் காத்திருக்கும் தங்கள் வீட்டினர் பற்றி எழுதுவதா? 90 கோடி இந்தியர்கள்-கீழே, அவர்களின் பங்களாக்கள், வீடுகள், குடிசைகள் மற்றும் பிளாட்பாரங் களின் பத்திரத்தில் தூங்கிக் கொண்டிருக்க பனி மலைகளின் பயங்கர மௌனத்தில் ஆறு பேர் நள்ளிரவில் விழித்திருந்தனர். அந்த மைனஸ் நாற்பது குளிரில், வீட்டின் சூடான சமையல் அறையில் அம்மா செய்து கொடுக் கும் கரகர வெங்காய அடையும், தீபிகா குட்டி தூங்கும் போது அதன் இளஞ்சிவப் பான பட்டு முயல் பாதத்தைத் தொட்டால் அது சிலிர்த்துக் கொள்வதையும் நினைத்துக் கொண்டான். இன்றும் கழுதைகள் வர வில்லை. வரவில்லையா அல்லது முதுகில் சுமந்து கொண்டிருக்கும் கடிதங்களுடன் சிதறிப் போயினவா தெரியவில்லை.

அடுத்த மூன்று நாளில் அந்த ஆறு பேரும், பாகிஸ்தான் துணை மேஜர் சல் லாவுதீனின் ரெஜிமெண்டால் சிறை பிடிக் கப்பட்டனர். கார்கில் சண்டையின் முதல் கட்டத்தில் இருந்த அந்த ஆறு பேரும் கீழே துணைப் படைகளோடு தொடர்பு அறுந்து போய், எல்லைக் கோட்டுக்கு அருகில் மாட் டிக் கொண்டனர். முதுகு மூட்டைகள் பிடுங் கப்பட்டு, கைகள் பின்னால் கட்டப்பட்டு சல் லாவுத்தீனின் முன்பு வரிசையாக நிறுத்தப் பட்டனர்.

சல்லாவுத்தீனுக்கு மீண்டும் விறுவிறுப்பு தலைக்கு ஏறியது. இந்திய வீரர்கள்...

"இந்திய நாய்களே, எப்படிச் சாக விருப் பம்?"

"உன்னைக் கொன்றுவிட்டு சாக விருப் பம்" என்று வீரம் கொப்பளிக்க மணீந்தர் சொன்னவுடன், சல்லாவுத்தீனின் வெறி ஆரம்பித்து விட்டது. கண்கள் பிடுங்கப் பட்டு, கைவிரல்கள் முறிக்கப்பட்டு, மார்பில் கடைசிக் குண்டு மோதுமுன் 'ஜெய்ஹிந்த்' என்று அலறிவிட்டுத்தான் மணீந்தர் கீழே விழுந்தான். பார்த்துக் கொண்டிருந்த சேதுவின் தொண்டையிலிருந்து வெறிக் கூச்சல் எழுந்து, பனி மலையை கிடுகிடுக்க வைத்தது.

"முட்டாளே, நீ வீரனா? போர்க் கைதி களை நடத்தும் முறை பற்றிய சர்வதேச ஒப் பந்தங்களை உனக்குக் கற்பிக்கவில்லையா உன் ரௌடி நாட்டில்?" சேது அலறினான்.

"நம் பேச்சில் சிறந்த மேஜரின் நாக்கைத் துண்டித்து, பரிசாக எதிரிக்கு அனுப்புவோம்" என்றான் சல்லாவுத்தீன். கத்தி கொண்டு வர ஆள் போயிற்று.

சல்லாவுத்தீனின் கண்களின் பளபளப் பைப் பார்த்தான் சேது. இது இரு நாடுகள் போடும் சண்டையல்ல. வேறு வெறி. எங்கே இதன் மூலம்? யார் இதை வளர்ப்பது? இவ னும் நானும் சக மனிதன் என்பதை அறி யாத இவனது மிருக உணர்ச்சிக்கு யார் நீர் தெளிப்பது. கோபம் பொங்கியது சேதுவுக்கு. கத்தி வரக் காத்திருக்கிறோம் என்று சேது நினைத்துக் கொண்டான். சட்டென்று சியா மளா கேட்ட காத்திருத்தல் பற்றிய கவிதை வந்தது.

காத்துக் கிடப்பதில் இன்பம் உண்டாம்
கவிஞன் வார்த்தையில் பொய்யே
பிரதானம்.
வெற்றியா தோல்வியா? உண்டா
இல்லையா?
இன்றே இப்போது தெரிதல் இன்பம்.
வாழ்வுக்கும் சாவுக்கும் இடையில் கத்தி
வரக் காத்திருக்கையில்
இன்பமும் இல்லை; துன்பமும் இல்லை.
மனசெங்கும் வெறுமை மட்டும்
பொங்கும்.
சொல்லாத கவிதையும் காணாத
பிள்ளையும்
அணைக்காத காதலியும் வணங்காத
அம்மாவும் மறந்து போக
ஒரு எண்ணம் மின்னும்:-
நாட்டுக்கான மரணத்துக்குக்
காத்திருத்தல் சிறப்பு.
ஏனெனில் இது நான் வாழ்ந்ததைத்
தெரிவிக்கும் மரணம்!

சியாமளாவுக்கு முதலில் கிடைத்த செய்தி, சேதுராமனுக்கு பரம்வீர் சக்ரா சிபாரிசு செய்யப்படும் என்பதுதான். தன் னைக் கொல்ல எழுந்த எதிரி நாட்டு மேஜர் ஒரு கணம் குடி போதையில் தடுமாற, பயிற்சி பெற்ற கால்களால் அவனை உதைத்துத் தள்ளி, அருகே கிடந்த துப்பாக்கியால் எதிரி கள் ஆறுபேரை சுட்டுத் தூசாக்கி, கூட இருந்த நாலு வீரர்களையும், இறந்த ஜவான் மணீந்தர் சிங்கின் சடலத்தையும் பத்திரமாக எல்லைக் குள் கொண்டு சேர்த்தான் சேது என்ற சேதி பிறகுதான் தெரிந்தது. ஸ்ரீநகர் ஆஸ்பத்திரியில் பதினைந்து நாள் சிகிச்சைக்குப் பிறகு, சென்னை விமான நிலையத்தில் சியாமளா வைப் பார்த்தான் சேது.

''காத்திருத்தல் பற்றி கவிதை ரெடி கண்ணே. அடுத்த டாபிக் என்ன?" என்றான்.

"ஒரே வாரத்தில் திரும்பவும் உங்களை கார்கிலுக்கு துரத்தப் போகிறேன். கவிதை யின் அடுத்த டாபிக் கடிதத்தில் அங்கே வரும்" என்றாள். ●

'ஜெர்மனி இல்லை; விம்பிள்டன் தான் ஸ்டெபியின் தாயகம்' என்று கூறியவர்கள் உண்டு. அந்த அளவுக்கு தமது ஆட்டத்தின் உச்சகட்ட திறமைகளை அங்கு ஸ்டெபி வெளிப்படுத்தியிருக்கிறார். ஏழு முறை விம்பிள்டன் கோப்பையை (தட்டை!) வென்ற அவரே இம்முறையும் அதை தட்டிச் செல்வார் என்று மிகப்பலரும் கருத, லிண்ட்ஸே டேவன்போர்ட் என்ற இளம் புயல் அவரை வீழ்த்தி விட்டு வெற்றிக் கொடியை நாட்டியது! அதுவும் ஒன்னே கால் மணி நேரத்தில் - ஸ்ட்ரெயிட் செட்களில்!

டேவன்போர்ட்டின் அபார வெற்றிகள் குறித்து விளையாட்டு உலகம் மூக்கில் விரலை வைக்கிறது. வெற்றி'கள்'? ஆம். இரட்டையர் ஆட்டத்திலும்

# வியக்க வைத்த வீராங்கனை!

இவரது அணிக்கே வெற்றி. விம்பிள்டன் வெற்றிக்குப் பிறகு பாயிண்ட் கணக்குப்படி முதலிடம் இவருக்கே.

யுஎஸ். ஓப்பன் பந்தயத்தில் வென்றிருக்கிறாரென்றாலும் விம்பிள்டன் வெற்றி, வெறும் கனவாக இருந்து வந்தது இந்த 23 வயது இளம் மங்கைக்கு! 1994, 1998 ஆகிய ஆண்டுகளில் கால் இறுதிச் சுற்று அளவுக்கு மேல் அவரால் உயர முடிந்ததில்லை. இந்த முறை கூட "கால் இறுதிச் சுற்றிலேயே தோற்றுவிடும் வழக்கத்தை மாற்றிவிட முயற்சி செய்யப் போகிறேன். மற்றபடி இறுதிச் சுற்றை அடைவதெல்லாம் நடக்கிற காரியமில்லை" என்று பேட்டியளித்தார். ஆனால் அடைந்ததோடு, வெற்றியும் பெற்று விட்டார்.

விம்பிள்டன் போன்ற கிராண்ட் ஸ்லாம் பந்தயங்களில் வெற்றி பெற்றதும் தமது தாய், தந்தை அல்லது காதலரைக் கட்டிக் கொண்டு மகிழ்ச்சிக் கூச்சலெழுப்புவதுதான் பெரும்பாலான வீராங்கனைகளின் வழக்கம். ஆனால் எந்த உறவினரையும் கூட அழைத்து வரும் வழக்கம் இல்லாததாலோ என்னவோ, தம்மிடம் தோற்ற ஸ்டெபியிடமே ஓடிச் சென்று, அவரைக் கட்டிக் கொண்டு கண்ணீர் உகுத்திருக்கிறார் டேவன்போர்ட்!

மார்ட்டினா ஹிங்சிஸ், செரீனா வில்லியம்ஸ் போன்ற 16, 17 வயதுக் குழந்தைகளோடு ஒப்பிட்டால் டேவன்போர்ட் வளர்ந்தவர்தான்.

"நான் வாங்கிய கோப்பைகளிலேயே இது தான் மிகச் சிறந்தது. இதை வீட்டுக்கு எடுத்துப் போக முடிந்தால் எவ்வளவு நன்றாக இருக்கும்" என்றிருக்கிறார் டேவன்போர்ட். (1884லிருந்து ஒவ்வொரு ஆண்டும் வென்ற விம்பிள்டன் வீராங்கனைகளின் பெயர்கள் பொறிக்கப்பட்ட அந்தத் தட்டை விம்பிள்டன் அமைப்புக்கே திருப்பி அளித்து விட வேண்டும்). அதனாலென்ன ஆறரை லட்சம் டாலர் பரிசுத் தொகை அவருக்கே அவருக்குத்தானே!

— குல்லூ



## டுப்பியின் குடும்பம்

அலமு: அரஸ்

டுப்பி! எழுந்திரு!
மணி ஆறு...

இன்னிக்கு
'லீவ்'தானே...?

சீக்கிரம் எழுந்திரு.
விரிப்பெல்லாம்
மாத்தணும்.

சரி! சரி!

ஞாயித்துக்
கிழமைன்னா
தூங்கணுமா... மத்த
வேலை செய்யலாம்

இன்னும்
பத்து நிமிஷம்,
ப்ளீஸ்!

சீக்கிரம்
வேலையை
முடிச்சுட்டுப்
படுக்கணும்.

சண்டே மட்டும்தான்
மத்தியானம் தூங்க
முடியும்...

சீக்கிரம்
சாப்பிட வா...

Printed and published by K. Rajendran at the Bharathan Press on behalf of Bharathan Publications Private Limited. Editor : Mrs. Seetha Ravi
Address : 47, Jawaharlal Nehru Road, Ekkaduthangal, Chennai - 600 097.
Telephones : Editorial : 2345624; Circulation Manager, Subscription and Advertisement : 2345623; Chief Administrative Officer : 2345622; Fax: 2345621.
Annual Subscription : India : Rs. 250/-; Overseas : Rs. 1900/- (Air Mail)
Half Yearly Subscription : India : Rs. 125/-; Overseas : Rs. 950/- (Air Mail)

